

# என் அமெரிக்கப் பயணம்

பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்



பேராசிரியர் ரெட்டியார் கணபதி கோயிலில் உரையாற்றியபோது கோயில் நிர்வாகக்குழு துணைத்தலைவர் திருமதி நிர்மலா வரவேற்பு. பக். 32

படம் - 1



பேராசிரியர் கணபதி கோயிலில் உரையாற்றிய நிலை. பக். 32

படம் - 2



பேராசிரியர் ரெட்டியார் கணபதி கோயிலில் உரையாற்றிய போது அர்ச்சகர் மந்திரம் ஓதி பொன்னாடை போர்த்துதல் பக். 32

படம் - 3



கணபதி கோயில் பேராசிரியர் டாக்டர் ரெட்டியாரைத் திருமதி. கோமதி (பேராசிரியரின் மாணவி) அறிமுகம் செய்து வைத்தல். பக். 32

படம் - 4



புத்தர் விகாரில் புத்தர் பகவான் எழுந்தருளியிருக்கும் காட்சி. பக். 43

படம் - 5



பூங்காவில் குழந்தைகள் விளையாடும் இடம் - தொட்டிலில் ஆடும் காட்சிகளுடன். பக். 47

படம் - 6



பூங்காவில் குழந்தைகள் விளையாடும் இடம் (சறுக்கி விழும் அமைப்புகளுடன்) பக். 48

படம் - 7



இல்லத்தருகிலுள்ள மேனிலைப்பள்ளி. பேராசிரியர் ரெட்டியார், அவர் துணைவியார். பக். 50

படம் - 8




நியூயார்க்கில் அழகிய பூங்கா (மத்திய பூங்கா). பக். 52

படம் - 9




மத்திய பூங்கா - விளையாட்டுப் படகுகள் - இயக்கப்பெறும் காட்சி. பக். 53

படம் - 10



புராஸ்பெக்ட் பூங்கா. பேராசிரியர் ரெட்டியார் அருகில் அவரது துணைவியார். ஒரு பெரியாரின் சிலையையும் காணலாம். பக். 55

படம் - 11



புராஸ்பெக்ட் பூங்காவில் ஒரு காட்சி. பெற்றோர்களுடன் டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன். பக். 56

படம் - 12



அமெரிக்கன் கலை அருங்காட்சியகம் - நுழைவாயில். பக். 59

படம் - 13



அருங்காட்சியகம் - பதப்படுத்தப் பெற்ற கலைமான்கள். பக். 59

படம் - 14



அருங்காட்சியகம் - பதப்படுத்தப் பெற்ற செம்மறியாடுகள். பேராசிரியர் ரெட்டியார் - அருகில் அவரது துணைவியார். பக். 59

படம் - 15



அருங்காட்சியகம் - அமெரிக்க ஆடுவகைகள், காட்டெருமைகள். பேராசிரியர் ரெட்டியார் - துணைவியார். பக். 60

படம் - 16



இன்டரெமிட்டின் (போர்க்கப்பல்) மேல்தளம், பேராசிரியர் ரெட்டியார் அவரது துணைவியார். பக். 70

படம் - 17



போர்க்கப்பலைக் கண்டுகளித்து இல்லத்திற்குத் திரும்பும்போது பேராசிரியர் ரெட்டியார் மற்றும் அவரது துணைவியார். பக். 71

படம் - 18



உலக வாணிக மையம் (அழிக்கப்பெறும் முன் உள்ள காட்சி) பக். 77

படம் - 19



எம்பயர் ஸ்டேட் கட்டடம். பக். 79

படம் - 20



எம்பயர் ஸ்டேட் கட்டடம் - உயர் பார்வை அமைப்பிலிருந்து நோக்கும் போது (டாக்டர் ரெட்டியாரின் மகன் டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன், டாக்டர் ரெட்டியார் மற்றும் அவரது துணைவியார்) பக். 79

படம் - 21



எம்பயர் ஸ்டேட் கட்டடம் - உயர் பார்வை அமைப்பிலிருந்து நோக்கும் போது (டாக்டர் ரெட்டியாரின் மருமகள் விசயலட்சுமி, டாக்டர் ரெட்டியார் மற்றும் அவரது துணைவியார்) பக். 80

படம் - 22



ரூஸ்வெல்ட் தீவு - நீரில் சூழப்பெற்றுள்ளதைக் காணலாம். பக். 82

படம் - 23




ரூஸ்வெல்ட் தீவில் - மருத்துவமனைகள். டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன், பேராசிரியர் ரெட்டியார் மற்றும் அவரது துணைவியார். பக். 83

படம் - 24




ரூஸ்வெல்ட் தீவில் மருத்துவமனையில் ஒரு பக்கம் நடையாடிய போது பேராசிரியர் ரெட்டியார் - அவர் துணைவியார். பக். 83

படம் - 25




ரூஸ்வெல்ட் தீவில் மருத்துவமனையில் மற்றொரு பக்கம் நடையாடிய போது பேராசிரியர் ரெட்டியார், அவர் துணைவியார், டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன். பக். 84

படம் - 26



படம் - 27

சுதந்திரத் தேவியின் சிலை. பக். 87

படம் - 28




படகில் சென்றபோது பேராசிரியர் ரெட்டியார் அவரது துணைவியார். பக். 87



நயாகரா அருவிகள் (இரவுக் காட்சிகள்) பக். 91

படம் - 29



நயாகரா அருவிகள் - இரவுக் காட்சிகள் (எங்கள் படத்துடன்) டாக்டர் தனஞ்செயன், டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன், ரெட்டியாரின் துணைவியார், பேராசிரியர் ரெட்டியார். பக். 92

படம் - 30



நயாகரா அருவிகள் (பகலில் சென்றபோது) பேராசிரியர் ரெட்டியார், ரெட்டியாரின் துணைவியார். பக். 92

படம் - 31



நயாகரா அருவிகள் (பகல் காட்சிகள்) பக். 92

படம் - 32



நயாகரா அருவி - அருவிகளைப் பார்க்கப் படகில் செல்லும்போது என் மருமகள், என் மனைவி, நான். பக். 92

படம் - 33




அட்லாண்டிக் மாநகர் - சூதாடு களத்தின் தாஜ்மகால் பகுதி - புறத்தோற்றம். டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன், டாக்டர் ரெட்டியார், அவர் துணைவியார். பக். 115

படம் - 34



அட்லாண்டிக் மாநகர் சூதாடுகளம் (உள் தோற்றம்) பேராசிரியர் டாக்டர் ரெட்டியார், அவர் துணைவியார். பக். 116

படம் - 35



டாலஸ் ஏக்தா மந்திர் - உள்ளே போகும் நிலையில் நான். பக். 119

படம் - 36



டாலஸ் ஏக்தா மந்திர் - வெளிக்காட்சி பேத்தி அனுபமா - துணைவி நடுவில் நான். பக். 119

படம் - 37



டாலஸ் சிரீ சிவ - நாராயண மந்திர் - வெளிப்புறக் காட்சி - நுழைவாயிலைத் தேடிய நிலையில் அலையும் காட்சி. பக். 119

படம் - 38



டாலஸ் - உயிர்க்காட்சிச் சாலையில் ஒரு பகுதி நுழைவாயில் அருகில் பேத்திமார் சக்கர நாற்காலிகளில் எங்களைத் தள்ளும் நிலை. பக். 131

படம் - 39



டாலஸ் - உயிர்க்காட்சிச் சாலை உயிருள்ள இரண்டு ஒட்டைச் சிவிங்கிகள். பக். 131

படம் - 40



டாலஸ் உயிர்காட்சிச் சாலை - சிறுத்தைப் புலிகள் உள்ள பகுதி. பக். 132

படம் - 41



டாலஸ் உயிர்க்காட்சிச் சாலை பறவைகள் உள்ள காட்சி. என்னை என் சிறிய பேத்தி அனுபமாவும், என் மனைவியைப் பெரிய பேத்தி மிருணாளினியும் சக்கர நாற்காலிகளைத் தள்ளும் நிலைகள். பக். 132

படம் - 42



டாலஸ் உயிர்காட்சிச் சாலையில் ஒரு பஞ்சவர்ணக் கிளி உள்ள காட்சி. பக். 132

படம் - 43



டாலஸ் உயிர்காட்சிச் சாலை - உயரமான இடத்தில் ஏறி புலிகள் இருக்கும் இடத்தைக் காணும் நிலை. பேத்திமார் இருவரும் எங்களை சக்கர நாற்காலிகளில் தள்ளும் நிலை. பக். 133

படம் - 44



டாலஸ் மரங்கள் வளர்ப்புத் தோட்டம் - நுழைவாயில் முன்புறம். நான், என் மனைவி பேத்தி அனுபமா. பக். 135

படம் - 45



டாலஸ் மரங்கள் வளர்ப்புத் தோட்டம் நானும் என் துணைவியும் உடற்சோர்வு நிலையில் ஓய்வு கொள்ளுதல். பின்புறம் எங்கள் பேத்தி அனுபமா நிற்றல். பக். 133

படம் - 46



டாலஸ் மரங்கள் வளர்க்கும் தோட்டம். பூக்கள் நிறைந்த காட்சி. என் பேத்தி அனுபமா. பக். 136

படம் - 47



டாலஸ் மரங்கள் வளர்ப்புத் தோட்டம். மாபெரும் மரங்கள் - இடையே என் பேத்தி அனுபமா. பக். 137

படம் - 48

படம் - 49

டாலஸ் - மரங்கள் வளர்க்கும் தோட்டம், சிறிய அருவிகள் விழும் காட்சி. முன்புறம் பேத்தி அனுபமா. பக். 137





டாலஸ் - மரம் வளர்ப்புத் தோட்டம் - மரங்களும், பூச்செடிகளும் நடுவே பேத்தி அனுபமா. பக். 137

படம் - 50



டாலஸ் மரங்கள் வளர்ப்புத் தோட்டம் - தாழ்ந்த நிலையில் உள்ள தோட்ட வாயில். பக். 138

படம் - 51



டாலஸ் மரங்கள் வளர்க்கும் தோட்டம் - சிறிய அருவிகள் விழும் நிலை டாக்டர் ரெட்டியாரும் அவர் துணைவியாரும். பக். 138

படம் - 52

படம் - 53



டாலஸ் மரங்கள் வளர்க்கும் தோட்டம் தாழ்ந்தநிலையிலுள்ள ஒரு சிறு தோட்டத்திற்குப் போகும் நுழைவாயில். நிற்பது என் பேத்தி அனுபமா. பக். 138



டாலஸ் மரங்கள் வளர்க்கும் தோட்டம் தாழ்ந்தநிலையில் உள்ள ஒரு சிறு தோட்டம். பக். 138

படம் - 54



டாலஸ் மரம் வளர்க்கும் தோட்டத்தில் ஒரு காட்சி. நிற்பது பேத்தி அனுபமா. பக். 138

படம் - 55



படம் - 56

மெட்ரோபிலக்ஸ் தமிழ்ச் சங்கம். டாக்டர் ரெட்டியார் உரையாற்றுதலும் செவிமடுக்கும் அவையோரும். பக். 139

படம் - 57



எங்கள் நண்பர் டாக்டர் தனஞ்செயன் இல்லத்தில் தங்கி விடை பெற்றபோது. பக். 164



பிட்ஸ்பர்க் - திருவேங்கடவன் (மலைக்)கோயில் - வெளிவரும் போது. பக். 165

படம் - 58



அமெரிக்கத் தலைவர் வாஷிங்டன் நிலைவுச் சின்னம். பக். 168

படம் - 59



வாஷிங்டன் நினைவுச் சின்னம். பக். 168

படம் - 60



அமெரிக்க நாடாளுமன்றம். பக். 170

படம் - 61

# என் அமெரிக்கப் பயணம்

**(ஆசிரியரின் 89-வது அகவை நினைவாக)**

*ஆற்று நீர்வழிப் படூஉம் புணைபோல்*
*முறைவழிப் படூஉம் ஆர்உயிர் (புறம்-192)*


*'அருங்கலைக்கோன்' 'ஸ்ரீசடகோபன் பொன்னடி' 'தமிழ்ப்பேரவைச்செம்மல்'*
*'கலைமாமணி' 'சேவாரத்னா' 'தமிழ் ஆய்வுத் தமிழரசு'*
*'தமிழ்மறைச் செம்மல்', 'தமிழ்வாகைச் செம்மல்'*

**பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்,**

*எம்.ஏ., பி.எஸ்.சி., எல்.டி, வித்துவான், பி.எச்.டி, டிலிட்*

*வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்,*
*தமிழ் இலக்கியத்துறை,*
*சென்னைப் பல்கலைக்கழகம்*



**வேங்கடம் வெளியீடு**

*AD-13-14, 5வது தெரு, 10-வது முதன்மை சாலை,*
*அண்ணா நகர், சென்னை - 600 040.*

**விலை : ரூ. 120.00**

FIRST EDITION - November, 2004
In memory of Author's 89th Birth Day


| Size | : | ⅛ Demy |
|---|---|---|
| Pages | : | 196 + 16 Colour pages |
| Paper | : | 13.6 kg Maplitho |
| Price | : | Rs.120.00 |
| US | : | $10/- |

Copies available from:

(1) **D.Ramakrishnan Subbu Reddiar,**
7757, E-Block Crest Place, Tuscon, Arizona-85750. USA.

(2) **Thiru. Venkatesh Ramakrishnan,**
825, New York Avenue, Room No. 508, Box No. 116,
Brooklyn, New York - 11203. USA

(3) **Gomathi & Ambati Murali Mohan Rao,**
79-32, 211th Street, Bayside, NY - 11364
Phone : 718-464-9391.

(4) **Tmt. Mrinalini Ramalingam,**
1403, Scotsman Drive, Allen TX 75013.

(5) **Selvi. Anupama Ramalingam,**
78, Winding Word Drive, Apt 8 - B, SAYREVILLE, NJ - 088872

**சென்னையில் கிடைக்கும் இடங்கள்:**

1) **டாக்டர் S. இராமலிங்கம்,**
*AD-13-14, 5-ஆவது தெரு, 10-வது முதன்மை சாலை,*
*அண்ணா நகர், சென்னை - 600 040.*

2) **டாக்டர் V.T. பலராமன்,**
*23, 'I' பிளாக், அண்ணா நகர் கிழக்கு, சென்னை - 600 102.*

3) **அவ்வை பதிப்பகம்,**
*எண் 1, 3வது மாடி, புதூர், 13வது தெரு,*
*அசோக் நகர், சென்னை - 600 083.*

Printed at T. Krishna Press, Chennai - 600 102.

தாயகமாகிய தமிழகத்தைவிட்டு
பொருளீட்டுவதற்காக அமெரிக்க ஐக்கிய நாடுகள்
போந்து நன்முறையில் பொருளீட்டி நல்வாழ்க்கை வாழ்ந்து தமிழகத்திற்கு
நற்பெயர் ஈட்டும் அமெரிக்கா வாழ் தமிழன்பர்கள் அனைவருக்கும்

## அன்புப் படையல்

*கடலினைக் கடந்தும் நாட்டினை மறவாக்*
*கண்ணியப் புண்ணியம் மிக்கார்;*
*உடலினை மறவா உயிரெனப் பொலியும்*
*உத்தமர்; சத்தியத் தூன்றும்*
*திடனுறும் அன்பர்; திறமையி னாலே*
*சீர்மைகள் பற்பல பெற்றார்*
*அடலுறும் அமெரிக் காவினில் வாழும்*
*அன்பருக் குரியதிந் நூலே.*

நா. மகாலிங்கம்,
பி.எஸ்.சி, எப்.ஐ.இ.
தலைவர்
சக்தி நிறுவனங்கள்



74, மவுண்ட் ரோடு,
கிண்டி,
சென்னை - 600 032.

## பணியே வழிபாடு

முதுபெரும் புலவராகிய பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களை நான் பல்லாண்டுகளாக அறிவேன். தமது முதிர்ந்த தளர்ந்த அகவையிலும் அறிவுக்கருவூலங்களைத் தொடர்ந்து எழுதித் தமிழகத்துக்கு வழங்கி வருவதை நான் பெரிதும் பாராட்டுகிறேன். "பூசித்தும் வாசித்தும் போக்கினேன்போது" - என்னும் ஆழ்வார் திருமொழிக்கு அணிகலனாக திரு. ரெட்டியாரின் அறிவு வாழ்க்கை அமைந்துள்ளது. பேராசிரியர்களுக்குப் பேராசிரியராகிய திரு. சுப்பு ரெட்டியார் அருந்தமிழ்ப் புலமை, அறிவியல் நுணுக்கம், ஆராய்ச்சி வன்மை எனப் பல்வேறு தகுதிகளைக் கொண்டிருப்பதால், அரிய பெரிய கலைச் செல்வங்களைத் தமிழுக்கு வழங்க முடிகிறது.

திருப்பதியில் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை தொடங்கி இன்றுவரை அத்துறை இனிது நடைபெற்று வருவதற்கு அடிப்படை கோலியவர் திரு. ரெட்டியார் அவர்களேயாவார். 'எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே எந்தைநினது அருட்புகழை இயம்பியிடல் வேண்டும்' என்று வள்ளலார் கருதியபடி புதுமை பூத்துக் குலுங்கும் அமெரிக்க நாடு சென்று திரும்பிய நிலையில், தன் கண்ணையும், கருத்தையும் கவர்ந்த அமெரிக்கக் காட்சிகளை அருவி நடையில் அழகு ததும்ப ஆசிரியர் இந்நூலில் எழுதியுள்ளார்.. அமெரிக்க நாட்டு வரலாற்றுக் குறிப்பும், மாநிலங்களின் பட்டியலும் காட்டியதோடு அமெரிக்க நாட்டில் உள்ள, தமிழ் மக்கள் கட்டிய அமெரிக்கத் திருக்கோயில்கள், காட்சிச் சாலைகள், பூங்காக்கள், நயாகரா அருவி முதலியவற்றையும் இந்நூலில் விவரித்துள்ளார். திருக்கோயிலுக்குள் நுழைந்ததுமே பாசுரங்களும், தத்துவக் கோட்பாடுகளும் ஆசிரியர் மனத்தில் பொங்கி வழிந்ததையும் கட்டுரையில் காணலாம்.

நாளுக்குநாள் மாற்றமும் முன்னேற்றமும் கொண்டு, உலகப் பொருளாதாரத்தின் ஊற்றுக்கண்ணாக அமெரிக்க நாடு விளங்குகிறது.

பலமுறை சென்று வந்தாலும், செல்லும் ஒவ்வொரு முறையும் அந்த நாட்டில் நவ நவமாய் மலரும் மாறுதல்களைக் கண்டு எவரும் வியப்படைவார்கள்.

நிறைவாகத் திரு. சுப்பு ரெட்டியார், "என் மகன் நிரந்தரமாகவே வந்து என்னைத் தங்குமாறு வற்புறுத்தினான். மிகவும் குளிர்ப்பகுதியாக இருக்கும் நியுயார்க் மாநிலத்தை விட்டு அரிசோனா மாநிலத்துக்குக் குடியேறிவிட்டான். அங்குத் தமிழகச் சூழ்நிலை (வெப்பம்) இருக்கும் என்றும், மருத்துவ வசதி அமெரிக்காவில் இருப்பதுபோலத் தமிழகத்தில் இல்லையென்றும், 19 எண்ணுள்ள தொலைபேசியை இயக்கினால் நோயாளர்க்குரிய பேருந்து உடனே வந்து அனைத்தையும் கவனிக்கும் என்றும் கூறினான். 'முறைவழிப்படும் ஆருயிரை - உயிரீரும் வாளை' - மருத்துவத்தால் காப்பாற்ற முடியுமா ? என்ற வினா எனக்கு எழுகின்றது. ஏதோ அவசரத்துக்குத் தமிழகத்தில் நான் வாழும் சென்னை அண்ணா நகரில் கிடைக்கும் மருத்துவ வசதி போதும் என்று எனக்குத் தோன்றுகின்றது."

இளமை முதல் இன்று வரை (அகவை 88-க்குப் புகும் நிலை) சுறுசுறுப்பாகப் படிப்பதும், எழுதுவதும், ஆர்வத்துடன் இருப்பவர்களுக்குக் கல்வி புகட்டுவதும், ஆய்வுக்கு வழிகாட்டுவதும் - இத்தனைக்கும் மேலாக "பணியே பரமன் வழிபாடு" என்றும், அது எனக்குப் "பண்டே பரமன் பணித்த பணிவகையே" (திருவாய் 10.4:9) என்று இடைவிடாது எண்ணியிருக்கும் எனக்கு அமெரிக்க வாழ்வு எப்படிப் பொருந்தும் ? "புத்தம் புதிய நூல்கள்தாம் தமிழ்மொழிப் பன்முக வளர்ச்சிக்கு இன்றியமையாதவை என்பதும், அதுவே என் பேச்சாகவும் மூச்சாகவும் இருக்க வேண்டும் என்ற கொள்கையைக் கடைப்பிடித்துக்கொண்டு வாழும் எனக்குத் தமிழக வாழ்வுதான் மிகவும் பொருத்தம் என்பதும் வெள்ளிடைமலை" என்று நூலை முடித்துள்ளார். அவருடைய முடிவு நல்ல முடிவாகும்.

பயனுடைய ஒரு பயண நூலைப் பேராசிரியர் எழுதியதைப் பாராட்டிப் போற்றுகிறேன். அல்லும் பகலும் தமிழ்த் தொண்டாற்றும் பெரும் பேராசிரியர் இன்னம் பல்லாண்டு வாழ்ந்து பணிகளைத் தொடரவேண்டும் என்று அருட்பெருஞ்சோதி ஆண்டவனை வேண்டுகிறேன்.

அன்புள்ள

**நா. மகாலிங்கம்**

# நூல் முகம்

*சச்சிதா னந்த வடிவம்நம் வடிவம்*
*தரும்அதிப் பினம்மற் றிரண்டும்*
*பொய்ச்சிதா காசக் கற்பனை இவற்றைப்*
*போக்கியாங் கவ்வடி வாகி*
*அச்சிதா கார போதமும் அதன்மேல்*
*ஆனந்த போதமும் விடுத்தல்*
*மெய்ச்சிதாம் வீடென் றுரைத்தினை சித்தி*
*விநாயக விக்கினேச் சுரனே!*[1]

*கலைபயின்ற வளத்தினுக்கும் கரும்பினைமுக்*
*கனியைஅருட் கடலை ஓங்கும்*
*நிலைபயின்ற முனிவரரும் தொழுதேத்த*
*நான்முகனார் நீண்ட நாவின்*
*தலைபயிரை மறைபயின்று மூவுலகும்*
*காக்கின்ற தாயை வாகைச்*
*சிலைபயின்ற நுதலாளைக் கலைவாணி*
*அம்மையைநாம் சிந்திப்போம்!*[2]

*'ஆற்று நீர்வழிப் படூஉம் புணைபோல்*
*முறைவழிப் படூஉம் ஆருயிர்'*[3]

என்பதற்கிணங்க என் அமெரிக்கப் பயணம் அமைகின்றது. மேலுலகம் செல்ல வேண்டிய வயதில் மேல்நாடு செல்ல வாய்ப்பு வந்தது அந்த இறைவன் திருவருள். இது வினைப் பயனுமாகின்றது.

என் அமெரிக்கப் பயணத்தால் (2002, மார்ச் 30 முதல் ஜூன் 25 வரை) இரண்டரை மாதம் நியுயார்க் மாநிலத்தில் நியூயார்க்கில் என் இளைய மகன்

---

1. திருவருட்பா– மூன்றாம், திருமுறை –சித்தி விநாயகர் பதிகம் –6
2. மேலது–மேலது–கலைமகள் வாழ்த்து–3
3. புறம் – 192

டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன் இல்லத்திலும், 12 நாட்கள் டெக்ஸாஸ் மாநிலத்தில், டாலஸ்ஸில் என் பேத்தி மிருணாளினி இல்லத்திலும் தங்கியிருந்தேன். அக்காலங்களில் அவர்கள் கூட்டிச் சென்று காட்டிய இடங்களில் கண்டு களித்து அநுபவித்த செய்திகளும் நான் கற்றுக்கொண்டு தமிழகத்திலுள்ள என் உறவினர்கள், நண்பர்கள், அறிஞர்கள் ஆகியோருக்குக் கூறவேண்டிய செய்திகளும் இந்தப் பயண நூலில் பதிவாகியுள்ளன. சுருக்கமாகக் கூறினால் வளர்ந்துவரும் நாட்டிலுள்ள ஒருவன் வளர்ந்த உச்ச நிலையில் உள்ள (இன்னும் வளர்ந்து கொண்டிருக்கும் நிலையில் இருக்கும்) நாட்டைப் பற்றிய செய்திகள் இந்நூலில் பதிவாகியுள்ளன எனலாம்.

இவற்றையே சுவையாகவும் படிப்போர் அதிசயிக்கத்தக்க நிலையிலும் சொல்லி வைக்கலாம். 'அல்லாவுதீனும் அற்புத விளக்கும்' என்ற கற்பனைக் கதையை நாம் எல்லோரும் அறிவோம். அதில் பூதம் ஒன்று சிறுவன் அல்லாவுதீனை பல்வேறு இடங்களுக்கு கூட்டிச்சென்று பல்வேறு வியத்தகு செயல்களையும் காட்சிகளையும் காட்டி மகிழ்வித்ததை நினைவு கூரலாம்.

நியுயார்க் விமான நிலையத்தில் இறங்கியதும் என் மகன் டாக்டர் இராமகிருஷ்ணன், மருமகள், பேரன்மார்கள் இருவர் எங்களைத் தம் காரில் அழைத்துச் சென்றபோதே 'புதியதோர் உலகம்' புகுந்ததை உணர்ந்தேன். பூதம் சிறுவன் அல்லாவுதீனை கற்பனை உலகத்திற்கு கூட்டிச் சென்றபோது அச்சிறுவனுக்கு ஏற்பட்ட உணர்வு எனக்கு ஏற்பட்டதாகக் கொள்ளலாம்.

அதன்பிறகு நியுயார்க் நகரிலிருந்தபோது என் மகன் பல இடங்கட்கு கூட்டிச் சென்றபோதும், டாலஸ்ஸில் தங்கியிருந்தபோது என் பேத்தி முதலியோர் பல இடங்கட்கு கூட்டிச்சென்றபோதும் நான் பெற்ற உணர்வுகள் பூதம் சிறுவன் அல்லாவுதீனுடன் பல இடங்களுக்கு சென்றபோது அவன் பெற்ற உணர்வுகளுடன் ஒப்பிடலாம். நான் பெற்ற உணர்வுகள் உண்மையான வியப்புணர்வுகள்; அவன் பெற்ற உணர்வுகள் கற்பனை வியப்புணர்வுகள்.

நான் இரண்டு இடங்களில் தங்கியிருந்தபோது நடைமுறையில் அவரவர்கள் வசதி-வாய்ப்புகளுக்கேற்ப பல இடங்களைச் சுற்றிப்பார்க்க நேர்ந்தாலும், செய்திகளைக் கோவைப்படுத்தி எழுதும்போது நியுயார்க் மாநிலம், ஃபிலடெல்ஃபியா மாநிலம் என்ற மாநிலங்கள் வாரியாகப் பிரித்துக் கொண்டும், மாநிலங்களில் பார்த்தவற்றை திருக்கோயில்கள், பூங்காக்கள், அருங்காட்சியகங்கள், கடைகள், உயிர்க்காட்சி சாலைகள் என்று

செய்திகளை வகைப்படுத்தியும் அமைத்துள்ளேன். ஆயினும் அவற்றில் புறப்பட்ட நாள், நேரம், திரும்பிய நேரம் முதலிய விவரங்களைக் குறிப்பிட்டுள்ளேன்.

பல்வேறு துறைகளில் தரமான நூல்களை வெளியிட்டு சேவை செய்து வரும் 'சுரா' வெளியீட்டகம் இந்த நூலின் கைப்படியையும் அன்புடன் ஏற்று அச்சிட வந்தமைக்கு அதன் அதிபர் திரு. வீ.வீ.கே. சுப்புராசு அவர்கட்கு என் இதயங்கலந்த நன்றி. இது காலத்தால் செய்த உதவியாகும்.

சிறியேன் வரைந்த இந்நூலுக்கு அணிந்துரை வழங்கி சிறப்பித்த பொள்ளாச்சி வள்ளல் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களை அறியாதார் தமிழகத்தில் ஒருவரும் இலர். நாடறிந்த தொழிலதிபர். நற்காரியமாய் வாரி வழங்கும் வள்ளல். முப்பது ஆண்டுகளுக்கு முன் நான் திருப்பதியில் பணிபுரிந்தபோது திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைக்கு 'இராமலிங்க வள்ளல் பொற்பதக்க'த்திற்கு கணிசமான தொகை வழங்கி பெருமைப்படுத்தியவர். வள்ளல் பெருமான் இராமலிங்கரின் கொள்கைகளை அமெரிக்கா போன்ற வெளிநாடுகளிலும் பரப்பிவரும் சிறப்பு இவருக்கு உரியது. இராமகிருஷ்ணருக்கு அவர் காலத்திலேயே விவேகாநந்தர் என்ற சீடர் கிடைத்து அவர் கொள்கைகளை உலகெங்கும் பரவக் காரணமாக அமைந்தது. வள்ளல் பெருமான் சோதியில் கலந்த பல ஆண்டுகட்குப் பிறகு அவர் சீடராக அமைந்த அவர்தம் கொள்கை உலகெங்கும் பரவக் காரணமாக அமைந்தது அருட்பெருஞ்சோதியின் திருவருளே என்பது என் கருத்து. கடல் கடந்து அமெரிக்கா போன்ற நாடுகள் சென்ற அநுபவமிக்க சத்துவகுணமே வடிவமான பொள்ளாச்சி வள்ளலின் அணிந்துரை பெற்றது இந்நூலின் பேறு; என் பேறும் கூடத்தான். அணிந்துரை வழங்கி ஆசிகூறிய அன்பருக்கு என் இதயங்கலந்த நன்றி என்றும் உரியது.

இந்த நூலை அமெரிக்காவில் நன்முறையில் பொருளீட்டி நல்வாழ்க்கை வாழ்ந்து தமிழகத்திற்கு நற்பெயர் ஈட்டும் அமெரிக்கா வாழ் தமிழன்பர்கள் அனைவர்க்கும் அன்புப் படையலாக்கிப் பெருமிதம் கொள்ளுகின்றேன்.

இந்நூல் அச்சேறுங்கால் மூலப்படியுடன் பார்வைப் படிகளை ஒப்பிட்டுச் சரிபார்த்து உதவிய என் அபிமான புத்திரி டாக்டர் மு.ப. சியாமளாவுக்கு என் அன்பு கலந்த ஆசிகள் என்றும் உரியவை.

இந்நூல் எழுதுவதற்கு உடல் வலிவும் மனவலிவும் நல்கி எனக்கு அருள் பாலித்த வேங்கடம் மேவிய விளக்கிற்கு புருஷாகாரபூதையான பெரியபிராட்டியாரின் மூலம் எண்ணற்ற சரணாகதி வணக்கங்கள்.

*ஏத்திமத மெல்லாம் எதையறிந்தோம் என்னும்?எதைச்*
*சாத்திரம்நன் காய்ந்து சலிக்கும்?எதை - நாத்திகமோர்*
*சாற்றுமே ஓர்ந்திலதாச் சாதித் திடும்? அதையே*
*பற்றுவாய் நெஞ்சே வரிந்து*[4]

**- ந. சுப்பு ரெட்டியார்**

'வேங்கடம்'
AD-13, அண்ணா நகர்
சென்னை - 600 040

4. அகலிகை வெண்பா – கடவுள் வாழ்த்து

பக்கம்

# உள்ளுறை

# என் அமெரிக்கப் பயணம்

## 1. தோரண வாயில்

மானிட வாழ்க்கை, ஏனைய உயிர் வகைகளின் வாழ்க்கையுடன் ஒப்பிட்டு நோக்கும் போது, விசித்திரமானதாகவும், விநோதமானதாகவும் இருப்பதை அறியலாம். அரும்பாடுபட்டு அறிவியல் கல்விபெற்று அதன் அடிப்படையில் நோக்கினால் இந்த அற்புதமும் விநோதமும் தெளிவாகப் புலனாகும்.

ஊனக்கண்ணுக்குப் புலனாகாத நுண்ணிய ஆண் விந்தணுவிலும், பெண் முட்டையணுவிலும் 23-ஒற்றை நிறக்கோல்கள்[1] அடங்கியுள்ளன. இந்த நிறக்கோல்களில் ஆணிடம் உள்ளவற்றில் சில x-நிறக் கோல்கள் இணைந்தால் பெண்மகவும், y-நிறக்கோல்கள் இணைந்தால் ஆண்மகவும் பிறக்கும். இந்த நிறக்கோல்கள் கருநிலையில் ஆண் உள்ளபோதே விரைகளிலும்[2], கருநிலையில் பெண் உள்ள போதே சூற்பைகளிலும்[3] சேமித்து வைக்கப்பெறும். பெண்பூப்பெய்தும் காலம் வரையிலும் ஆண்முன்-குமரப்பருவம் எய்தும் வரையிலும் இவை உறங்கிய நிலையில்[4] கிடக்கும். இப்பருவங்கள் எய்திய பிறகு இவை ஒன்று சேரத்துடிக்கும். இத்துடிப்பே நாம் **'காதல்'** என்று வழங்குவதாகும். இந்தக் காதலே இந்நிறக்கோல்கள் இணைய வழிவகுக்கின்றது. இவ்வாறு இணைந்த நிலையே கருஉயிரணு நிலை[5]யாகும். இது நடைபெறும் இடம் கருக்குழல்[6] ஆகும். இதுவே சிறிது சிறிதாக நகர்ந்து வந்து கருப்பையில்[7] புதைந்து குழந்தையாக வளர்கின்றது.

இந்தக் கரு உயிரணுவில் தான் 'ஆலமர் வித்தில் அருங் குறள் போல்' ஆலமரம் அடங்கிக்கிடப்பது போல் மனித உருவம் அடங்கிக் கிடக்கிறது. எனவே மனித வாழ்வு சமநிறக்கோல்களைக் கொண்டு தொடங்குகின்றது. ஆகவே, ஒரு குழந்தையின் உடலிலுள்ள உயிரணுவின் நிறக்கோல் இணையில் ஒன்று தந்தையிடமிருந்தும் மற்றொன்று தாயிடமிருந்தும் வந்தவையாகும்[8]. உலகிலுள்ள மக்கள் யாவரும் இவ்வாறு பிறப்பெடுத்து பிறந்த

---

1. Chromosomes
2. Testicles
3. Ovaries
4. Dormant state
5. Germ Cell
6. Fellopian tube
7. Uterus
8. இத்தகைய கருத்துகளில் மேலும் தெளிவு பெற விரும்புவோர் எனது 'வாழையடி வாழை' (மணிவாசகர் பதிப்பகம் 8/7, சிங்கர் தெரு, சென்னை – 108) என்ற நூலைக் கற்றுப் பயன்பெறலாம்.

நாடுகளையொட்டி **இந்தியர்கள், அமெரிக்கர்கள், ஆங்கிலேயர்கள், சீனர்கள்** என்பன போன்ற பெயர்களால் வழங்கப் பெறுகின்றனர். சமயங்கள் தழுவிய மக்களிடையே பிறக்கும் போது **சைவர்கள், வைணவர்கள், கிறித்தவர்கள், இஸ்லாமியர்கள்** என்பன போன்ற பெயர்களாலும் வழங்கப் பெறுகின்றனர்.

ஏனைய உயிர்களின் வாழ்க்கையில் அதிக மாற்றம் இல்லை. அன்று போலவே இன்றும் இனம் பெருக்கி வாழ்கின்றன. உயிர்ப்பிராணிகள் அனைத்தும் கால்களால் நடந்தாலும், மனிதனைத்தவிர ஏனைய பிராணிகள் கால்களாலேயே நடந்து வருவதால் அவை **'கால்நடைகள்'** என்ற பெயரால் வழங்கிவருகின்றன. ஆனால், ஆதியில் குதிரை, மாடு, எருமை, கோவேறு கழுதை முதலியவற்றையே மனிதன் வாகனங்களாகக் கொண்டிருந்தான். தான் வணங்கும் கடவுளர்கட்கும் (எ.கா: சிவன்-காளை; திருமால்-கருடன்; எமன்-எருமை; பயிரவர்-நாய்; முருகன்-மயில்; விநாயகர்-மூஞ்சுறு) பறவைகளையும் மிருகங்களையும் வாகனங்களாக அமைத்தான். மனிதன் இன்று மிதிவண்டி, மாட்டுவண்டி, குதிரைவண்டி, மகிழ்வுந்து, சிற்றுந்து, பேருந்து, விமானம், இராக்கெட்டு, விண்வெளிக்கலன் போன்றவற்றை வாகனங்களாகக் கொண்டு வாழ்கின்றான். ஆதியில் குடிசையில் வாழ்ந்த மனிதன் இன்று மச்சுவீடு, மாடிவீடு (அமெரிக்காவில் மரப்பலகையாலான வீடு), கோடையில் குளிர் வசதியும், குளிர் காலங்களில் வெப்ப வசதியும் கொண்ட வீடுகள் அமைத்துக் கொண்டு வாழ்கின்றான். தான் வணங்கும் கடவுளர்கட்கும் செங்கலாலான, கருங்கல்லாலான மாளிகை போன்ற பெரிய கோயில்களை (எ.கா: மதுரை-மீனாட்சி கோயில், திருஅரங்கம்-அரங்கநாதர் கோயில், தில்லை-சிற்றம்பலவன் கோயில், இராமேசுவரம்-இராமநாதர் கோயில்) எழுப்பியுள்ளான்.

தன் அநுபவங்களையெல்லாம் கணிதம், பொறியியல், பலதுறை அறிவியல், பொருளியல், வரலாற்றியல்களாகச் சேமித்து வைத்துள்ளான். இவற்றைக் கற்போரின் வாழ்க்கை முறைகள் மாறுகின்றன. பல இலக்கிய ஆசிரியர்கள் பல்வேறு இலக்கியங்களைப் படைத்துள்ளனர். அருளாளர்கள் தோன்றி பல பக்திப் பனுவல்கள், தத்துவ நூல்கள் முதலியவற்றைப் படைத்துள்ளனர். இவற்றைக் கற்றலால் பல்வேறு **நம்பிக்கைகள்** தோன்றி மனிதனது வாழ்க்கையையே மாற்றிவிடுகின்றன. இவற்றுள் முக்கியமானவை வினை பற்றிய கொள்கைகள்.

பண்டைய (சங்க) இலக்கியங்களில் ஒன்றாகிய புறநானூறு,

*நீர்வழிப் படூஉம் புணைபோல்*<br>*முறைவழிப் படூஉம் ஆருயிர்* — *புறம் 192*

என்று வினையைப் பேசும். 88 அகவையைத் தாண்டும் நிலையிலுள்ள என்னை, மேலுலகம் சேரவேண்டிய நிலையிலுள்ள என்னை, மேல் நாடாகிய அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு வரச் செய்தது ஊழே (நுகர்வினை-பிராரப்தம்) தான் என்பதை இத் தொடர் சிந்திக்க வைக்கின்றது. என் நீண்டகால வாழ்க்கையில் நடைபெற்ற நல்லவையும் தீயவையுமாகிய அனைத்து நிகழ்ச்சிகளும் இந்த ஊழின் பயனே என்பதை நன்கு உணர்கின்றேன். நான் செய்பவை அனைத்தும் இறைவன் செயலே என்பதையும், நான் ஒரு செயற்படும் கருவியே என்பதையும் உணர்ந்து செயற்படுவதால் அனைத்தும் நல்லவையாகவே முடிகின்றன. **'இருவினையொப்பு'** என்ற மனநிலை என்னை நெறிப்படுத்துகின்றது.

> *நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்*
> *அல்லற் படுவ தெவன்?* **- குறள் 379**

என்ற குறள் கலங்கரை விளக்காக அமைந்து எனக்கு வழிகாட்டும் ஒளியாகும்.

இலக்கியங்களிலும் வினைக்கொள்கை அதிகமாக வற்புறுத்தப் பெறுவதால், இக்கொள்கை நம் மனத்தில் ஆழப்பதிந்து நமக்கு அதில் உறுதி ஏற்படுகின்றது. 'ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்' என்பதை விளக்க எழுந்தது சிலப்பதிகாரம். 'நாடாண்ட தசரதனை வானாள வைத்ததும்,' 'நாடாள வேண்டிய இராமனைக் காடாளச் செய்ததும்,' வினையின் பயனேயாகும் என்பதை வற்புறுத்துவது இராமாயணம்.

> *ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்*
> *தாழாது உஞற்று பவர்* **- குறள் 620**

என்ற குறள் என்னை 'விடாமுயற்சியில்' ஈடுபடச் செய்யும் ஒளிவிளக்கு. 'பெருமை முயற்சி தரும்' (குறள்-611) என்ற தொடர் பக்க ஒளி காட்டும் பண்பாட்டு மொழி. இத்தகைய பல்வேறு உண்மைகளை என் அமெரிக்கப் பயணம் சிந்திக்கச் செய்கிறது. இந்தச் சிந்தனைகளின் ஒளியில் **'என் அமெரிக்கப் பயணம்'** என்ற இந்த நூல் உருவாகின்றது. இதனைப்படிக்கும் அன்பர்கள் என்னுடன் சேர்ந்து உணர்ந்து நோக்கி என்னை வாழ்த்த வேண்டும் என்பது என் விருப்பம்; விண்ணப்பமும் கூட.

# 2. பொதுச் செய்திகள்

மனிதனுக்கு உலகில் பல்வேறு வசதிகள் தேவைப்படுகின்றன. சமூக வாழ்வில் மனிதன் சிலவற்றைத் தானாக அமைத்துக் கொள்கின்றான். சிலவற்றைச் சமூக அமைப்புகளும், அரசும் இணைந்து உதவுகின்றன. இத்தகைய சில செய்திகளை இந்த இயலில் குறிப்பிடுகின்றேன்.

**1. வீடுகள்:** உயிருள்ள பிராணிகளை வைணவ தத்துவம் **'சித்து'** என்று வகைப்படுத்திப் பேசும்; சைவசித்தாந்தம் **'பசு'** என்று பகரும். கரையான் புற்று கட்டும்; ஆயினும் அது அதில் வாழ்வதில்லை; அதில் பாம்புகள் வாழும். காக்கை, குருவிகள் மரச்சுள்ளிகளைக் கொண்டு கூடுகள் கட்டி வாழும்; இடம் மாறினால் இக் கூடுகளைத் துறந்து புதிய இடத்தில் கூடுகளைக் கட்டிக்கொள்ளும். தூக்கணாங் குருவிகள் புல்லைக் கொண்டு அற்புதமான கூடுகட்டிக் கொள்ளும். தேனீக்கள் கட்டிக் கொள்ளும் கூட்டின் விசித்திரத்தையோ சொல்லிமுடியாது. இக்கருத்தையெல்லாம் ஒருவாறு

> வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கரையான்
> தேன்சிலம்பி யாவர்க்கும் செய்யரிதால்-யாம் பெரிதும்
> வல்லோமே என்று வலிமைசொல வேண்டாம் காண்
> எல்லார்க்கும் ஒவ்வொன்று எளிது - **ஔவையார்.**

என்ற வெண்பா அற்புதமாக, சுருக்கமாகக் கூறுகிறது. சிங்கம், புலி, கரடி, சிறுத்தை ஆகியவை குகைகளிலும் மலை இடுக்குகளிலும் ஒடுங்கி வாழ்கின்றன. மனிதனின் மூதாதையான குரங்குகளுக்கு குடிசை கூட போட்டுக்கொண்டு வாழத் தெரியவில்லை!

மனிதன் மட்டும் இறைவனால் அருளப் பெற்ற பகுத்தறிவினால் குடிசையில் தொடங்கி பல்வேறு விதமான இல்லமைப்புகளைப் படிப்படியாக வளர்த்துக் கொண்டு வாழ்கின்றான். கட்டட அமைப்புகளைச் சிந்தித்துப் படங்கள் வரைந்து திட்டங்களை வகுத்தல்[1], இல்லங்களைக் கட்டுவதில் பல்வேறு பொறியமைப்பு[2] முறைகள், வீடுகளைக் கோடையில் தண்மையாகச் செய்வதிலும், குளிர் காலங்களில் வெப்பமாகச் செய்வதிலும் முறைகள் பலவற்றைக் கண்டறிந்துள்ளான். இராவணன் ஐம்பெரும் பூதங்களை அடக்கியாண்டது போல மனிதன் தான் கண்டறிந்த மின்னாற்றலின் துணை கொண்டு பல்வேறு முறைகளை புத்தம் புதியவாறெல்லாம் அமைத்துக் கொண்டு வருகின்றான்.

---

1. Architecture 2. Engineering

அமெரிக்கா முழுவதிலும் வீடுகளைப் பலகைகளாலேயே அமைக்கின்றனர். வீட்டின் வெளிப்புறங்களை மெல்லிய செங்கலை ஒட்டி வடிவ அழகு செய்கின்றனர்; இது ஒரு வகையில் தீயினின்றும் பாதுகாப்பாகவும் அமைகின்றது. இக் காரணத்தாலேயே சாளரங்களும் கண்ணாடியினாலேயே அமைக்கப் பெறுகின்றன. தரை கெட்டியான பஞ்சமைப்பாலான தடித்த விரிப்பினால் மூடப் பெறுகின்றது. சமையலறையிலும் குளியலறையிலும் குழாய் அமைப்புகள் பொருத்தப் பெற்றுள்ள அமைப்பு[3] பீங்கானாலானது; தரையில் தண்ணீர் ஒழுக்கு ஏற்படாமலிருக்க மெல்லிய கடினமான பிளாஸ்டிக் தகட்டினால் மூடப் பெறுகின்றது. குளிக்கும் பகுதி குளிப்பதற்கேற்றவாறு விசாலமான பீங்கான் அமைப்பாலானது; வெந்நீரும் தண்ணீரும் இருபக்கக் குழாயில் சேர்ந்தே வருமாறு அமைந்துள்ளது; கழிப்பறையும் இவ்வமைப்பு கொண்டவையே. தளங்களில் தண்ணீர் ஒழுக்கு ஏற்படாதவாறு பார்த்துக் கொள்வது மிகவும் இன்றியமையாதது. நல்ல கெட்டியான பூச்சுகளைக் கொண்டு சுவர் அழகு செய்யப் பெறுகின்றது. குளிர்காலத்தில் பனிக்கட்டி தங்காமல் இருக்க கூரையைக் கூம்பாக அமைக்கின்றனர். குளிர்காலத்தில் வெப்பமாக இருக்கவும், கோடைகாலத்தில் தண்மையாக இருக்கவும் மின்சார அமைப்புகள் உள்ளன. மூன்றடுக்கு வீடுகள் வரை வீடுகளில் இம்முறை கையாளப் பெறுகின்றது.

மூன்றடுக்குக்குமேல் எழுப்பப் பெறும் கட்டடங்கள் அனைத்தும் செங்கல்-சுண்ணாம்பு, செங்கல்-சீமைக்காரை கொண்டு அமைக்கப் பெறுகின்றன. தரைகளில் பல்வேறு வகைப் பளிங்குகள், வழுவழுப்பான மெல்லிய கருங்கற்கள் பயன்படுத்தப் பெறுகின்றன. 110 அடுக்குகள் வரை இத்தகைய கட்டடங்கள் அமைகின்றன. கட்டட மேல் மட்டத்தில் குளிர்காலங்களில் சில அடிகள் கனம் வரை பனிக் கரைதங்கி, தானாக உருகி வழிகின்றது.

பறவை இனங்களுக்குக் கூடுகட்டுவதற்கு தாவரச் சுள்ளிகள் பயன்படுவது போல், மனிதர்கட்குத் தாவரப் பலகைகள் பயன்படுகின்றன என்பதை நினைத்து பார்த்து வியப்படைகின்றோம். இடம் இருப்பின் பெரும்பாலான வீடுகளின் முன்புறம் அழகான தோட்டங்கள் அமைத்து அதன் பராமரிப்பில் மிக்கக் கவனம் செலுத்தப் பெறுகின்றது. குளிர் காலத்தில் அழியும் செடிவகைகட்குப் பதிலாக, கோடையிலும் வசந்தகாலத்திலும் புதிய செடிகள் வைக்கப் பெறுகின்றன. பல இடங்களில் செடிவகை விற்பனை நிலையங்கள் காணப் பெறுகின்றன.

இந்த வீட்டின் வசதி அமைப்புகளைப் பற்றிச் சில செய்திகளை ஈண்டு தருவேன்.

---

3. Basin

**1. அடுப்பு எரிவாயு:** நம்மூர்களில் உள்ளது போல் சிலிண்டர்கள் இங்கு இல்லை. குழாய் மூலம் எரிவாயு அடுப்புக்கு வருகிறது. வீட்டுக்கு வெளியில் நுழைவாயிலின் அருகில் அளவுகருவி உள்ளது. மாதந்தோறும் அதில் பதிந்து பில் அனுப்புவார்கள். நாம் காசோலை மூலம் தொகை அனுப்பவேண்டும்; பற்றுச்சீட்டு அஞ்சலில் வரும்.

**2. மின்சாரம்:** நம் ஊரில் உள்ளது போலவே மாதந்தோறும் மின்சாரம் செலவான அளவு பதிந்து கொண்டு சென்று பில் அனுப்புவார்கள்; நாம் காசோலை மூலம் தொகை அனுப்ப வேண்டும்; பற்றுச்சீட்டை அஞ்சலில் அனுப்புவார்கள்.

**3. வீட்டுவரி:** அறிவிப்பு வந்தவுடன் காசோலை மூலம் தொகை அனுப்பிவிடலாம்.

**4. குடும்ப வாழ்க்கை:** நான் நேரில் கண்டவரையில், உசாவி அறிந்தவரையில் அமெரிக்காவில் பெரும்பாலோரின் குடும்ப வாழ்க்கை சரியாக இல்லை. பெற்றோர்கட்கும் பிள்ளைகட்கும் இடையே பாசமும் பிணைப்பும் இல்லை. பால் மறந்து கொம்பு தோன்றும் நிலையில் தாயை விட்டுக் கன்றுகள் பிரிந்து செல்வதுபோல, ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் 12-ம் அகவைகளிலேயே பிரிந்து போகின்றனர். அவர்களே கல்வியையும் வேலையையும் தேடிக் கொள்கின்றனர். பிஞ்சிலே பழுத்து, படிக்கும் போதே பெற்றோர்களாகின்றனர். இந்த நிலையில் இவர்கள் படித்து அறிஞர்களாகத் திகழ்வது குதிரைக் கொம்பாக அமைகின்றது. இதனால் இந்தியா போன்ற அயல்நாடுகளினின்றும் அலுவல் பார்ப்பவர்கள் திறமைசாலிகளாகவும் ஒழுங்குள்ளவர்களாகவும் திகழ்கின்றனர்.

அமெரிக்க மக்களிடையே சொத்து சேமிப்பதில் கவனம் இல்லை; சம்பாதிப்பது முழுவதையும் பலவழிகளில் கொட்டித் தீர்த்து விடுகின்றனர். குடும்பப் பிணைப்பு, பாசம் முதலியவை இல்லாமையே இப்போக்கிற்குக் காரணம் என்று கருதலாம். இதனால்தான் முதியவர்க்குரிய மருத்துவமனைகளில் சேர்ந்து விடுகின்றனர். ஈமச்சடங்கை அவரவர் விருப்பப்படி செய்து கொள்ள வாய்ப்புகளும் உண்டு என்பதை மேலே குறிப்பிட்டதை நினைவு கூரலாம்.

**5. செல்லப்பிராணிகள்:** பூனை, நாய் போன்ற செல்லப் பிராணிகளிடம் அமெரிக்க மக்கள் காட்டும் அன்பும் பாசமும் அதிகம். அவற்றின் பராமரிப்பில் அவர்கள் காட்டும் அக்கறையும் ஆர்வமும் சொல்லிமுடியா. அமெரிக்காவில் பெற்றோர்கட்குப் பிள்ளைகளாகப் பிறப்பதைவிட செல்லப்பிராணிகளாக பிறக்கக்கூடாதா என்ற கருத்து புத்தி கூர்மையுள்ள பிள்ளைகளிடம் தோன்றத்தான் செய்யும்.

**6. செய்தித்தாள்கள்:** நியூயார்க் நகரில் மட்டும் 11 ஆங்கில, பிறநாட்டு மொழிகள் கொண்ட செய்தித்தாள்கள் நடைபெற்று வருகின்றன. ஆங்கிலத்தில் வெளியாகும் தாள்களில் NewYork Daily News, New York Post, New-York Times முக்கியமானவை. India weekly-USA என்ற வார இதழும் மிகவும் புகழ்பெற்றது. இந்திய நாட்டில் நடைபெறும் முக்கிய நிகழ்ச்சிகள் அனைத்தும் மிகவும் விரிவாக இதில் வெளிவருவதைக் கண்டுமகிழலாம். அண்மையில் **'ஏ.பி.ஜே. அப்துல்கலாம்'** என்ற உலகப் புகழ் பெற்ற அறிவியல் அறிஞர் இந்தியக் குடியரசுத் தலைவராக வருவதற்கு பெயர் குறிப்பிடப் பெற்றதையும், அவர் ஏகமனதாக தேர்ந்தெடுப்பதைப் பற்றியும் அறிஞர்கள் ஆய்வு செய்வதையும் விவரமாக வெளியிடப் பெற்றதை (ஜூன் 16, 2002), அமெரிக்க வாழ் இந்திய மக்கள் அனைவரும் மகிழ்ந்ததை அறிவோம். India Abroad என்ற தாள் ஒன்று வெளிவருவதைக் கேள்வியுற்றேன். நான் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. India in New York, India Tribune (Periodical) என்ற இதழ்களும் இந்தியாபற்றிய செய்திகளுக்கு முதலிடம் தருகின்றன.

**7. அபூர்வச் செய்திகள்: (அ)** என் மகன் இருக்கும் இல்லத்தின் பின்புற இல்லத்தில் ஒரு முதியவர் இருந்தார். அவர் தோட்டத்தில் ஒரு பேரிக்கா மரம். அதில் சுமார் 30 புறாக்கள். அவற்றிற்குத் தினந்தோறும் தீனி போடுவர். மரத்தின் கிளைகளில் பல பிளாஸ்டிக்காலான சிறு கிண்ணம் போன்ற அமைப்புகளில் அவை நீர்பருக நீர்நிரப்பி வைப்பதுண்டு. புறாக்கள் அதனைப் பருகும். இங்ஙனம் புறாக்களை பராமரித்து மகிழ்ச்சியுடன் வாழ்ந்துவந்தார். அவர் இறக்கும் தறுவாயில் என் மகன் வாழும் இல்லத்தின் உரிமையாளரிடம் புறாக்களின் பாதுகாக்கும் பொறுப்பை ஒப்படைத்தார்(அவர் ஓய்வு பெற்ற வங்கி அதிகாரி; தளர்ந்த நிலை; இருதய நோயாளி). அவரால் ஒழுங்காகக் கவனிக்க முடியவில்லை. அதனால் புறாக்களின் தொகை குறைந்து கொண்டே சென்றது; அவரது இல்லத்தின் முதல் அடுக்கில் வாழும் என் மருமகள் தினந்தோறும் இரண்டு வேளைகளில் பலகணியின் வெளிப்புறத்தில் உணவு வைப்பது வழக்கம். எங்கெங்கோ சுற்றி அலையும் புறாக்கள் வந்து தின்கின்றன. புறாக்களின் எண்ணிக்கையும் குறைந்து கொண்டே வருகின்றது.

2002, ஜூலை 15-ந் தேதி க்கு மேல் என் மகன் அரிசோனா மாநிலத்தில் பெரிய வேலைகிடைத்து அங்குப் போகின்றான். மாடிப் பகுதிக்கு யாரோ ஒருவர் குடியேறலாம். அவர் உணவு வைக்காவிடில் புறாக்களின் கதி ஆண்டவனுக்கு தான் வெளிச்சம்.

**(ஆ)** சுமார் 30 வயதுள்ள ஒரு பெண்மணி சாலையில் எங்காவது சிறு காகிதத்துண்டு கிடைத்தாலும் அதனைப் பொறுப்புடன் எடுத்து குப்பைத் தொட்டியில் போட்டுக் கொண்டு வந்தாள். இது எனக்கு வியப்பாக இருந்தது. இவளைப்பற்றி என் மருமகளிடம் கேட்டேன். பனிக்கட்டி இருக்கும் போது கூடத் தவறாமல் இப்பணி இதுவரை ஓராண்டுக் காலமாகச் செய்து வருவதாகத் தெரிவித்தாள். இப்படித் தொண்டு புரிபவர்களும் உலகில் உள்ளனர். இது வியப்பான செய்தி என்று எனக்குப்பட்டது. ஆதலால் இதனை ஈண்டுப் பதிவு செய்து வைத்தேன். தன்னலம் சிறுதுமின்றி பொதுத் தொண்டில் எந்த ஒரு எதிர்பார்ப்புமின்றிப் பணியாற்றி வரும் இந்த பெண்மணியை பெரிய புராணத்து அடியார்களுடன் ஒப்பிட்டு நோக்கலாம் என்பது அடியேனின் கருத்து.

**8. சிலவீடுகளில் தேசியக் கொடிகள்:** என் மகன் வீட்டில் நியூயார்க்கில் இருந்தபோது பல இடங்களைச் சுற்றிப் பார்த்த போது சில இல்லங்களில் மட்டும் தேசியக் கொடிகள் பறப்பதைக் கண்டேன். காரணம் கேட்டதற்கு "பின்லேடன் உலக வாணிக மையத்தை தாக்கியதைக் கண்ட சில தேச பக்தர்கள், தம் வீடுகளில் இக்கொடியை ஏற்றி வைப்பது தம் தேசபக்தியை வெளியிடுவதற்கு அறிகுறி" என்று தெரிவித்தான் என் மகன் டாக்டர் இராமகிருஷ்ணன்.

டாலஸ்ஸில் என் பேத்தி இல்லத்தில் தங்கியிருந்தபோது, அங்குப் பல இடங்களைச் சுற்றிப் பார்த்த நிலையில் பல இல்லங்களில் 'தேசியக் கொடி' பறப்பது என் கண்ணில்பட்டது. காரணம் கேட்டபோது, "பின்லேடனால் உலக வாணிக மையம் அழிக்கப்பட்ட நிலையில் சில அமெரிக்கமக்கள் இஸ்லாமியர்களின் இல்லங்களைத் தாக்க முயன்றனர். அப்போது "இஸ்லாமியர்களும் தேசியக் கொடியைத் தம் வீடுகளில் பறக்கவிட்டுத் தம் 'தேச பக்தியை' வெளியிட்டனர்" என்று சொன்னாள் என் பேத்தி மிருணாளினி.

இஃது அமெரிக்காவில் தேச பக்தியின் நிலை!

## 2. சாலைகள்

சாலை அமைப்புதான் என்னை மிகவும் கவர்ந்தது. மிக அகலமானதெரு[1] (100 அடிக்குச் சற்றுக் குறைவு), 72 அடி அகலமான தெரு[2] (60 அடி அகலம் உள்ள தெரு[3], அடுத்தது 40 அடி அகலமுள்ள தெரு[4]. இங்ஙனம் சாலைப்பிரிவுகள் அமைந்துள்ளன. எங்கும் பள்ளமோ படுகுழியோ

1. Boulevard
2. Avenue – நம் ஊரில் இது நிழற்சாலை
3. Street
4. Drive

மருந்துக்கும் காணப்பெறா. எல்லாம் தார் சாலைகள் தாம். எழுதும் கற்பலகை போல் மிகச் சமமாக அமைந்துள்ளன. சாலைக்கு இருபுறமும், வெள்ளைச் சீமைக்காரையாலான[5] நடைபாதை அமைப்பு 'பளிச்' என்று கண்ணில்படும். ஊரிலுள்ள சாலைகள் இங்ஙனம் அமைந்திருந்தன. போவதற்கும் வருவதற்குமாக இரு பிரிவுகளும், அவற்றில் தனித்தனியாக இரு கால்வாய்களும்[6] இருக்கின்றன. உலகிலேயே எங்கும் இராத அளவு பல கோடி அளவு கார்களின் பெருக்கம் இங்குள்ளமையால் சாலைகள் இங்ஙனம் கவனிக்கப் பெறுகின்றன போலும்.

**1. பராமரிப்பு:** சாலை பராமரிப்பு சொல்லுந் தரமன்று. வாரம் 2 நாட்கள் குப்பை சேகரிக்கப் பெறுகின்றது. இல்லத்திலுள்ளோர் சமையலறைக் குப்பையை தனியாக ஒரு பிளாஸ்டிக் கூடையிலும், தாள்கள் அமைந்த குப்பையை மற்றொரு பிளாஸ்டிக் கூடையிலும் சாலையோரம் நடைபாதை அருகே வைத்திருப்பர். இவற்றைச் சேகரிக்கும் வண்டிகள் இவற்றைத் தனித்தனியாகச் சேகரித்துச் செல்லும். தவிர கண்ணாடித்துண்டுகள், பிளாஸ்டிக் துண்டுகள் பைகள், தகரம் முதலியவற்றைத் தனியாகச் சேகரித்து அவற்றைத் திரும்பவும் புதிய பொருள்களாக மாற்றியமைக்கும் முறையும் உண்டு.

**2. நெடுந்தொலைவு சாலைகள்:** இவற்றின் அமைப்பும் சிறப்பாக உள்ளது. இங்கு நடைபாதை அமைப்பு இல்லை. இங்கும் போவதற்கு ஒரு பிரிவும் வருவதற்கு ஒரு பிரிவுமாக இருபிரிவுகள் உள்ளன. இரண்டு பிரிவுகளிலும் கால்வாய் அமைப்புகளும் உள்ளன. இங்கும் பள்ளமோ, படுகுழியோ எங்கும் இல்லை. சாலையின் ஓரங்களில் கார் செல்லக் கூடிய வேகங்களைக் குறிப்பிட்டுக் காட்டும் பெயர்ப் பலகைகள் உள்ளன. நெடுஞ்சாலையைக் குறுக்குச் சாலைகள் வெட்டும் பகுதிகள் வரும் இடங்களில் மணிக்கு 15 கல் வேகத்திற்குமேல் இல்லை. பிற இடங்களில் மணிக்கு 20, 25, 30, 40, 50, 65 (இதற்கு மேல் இல்லை) கல் தொலைவுகள் என்று குறிப்பிட்டுள்ள பெயர்ப் பலகைகள் தவறாமல் இருக்கும்.

சாலைகளில் கார்கள் இவற்றைக் கவனித்துச் செல்லுகின்றனவா, அதிவேகத்தில் செல்கின்றனவா என்பதைக் கண்காணிக்க ராடார்[7] அமைப்பைக் கொண்ட வண்டிகளில் காவலர்கள் ரோந்து வருவார்கள். மீறிச் செல்பவரின் வேகம் **ராடாரில்** பதிந்து கொள்ளுமாதலால் அந்த வண்டியை மடக்கிப் பிடித்து விசாரணை நடத்துவார்கள். வண்டியோட்டியின் **உரிமம்**[8], வண்டியின் உரிமம், வண்டியோட்டியின் **ஒளிப்படம்**[9] முதலியன சோதிக்கப்பெறும். உரிய வேகத்திற்கு மேல், வேக அதிகரிப்பிற்கேற்ப

White Cement　　6. Chanels　　7. Radar
License　　9. Photo

**தண்டம்**[10] வேறுபடும். நாங்கள் அட்லாண்டிக் மாநகர் (சூதாட்டக்களநகர்) சென்று கொண்டிருந்தபோது உரிய வேகத்திற்கு மேல் (65) 79 கல் வேகமாகச் சென்றது தெரிந்தது. 14 கல் அதிகமாகச் சென்றதால் 10 டாலர் தண்டம் செலுத்த வேண்டியிருந்தது. திரும்ப இல்லத்திற்கு வந்து காசோலை மூலம் தண்டத் தொகையைச் செலுத்தலாம்.

ஒருவரை விசாரித்துக் கொண்டிருக்கும் போது அதிவேகமாகச் செல்லும் கார்கள் மாட்டிக் கொள்ளாமல் தப்பித்துச் சென்றுவிடும் காட்சிகளைக் காணமுடிந்தது. நடைமுறையில் அதிகமான காவலர் வண்டிகளை வைக்கமுடியாது. வேகமாகச் செல்லும் வண்டிகளை அச்சுறுத்துவதற்காகவே இவ்வமைப்பு ஏற்படுத்த பெற்றுள்ளது. இதனால் குற்றங்கள் குறையுமேயன்றி குற்றங்களை அறவே நீக்க முடியாது. சிறையில் இருப்பவர்கள் மட்டுமா குற்றவாளிகள் ? அதற்குமேல் பன்மடங்கு குற்றவாளிகள் நாட்டில் உலவத்தான் செய்கின்றார்கள் ! அவ்வளவு ஏன் ? சட்டசபையில் சட்டம் நிறைவேற்றுபவர்களில் குற்றவாளிகள் எத்தனை பேர் ?

**3. கட்டணங்கள்:** சாலைகளில் கார் செல்லும்போது வழியில் பல இடங்களில் கட்டணங்கள் செலுத்த வேண்டியிருக்கும். ரொக்கம் தரவேண்டியதில்லை; தந்தால் வாங்கவும் ஏற்பாடுகள் இல்லை. கட்டணங்கள் தண்டப்பெறும் அமைப்பின் பக்கத்தில் கார் செல்லும்போது ஒரு வினாடி அது நின்றுபோகும். அப்போது காரின் முன்புறத்தமைப்பிலும், கட்டணம் வாங்கும் அமைப்பிலும் பொருத்தப் பெற்றுள்ள கருவிகளில் 1 டாலர், 2 டாலர் (குறிப்பிட்டுள்ள விகிதப்படி) பதிந்துகொண்டுவிடும். இது தானாக வங்கிக் கணக்கில் சேர்ந்துகொண்டுவிடும்.

இங்ஙனமே கார்கட்கு டீசல், பெட்ரோல் போடப்பெறும்போதும் ரொக்கம் செலுத்த வேண்டியதில்லை. இவ்வளவு காலன் என்று உறுதிசெய்து கொண்டு 'கிரெடிட் அட்டை'[11] ஒன்றை உரிய இடத்தில் செருகி எண்ணெய்வரும் குழாயை காரில் எண்ணெய் உள்ள இடத்தில் வைத்துவிட்டு, குறிப்பிட்டுள்ள உறுப்பைத் திருகினால் காரில் குறிப்பிட்ட அளவு எண்ணெய் சென்று நிரப்பிவிடும். உரிய இடத்தில் எண்ணெய் விலையைக் குறிப்பிட்டு 'பில்' வெளிவரும். கிரெடிட் அட்டையையும் 'பில்'லையும் எடுத்துக் கொண்டு கிளம்பி விடலாம். எண்ணெய்க்குரிய கட்டணச் செலவு வங்கிக் கணக்கில் சேர்ந்துவிடும்.

எண்ணெய் உள்ள இடத்தில் ஆள்தேவை இல்லை; அவன் ஊதியத்திற்குரிய செலவு மிச்சம்.

**4. குறைந்த செலவு-அதிகத்தொலைவுப் பயணம்:** வேறு பல மாநகர்களின் பொதுப் போக்குவரவு வசதிகளை ஒப்பிட்டு நோக்குமிடத்து,

---

10. Fine

11. Credit Card

நியூயார்க் மாநகரப் போக்குவரத்து மிகக்குறைந்த செலவில் அதிகத் தொலைவுப் பயணம் செய்ய வசதி வாய்ப்பு அளிக்கிறது. 1½ டாலர் அடையாளச் சீட்டு 237 மைலுக்குமேல் சுரங்க இருப்பூர்திகளில் பயணம் செய்ய வாய்ப்பு அளிக்கிறது. சுரங்க இருப்பூர்திகள் அதிவேகமாகவும் இயங்குகின்றன. ஒவ்வொரு நிலையங்களிலும் படங்களுடன் விளக்கக் குறிப்புகள் வைக்கப் பெற்றுள்ளன. சில நிலையங்களில் உள்ளூர் இருப்பூர்திகளும் அதிவேக இருப்பூர்திகளும் இயங்குகின்றன. அநுபவம் இல்லாத பயணிகள் உள்ளூர் ஊர்திகளில் தான் ஏற வேண்டும். அதிவேக ஊர்களில் ஏறித் தாம் இறங்க வேண்டிய இடத்தை விட்டுவிட்டுத் தொல்லைபடலாகாது. உள்ளூர் ஊர்திகள் அனைத்து நிலையங்களிலும் நிற்பதால் தாம் இறங்க வேண்டிய நிலையத்தைத் தவறிப் போகவிட்டுவிட நேரிடுவதில்லை.

நியூயார்க் பெருநகரில் மட்டும் 210 பேருந்துப் பயணவழிகள் உள்ளன. சரியான சில்லறைகளை வைத்துக் கொண்டால் பேருந்துப் பயணங்கள் எளிதாக அமையும்.

**5. வேலை நிறுத்தம்:** நல்ல வசதிகளுடன் இயங்கும் பேருந்துகள், சில சமயம் பேருந்து தொழிலாளர்கள் கடைப்பிடிக்கும் வேலை நிறுத்தங்களால் இயங்காமையால் பொது மக்கள் அவதிக்குள்ளாகின்றனர். எடுத்துக்காட்டாக நாங்கள் வாழும் குயின்ஸ்பரோவிலுள்ள பேருந்துகள் நான்கு ஐந்து நாட்களாக ஓடவில்லை. பேருந்துத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம். அரசு நிர்வாகத்தினரின் அதிகாரச் செறுக்கும், கூட்டம் போட்டு குழப்பங்களை விளைவிக்கும் தொழிலாளர்களின் இறுமாப்பும் பொதுமக்களின் அன்றாட வாழ்க்கையைப் பாதிக்கின்றது. தமிழகத்தில் இத்தகைய நிலைகளை அடிக்கடிக் காண்கின்றோம். ஆனால், நல்ல ஆட்சி முறையும் நல்ல தொழிலாளர்கள் நலமும் நிலவும் அமெரிக்காவில் ஏன் இந்த நிலை? என்பதுதான் என்னை வியக்கவைக்கின்றது; மலைக்கவும் செய்கின்றது.

# 3. அமெரிக்க ஐக்கிய நாடுகள்

50 அமெரிக்க ஐக்கிய நாடுகள்[1] உள்ளன. அவை:

1. அலபாமா
2. அலாஸ்கா
3. அரிசோனா
4. அர்க்கன்சாஸ்
5. கலிஃபோர்னியா
6. கொலராடோ
7. கனெக்டிகட்
8. டெலவார்
9. ஃப்லோரிடா
10. ஜார்ஜியா
11. ஹவாயி
12. ஐட்டாவோ
13. இல்லினாய்ஸ்
14. இண்டியானா
15. அயோவா
16. கன்சாஸ்
17. கென்டக்கி
18. லூசியானா
19. மெய்னே
20. மேரிலாந்து
21. மாசாசூசெட்ஸ்
22. மிச்சிகன்
23. மின்னெசோட்டா
24. மிஸிஸிபி
25. மிசௌரி
26. மொன்டானா
27. நெப்ராஸ்கா
28. நெவெடா
29. நியுகேம்சயர்
30. நியுஜெர்சி
31. நியுமெச்சிகோ
32. நியுயார்க்
33. வடக்கு கரோலினா
34. வடக்கு டக்கோட்டா
35. ஒகியோ
36. ஒக்லாகோமா
37. ஒரிகன்
38. பென்சில்வேனியா
39. ரோடேஐலாந்து
40. தெற்குகரோலினா
41. தெற்குடக்கோட்டா
42. டென்னெஸ்ஸில்
43. டெக்சாஸ்
44. யுடா
45. வெர்மோன்ட்
46. வர்ஜினியா
47. வாஷிங்டன்
48. மேற்கு வர்ஜினியா
49. விஸ்கான்சின்
50. வயோமிங்க்

---

1. United States of America (U.S.A) அகரவரிசையில் (ஆங்கிலம்) தரப்பெறுகின்றது.

1. Alabama
2. Alaska
3. Arizona
4. Arkansas
5. California
6. Colorado
7. Connecticut
8. Delevare
9. Florida
10. Georgia
11. Hawai
12. Idaho
13. Illinois
14. Indiana
15. Iowa
16. kansas
17. Kentucky
18. Louisiana
19. Maine
20. Mariland
21. Massachusetts
22. Michigan
23. Minnesota
24. Mississippi
25. Missouri
26. Montana
27. Nebraska
28. Nevada
29. New Hampshire
30. New Jersey
31. New Mexico
32. New York
33. North Corolina
34. North Dakota
35. Ohio
36. Oklahoma
37. Oregan
38. Pennsylvania
39. Rhode Island
40. South Corolina
41. South Dakota
42 Tennessee
43 Texas
44. Utah
45. Vermont
46. Virgenia
47. Washington
48. West Virgenia
49. Wisconsin
50. Wyoming

**வாஷிங்டன் (டி.சி)** என்பது நமது டில்லிபோல தனியாக இயங்குவது. அதிபர் **புஷ்** தங்கியிருப்பது வெள்ளை மாளிகையில் தான் என்பது நினைவில் இருத்தல் தக்கது.

இந்த 50 மாநிலங்களில் 40 மாநிலங்களில் **முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல்** சூழ்நிலை திகழ்ந்து நாநிலவளத்தை அம்பலப்படுத்துகின்றது. 10 மாநிலங்களில் மட்டும் செழிப்பற்ற (பாலையல்ல) சூழ்நிலை நிலவுகிறது.

**நியுயார்க் மாநகர்:** நியுயார்க் மாநிலத்தின் பெருநகரம் இது. தலைநகர் **ஆல்பனி**[1]. வெளிநாட்டார் அமெரிக்காவை நினைக்கும்போது இப்பெருநகர்தான் அவர்தம் மனத்தில் முன் நிற்கும். அமெரிக்கர்களும் சில அரும் பொருள்களை வாங்க இம் மாநகருக்கு வருவார்கள். இங்குள்ள மக்கள் தொகை ஒரு சதுர மைலுக்கு 23,320 பேர் என்பர். இந்நகரின் 17 விழுக்காட்டு நிலம் பூங்காக்கள், விளையாட்டு மைதானங்கள் நிறைந்தது. அருங்காட்சியகங்கள், கலைக் கூடங்கள், திரையரங்குகள் நிறைந்த பலலட்ச மக்கள் தொகையைக் கொண்டது இப்பெருநகர்.

நியுயார்க்கின் துறைமுகம் உலகத்துறைமுகங்களில் அற்புதமானது; அழகானது. இத்துறைமுகத்தின் எடுப்பான காட்சிப் பொருள் சுதந்திர தேவியின் அற்புதச்சிலை. நியுயார்க் துறைமுகம் மிகச் சுறுசுறுப்பாக இயங்கும் உலகத் துறைமுகங்களில் ஒன்று. இந்நகர் ஒரு பெரிய இருப்பூர்தி மையத்தையும் இலங்குவது; தொழிற்சாலைகளும் நிறைந்தது. இங்கு விளைவிக்கப்பெறும் பொருள்கள் இந்நகரை உலகிலேயே ஒரு பெரிய வாணிக மையமாகத் திகழ வைக்கின்றன.

இம்மாநகரைத் 'தன்னகத்தே கொண்டது ஐம்பது மாநிலங்களில் ஒன்றானதும் மிக புகழ் பெற்றுள்ளதுமான **நியுயார்க் மாநிலம்**. இம் மாநகர் ஐந்து பெரும் பிரிவுகளைக்[2] கொண்டது. அவை பிராங்க்ஸ்[3], புரூக்லின்[4], மான் காட்டன்[5], குயூன்ஸ்[6], ஸ்டேட்டன்தீவு[7]. **ஜமைக்கா** என்பது ஒரு சிறுபகுதி. சென்னையில் அண்ணாநகர், தி. நகர், மயிலாப்பூர், என்பன போன்றது. இது தான் என் மகன் **டாக்டர் இராமகிருஷ்ணன்** வாழிடம்; நான் தங்கியிருந்த இடம். மான்காட்டன், குயின்ஸ், புரூக்லின் என்ற மூன்றும் தீவுகள்; புரூக்லின் பாலத்தால் இணைக்கப் பெற்றுள்ளன. மான்காட்டனின் ஒரு புறம் ஹட்சன் ஆறும், மறுபுறம் ஈஸ்டு ஆறும் சூழ்ந்துள்ளன. ஸ்டேட்டன் ஐலாந்து ஒரு தனித் தீவு. கடலால் சூழப்பெற்றுள்ளது. பிராங்க்ஸ் தீவற்றபகுதி. பிராங்க்ஸின் ஒரு பகுதி 1874-லும் மற்றொருபகுதி 1895-லும் நகருடன் இணைக்கப்பெற்றன.

---

1. Albani
2. Boroughs
3. Bronx
4. Brooklyn
5. Manhattan
6. Queens
7. Staten Island

1883-இல் புரூக்லின் பாலம் கட்டப்பெறும் வரை புரூக்லின் பகுதி தனியாகவே பிரிந்து கிடந்தது. 1898-இல் நிறைவேற்றப்பட்ட சட்டப்படி புரூக்லின் ஒரு பிரிவாக நியுயார்க்குடன் இணைந்தது.

மான் காட்டன் பகுதி, இந்த ஐந்து பகுதிகளிலும் மிகப் பழமையானதும் மிகச் சிறியதுமானதுமாகும். குயின்ஸ் ஒரு சிறு நகரமாக 1683-இல் உருவாக்கப்பெற்றது. இதன் மேற்குபகுதி 1898-இல் இம்மாநகருடன் இணைந்தது. ரிச்மண்ட் (ஸ்டேட்டன் தீவு) ஆதியில் ஸ்டேட்டன் அய்லாந்து என்ற பெயரால் வழங்கியது. இது நெதர்லாந்தின் நிர்வாக சபைக்கும் (States General) பெருமை சேர்க்கும் வகையில் இவ்வாறு வழங்கப் பெற்றது.

பெரும்பாலான பெருநகரங்களில் பாலங்களும் சுரங்கப்பாதை[8]களுமே வாகனப் போக்குவரத்தை விரைவாக இயங்கச் செய்கின்றன. இவற்றுள் ஒன்று **வெரஸ்ஸோனா நேரோஸ் பாலம்**[9]. இது ஒரே வளைவுள்ள பாலத்தில் உலகில் இரண்டாவது. மற்றொன்று **ஆலந்து சுரங்கப்பாதை**[10]. 1927-இல் இதன் வேலை நிறைவேற்றப்பெற்றது. அதன் பொறியியல் செய்திறன் வியத்தகு திறனில் ஒன்றாக இருந்தது. புரூக்லின் **பேட்டரி சுரங்கப்பாதை** உலகப் பெரும்பாதைகளில் உலகில் மிக மிக நீண்டவற்றில் ஒன்றாகும்; அங்ஙனமே **பேயொன் பாலம்**[11]. மிகநீண்ட உருக்கு இரும்பாலான வளைவுகளாலமைந்த பாலங்களில் ஒன்றாகும். புரூக்லின் பாலம் யாதொரு ஐயமுமின்றி அனைவரும் அறிந்த ஒன்று. இதனை ஏமாந்த சோணகிரிகளுக்கு இஃது அற்புதங்களில் ஒன்று என்று ஆசை காட்டி பணம் பறிக்கும் தில்லுமுல்லுகாரர்களின் வேடிக்கைப் பொருளாக இருந்து வந்தது என்பதை இன்னும் மக்கள் மறக்கவில்லை.

இன்று மான்காட்டனும், புரூக்லினும் பல்வேறு அம்சங்களில் மக்கள் கவனத்தை ஈர்க்கும் மிகப்பெரிய பிரிவுகளாக விரிந்து விட்டன. ஸ்டேட்டன் தீவும் நம் கவனத்தை ஈர்க்கின்றது. எல்லா பிரிவுகளும் பலதிறப்பட்ட அம்சங்களில் நம் கவனத்தை ஈர்க்கத்தான் செய்கின்றன.

**மான்காட்டன்-புரூக்லின்** இரண்டும் பல முக்கிய பகுதிகள் அடங்கிய இடங்களாதலால் ஒரு நாள் ஏப்ரல் 8, திங்கள் அன்று இந்த இரண்டு பரோக்களையும் பார்த்து வரலாம் என்று என் மகன் டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன் எங்களை அழைத்துச் சென்றான். அனைத்தும் பார்க்க வேண்டியவை என்றாலும் முக்கியமானவை சிலவற்றை மட்டும் பருந்து நோக்காகப் பார்க்க முடிந்தது. அவற்றை ஈண்டுத் தெரிவிப்பேன்.

---

8. Tunnel
9. Verrazano-Narrous Bridge
10. Holland Tunnel
11. Bayonne Bridge

## மான்காட்டன் கீழ்ப்பகுதி

**1. சீன நகர்[1]:** இங்கு சீனர்களின் உணவுவிடுதிகளும் கடைகளும் வரிசை வரிசையாக அமைந்துள்ளன. நடைபாதைகளில் கூட விற்போர் கூட்டம் மிகுதியாக இருக்கும்.

***2. சுதந்திரதேவியின் சிலை, எல்லிஸ்தீவு[2]***

***3. நியுயார்க் பங்குசந்தை[3]:*** இதன் வெளியில் ஒரு மரம் உள்ளது. அதன்கீழ்தான் ஒரு காலத்தில் வணிகர்கள் சந்தை வாணிகம் நடத்துவார்கள் என்பதற்கு இஃது ஓர் அடையாளமாக அமைந்துள்ளது.

***4. உலக நிதி மையம்[4]:*** வாணிகம் நடைபெறும் முக்கிய இடமாகும். இது கொண்டுள்ள உட்புற வெளிப்புறப் பரப்புள்ள இடம் 3,00,000 சதுர அடி கொண்டது. இதில் 120 அடி உயரமுள்ள வளைவாக அமைந்த கண்ணாடி, உருக்கு இரும்பாலானதும் சலவைக்கல் தரையாலானதுமான குளித்தோட்டம் (Winter Garden) ஒன்றும் அடங்கும். இங்கு கலை நிகழ்ச்சிகள் நடைபெறும். இங்கு நான்கு பகுதிகளில் வாணிகம் நடைபெறும். அலுவலகம், சில்லறை வாணிகம் நடைபெறும் இடம், பொதுமக்கள் தங்கும் இடம் உள்ளன. 30,000 பேர் பணி புரிகின்றனர்.

***5. உலக வாணிக மையம்[5]:*** இது 16 ஏக்கர் பரப்புள்ள காம்ப்ளெக்ஸ். அலுவலகம், இயற்கை காட்சி வெற்றிடம் கொண்டது. இங்குள்ள இரட்டை கோபுர அடுக்கு மாளிகைகள் ஒவ்வொன்றும் 110 தளங்களைக் கொண்டவை. உலகிலேயே இவை மிகமிக உயரமுள்ளவை.

107-வது தளத்திலுள்ள காட்சி அமைப்புக்குக் கொண்டு விரைவாக இயங்கும் மின்விசையேற்றங்கள் உள்ளன. இயங்கும் வெட்டவெளி தளங்கள்[7] பார்வையாளர்களைக் கட்டட உச்சியாகிய 110-வது தளத்திலுள்ள மேடைக்கு எடுத்துச் செல்லுகின்றன. ‘உலக உச்சி’[8] என வழங்கப்பெறும் பார்வைமேடை[9]யிலிருந்து பெரும் நிலப்பரப்பை தெளிவாகக் காணலாம். கண்ணாடியால் அமையப்பெற்ற 107-வது தளம் மான்காட்டனையே கெலிகாப்டர் பயணமாகக் காட்டிவிடும். மேலும், பல்வேறு மொழிகளாலமைந்த கணினி அமைப்புகள் நியுயார்க் மாநகர வரலாற்றையும், அம்மாநகரின் பல பகுதிகளைப்பற்றியுமான தகவல்களைத் தருவனவாக அமைந்துள்ளன.

---

1. China town
2. இவை இரண்டும் பிறிதோர் இடத்தில் விளக்கப் பெற்றுள்ளன.
3. New York Stock Exchange
4. World Financial Centre
5. World Trade Centre
6. Observatony
7. Moving Staircase
8. Top of the world
9. Observation deck

5 மணிக்கு மேல் அமையும் பகலவன் மறையும் மாலை நேரக் காட்சி இலவசமாகக் காட்டப்பெறும். நாள்தோறும் 9-30 முதல் 11-30 வரை பார்வையாளர் அனுமதிக்கப்பெறுவர். பாதுகாப்பு ஏற்பாடுகளால் சுணக்கம் அதிகம். கட்டணம் 13 டாலர். 65 அகவைக்கு மேலுள்ளவர்கட்கு 9½ டாலர்; 13-17 அகவை வரை 11 டாலர்; 6-12 அகவை வரை 6½ டாலர்.

இந்த இரட்டை கோபுர அடுக்கு மாளிகைகள்தாம் **பின்லேடன்** என்ற தீவிரவாதியால் அழிக்கப்பெற்றன; உலக மக்கள் **துக்கக்கடலில்** ஆழ்ந்தனர்.

## மான்காட்டன் நடுப்பகுதி

**1. அமெரிக்கன் அருங்காட்சியகம் (இயற்கை வரலாறு)[10]**

**2. மத்திய பூங்கா[11]**

**3. எம்பயர் ஸ்டேட் கட்டடம்[12]**

**4. இன்ட்ரெபிட்என்ற மிதக்கும் அருங் காட்சியகம்[13]**

**5. நியூயார்க் பொது நூலகம்:** இஃது ஓர் ஆய்வு நூலகம்; இது 5 மில்லியன் (50 இலட்சம்) நூல்களைக் கொண்டது; இவற்றில் பிரத்தியேகமான அமெரிக்கன் வரலாறு, கலைபற்றிய பருவஏடுகள்[14], யூத கீழ்த்திசை இலக்கியம் அடங்கும். முக்கிய அறைகள் செவ்வாய்-புதன் 11-7.30 மணி; வியாழன்-சனி 10-6 மணி; திறந்து வைக்கப்பெறும்; விடுமுறை நாட்களில் மூடப் பெற்றிருக்கும். அனுமதி இலவசம்.

**6. இராக்ஃபெல்லர் மையம்[15]:** இது நிலவறைக்குக் கீழே இருபத்து நான்கு ஏக்கர் பரப்பில் கடைகள், உணவு விடுதிகளைக் கொண்டது. நகரமைப்புத் திட்டத்திற்கு மாதிரியாக இருப்பது. நாமாகச்சென்று பார்ப்பதற்கு வழிகாட்டும் குறிப்பேடு தகவல் மையத்தில் வழங்கப்பெறும்.

**7. என்.பி.சி படம் எடுக்கும் அமைப்பு[16]:** பல்வேறு தொலைக் காட்சிப் படங்கள் எடுக்கப் பெறும் இடம். செய்திகள் முதலியவை படமாக எடுக்கப்பெறும். திங்கள்-சனி 8.30-5.30 மணி; ஞாயிறு 9.30-4.30 மணி; 15 மணித்துளிகள் பார்க்கலாம். 7 மணி முதல் நுழைவுச் சீட்டு விற்பனை தொடங்கும். கட்டணம் 17½ டாலர்; முதியோர், 6-16 அகவையோருக்கு 15 டாலர்; 6 அகவைக்குக் கீழுள்ளவர்க்கு அனுமதி இல்லை.

---

10. விளக்கம் இந்நூல் பக்.60 காண்க
11. விளக்கம் இந்நூல் பக்.52 காண்க
12. விளக்கம் இந்நூல் பக்.78 காண்க
13. விளக்கம் இந்நூல் பக்.65 காண்க
14. Periodicals
15. Rockfeller Center
16. NBC (National Broadcasting Corporation) Studio Tours.

**8. வானொலி நகர் இசை மண்டபம்**[17]: சென்னை இசை அரங்கு[18] போன்ற அமைப்பு இது. இங்கு இசைக் கச்சேரிகள், நாடகங்கள் முதலிய கண்ணுக்கினிய காட்சிகள் நடைபெறும். 5000 பேர் அமர்ந்து பார்க்கலாம்.

**9. ஐ.நா.வின் தலைமைச் செயலகம்**[19]:

**10 பேட்ரிக் தேவாலயம்**[20]: 2 ரோமன் கத்தோலிக்கர் வழிபடும் கோயில். சென்னை சாந்தோமில் உள்ளதைப் போன்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ளவற்றில் இது ஒன்று. 2400 பேர் ஒரே சமயத்தில் வழிபாடு செய்ய வசதியுள்ள கோயில், ரோஜா சாளரம் 26 அடி குறுக்காக அமைந்தது; குழல் உறுப்பு 2380-க்கு மேற்பட்ட குழல்களைக் கொண்டது. கூர்மையான உச்சியைக் கொண்ட 330 அடி உயரமுள்ள இரட்டைக் கோயில் கோபுரங்கள் 14-வது நூற்றாண்டு 'கோதிக்' கட்டிடப்பாணியை நினைவூட்டுவனவாக உள்ளன. இந்தத் தேவாலயம் **உள்நாட்டுப் போருக்கு**[21] முன்பே தயார் நிலையில் இருந்தது. ஆனால், போர் முடிவுற்று 14 ஆண்டுகட்குப் பின்னரே திறக்கப்பெற்றது.

**10. டவுன் டவுன்**[22]: நியுயார்க் தொடக்கக் காலத்தில் உண்டான நகரம் டவுன்[23], நாளடைவில் அதனைச் சுற்றிலும் பல்வேறு கட்டடங்கள் அமைந்து பல்வேறு பகுதிகள் அமைந்த சென்னை தொடக்க காலத்தில் உண்டான நகரம் (Dawn); நாளடைவில் அதை சுற்றிலும் அண்ணாநகர், தி.நகர் போன்ற பல்வேறு பகுதிகள் அமைந்து மிகப் பெரிய நகரமாக உருவானது போல என்று கூறலாம்.

**11. சிறிய இத்தாலி**[24]: இது இத்தாலியர் வாழும் இடம் அவர்கள் அதிகமாகத் தொழில் செய்யும் இடமும் இதுவே. (சீனநகரின் அருகில் உள்ளது)

**12. பிராட்வே தெரு**[25]: 150 கல் தொலைவு நீளமாக அமைந்துள்ள தெரு இது.

**1. புரூக்லின் புராஸ்பெக்ட் பூங்கா**[26]

**2. மெக்ராஹில்**[27]: நூல் வெளியிடுவோர். உலகம் முழுவதும் பல கிளைகளைக் கொண்ட பெரிய நிறுவனம். சென்னை அண்ணாசாலையில் இதன் கிளை அலுவலகம் உள்ளது.

---

17. Radio City Music Hall 18. Music Academey
19. விளக்கம் இந்நூல் பக்.20 காண்க.
20. Patrick's Cathedral
21. Civil war 22. Down-Town 23. Down
24. Little Italy 25. Broadway street
26. Prospect park. விவரம் இந்நூல் பக்.55 காண்க.
27. McGraw Hill

**3. பார்னெஸ்-நோபிள் புத்தகக்கடை**[28]: உலகிலேயே மிகப் பெரிய, புத்தகங்கள் விற்கப்படும் கடை. உள்ளே நுழைந்து பார்த்தோம். புத்தக அடுக்குகள் எங்களை மலைக்க வைத்தன.

**4. நகரமண்டபம்**[29]: இங்கு தான் நியுயார்க்கின் நகரத்தந்தையின்[30] அலுவலகம் உள்ளது.

**5. மிட்டவுன் சுரங்கப்பாதை**[31]: இது 1½ மைல் நீளமுள்ளது. மான் காட்டனையும் குயீன்சையும் இணைக்கின்றது. கடலும் கீழாறும் சேரும் இடத்திற்கு அடியில் செல்லுகின்றது.

**6. புரூக்லின் பாலம்:** மான்காட்டனையும் புரூக்லினையும் இணைக்கின்றது.

28. Barnas and Noble Bookshop.
29. City Hall
30. Mayor
31. Mid Town Tunnel

# 4. ஐக்கிய நாடுகள் (ஐ.நா.)[1]

இரண்டாம் உலகப் போர் நின்று சிறிது காலத்திற்குள் (அக்டோபர் 24, 1945-இல்) இந்த நிறுவனம் அமைக்கப்பெற்றது. போர் அடங்கியதும் ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகியவற்றை எதிர்த்த நாடுகள் யாவும் இத்தகைய போர் என்றும் மீண்டும் நிகழாதிருக்க வேண்டும் என்று தீர்மானித்தன. இந்த நாடுகளின் தேர்ந்தெடுக்கப்பெற்ற சார்பாளர்கள் கலிஃபோர்னியாவிலுள்ள[2] சான்ஃபிரான்சிஸ்கோ[3] நகரில் ஏப்ரல் 1945-இல் ஒன்றுகூடி உலக அமைதிக்கென ஒரு நிறுவனத்தை உண்டாக்கத் திட்டம் வகுத்தார்கள். இந்தத் திட்டம் ஜூன் 1945-இல் **'ஐக்கிய நாடுகளின் விதிகள்'**[4] என்றபெயரில் வெளிவந்தது. இந்தப் பத்திரத்தில் **ஐம்பது** நாடுகள் கையெழுத்திட்டன. இவைதாம் **ஐக்கிய நாடுகளின் முதல்** உறுப்பினர்கள். அதிலிருந்து நூற்றுக்கு மேற்பட்ட நாடுகள் இதில் சேர்ந்தன. இவற்றுள் பெரும்பாலானவை (ஐ.நா. தொடங்கப்பெறும் போது) குடியிருப்பு நாடுகள்[5].

இங்ஙனம் கிட்டத்தட்ட 200 நாடுகளை உறுப்பினர்களாகக் கொண்ட **'ஐக்கிய நாடுகள்'** (ஐ.நா) என்ற இந்த நிறுவனம்[6]. உலக அமைதி, பாதுகாப்பு, மனித நலமேம்பாடு ஆகியவற்றிற்காகச் செயற்பட்டு வருகின்றது. உலகிலுள்ள எல்லாப் பகுதிகளிலுமுள்ள நாடுகள் யாவும் இந்த அமைப்பிற்கு உரியவை. ஒவ்வோர் உறுப்பு நாடும் தமக்கு உரியவர்களாகச் சிலரை ஐ.நா தலைமையகத்திற்குத் தேர்ந்து அனுப்பும். இவர்கள் ஒன்று கூடி பிரச்சினைகளை அணுகிக் கலந்து ஆலோசித்து அவற்றிற்குத் தீர்வு காண்பார்கள்.

ஐ.நா. இரண்டு முக்கியமான நோக்கமுடிவு[7]களைக் கொண்டது. அவற்றுள் **ஒன்று** உலக அமைதி; **மற்றொன்று** மனித மதிப்புடன் கூடிய பெருமிதம். இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட நாடுகளிடையே எங்காவது போர் தொடங்கினால், அதனை நிறுத்த முயலுமாறு ஐ.நா. வைக் கோரலாம். போர் நின்றதும் ஐ.நா. அத்தகைய போர் மீண்டும் தொடங்காதிருக்கும் பொருட்டு வழிவகைகளை ஆராயும். ஆனால், எல்லாவற்றிறிகும் மேலாக ஐ.நா. போர் தொடங்குவதற்கு முன் அதற்குக் காரணமான பிரச்சினைகளையும் தகராறுகளையும் தீர்த்து வைக்க முயலும்.

---

1. United Nations  2. California  3. San Francisco
4. Charter of the United Nations  5. Colonies
6. Organization  7. Goals

அது போருக்குரிய காரணங்களைத் தேடி ஆராய்ந்து அவற்றை அடியோடு நீக்க வழி வகைகளைக் காண முயலும்.

தன்னுடைய செயற்பாட்டில் ஐ.நா. வெற்றியையும், தோல்வியையும் சந்தித்துள்ளது. பெரும்போரில் கொண்டுவிடும் தகராறுகள் நேரிடா வண்ணம் தடுத்துள்ளது. இந்த நிறுவனம் உலகில் பெரும்பாலான பகுதிகளில் வாழும் மக்கள் விடுதலை பெறவும், இவர்களிடையே நல்வாழ்வு அமையவும் உதவுகின்றது. ஆனால், உறுப்பு நாடுகளிடையே நேரிடும் கருத்து வேறுபாடுகளும் ஒத்துப் போகாப் பண்புகளும் இதனுடைய பணியை முற்றிலும் சிறப்பாகவும் திறமையாகவும் அமைதியை நிலைநாட்ட முடியாமல் தடுத்து விடுகின்றன. கடுமையான நிதி நெருக்கடிகளும் ஐ.நா.வைப் பலமிழக்கச் செய்துவிடுகின்றன.

## முக்கிய அங்கங்கள்-செயற்பாடுகள்

ஐ.நா.வின் ஆறு முக்கிய அங்கங்கள் தன்னுடைய முக்கிய செயற்பாடுகளைக் கொண்டு செலுத்தத் துணை புரிகின்றன.

**1. பொதுப் பேரவை[8]:** இதுதான் முக்கியமானது; எல்லா ஐ.நா. உறுப்பினர்களும் அடங்கிய அமைப்பு இது. விதிகளின்படி எந்த முக்கியமான பிரச்சினையையும் கலந்து ஆலோசிக்கலாம்; உறுப்பினர்களோ, அல்லது ஐ.நா.வின் பிற பகுதிகளோ எடுக்க வேண்டிய நடவடிக்கைகளைக் குறித்துப் பரிந்துரை செய்யலாம். ஒவ்வொரு உறுப்பினரும் ஐந்து சார்பாளர்கள்[9], பதிலான சார்பாளர்கள்[10], தாங்கள் விரும்பும் வரை எண்ணிக்கையுள்ள அறிவுரை கூறுவோர்[11] தேர்ந்தெடுத்து அனுப்பலாம். எனினும் ஒவ்வொருவருக்கும் **ஒரே ஒரு வாக்கு** அளிக்கும் உரிமைதான் உண்டு. ஆண்டுதோறும் நடைபெறும் கூட்டத்தில் பேரவை ஒரு தலைவர், பலதுணைத் தலைவர்களைத் தேர்ந்தெடுக்கும். தலைவர் ஒருவரே கூட்ட நடவடிக்கைகளை கவனிப்பார்.

**2. பாதுகாப்பு ஆலோசனை அவை[12]:** இதுதான் ஐ.நா. வின் முக்கிய பங்காகிய அமைதியை நிலை நாட்டும் பொறுப்பை வகிக்கின்றது. இந்தப் பொறுப்பைச் செயற்படுத்த விதிகள் இதற்குத் தனிப்பட்ட அதிகாரம் நல்கியுள்ளன.

**3. செயலகம்[13]:** ஐ.நா வின் எல்லாப் பகுதிகளும் தம் கடமைகளை இயன்றவரை மிகத் திறமையாக நிறைவேற்றற்குரிய எல்லாவித உதவிகளையும் செய்யும்.

---

8. General Assembly   9. Delegates   10. Alternate Delegates
11. Advisers   12. Security Council   13. Secretariat

**4. பொருளாதார சமூக ஆலோசனை அவை[14]:** விதிகளின் படி மனித உரிமைகளைப் பாதுகாக்கும் பொறுப்பை நிலை நிறுத்திக் கொள்ளவும், மக்கள் தம் வாழ்க்கை வசதிகளை மேம்படுத்திக் கொள்ள உதவவும் செய்யும்.

**5. அனைத்துலக நாடுகளின் நீதிமன்றம்[15]:** இந்நாடுகளிடையே நேரிடும் சட்ட சம்பந்தமான வழக்குகளைக் கவனிக்கும்.

**6. அறக்கட்டளை ஆலோசனை அவை[16]:** ஐ.நா. அமைக்கப்பெற்றபோது தாமாக-ஆட்சிப் பொறுப்பேற்ற நாட்டுப் பகுதிகளைக் கருத்துடன் கவனித்துக் கொள்ளும்.

விதிகளை வகுக்கும் போது ஐ.நா. வேறு பல அமைப்புகள்[17], குழுக்கள், ஆணையங்கள் ஆகியவற்றை அமைத்தன. ஆனால், இந்த ஆறு அமைப்புகளே விதிகளின்படி செயற்பட்டுக் கொண்டிருக்கும்.

ஐ.நா. தலைமைச் செயலகம் கீழாறுகள் ஓரத்திலுள்ள நியுயார்க் மாநகர்ப் பகுதியுள் பல்வேறு கட்டடங்களைக் கொண்டுள்ளன. இவற்றுள் மூன்று முக்கிய கட்டடங்கள். இவை:

**பொதுப் பேரவைக் கட்டடம்[18], செயலகக் கட்டடம்[19], மாநாடு கூடும் கட்டடம்[20]** என்பவையாகும். ஐ.நா. உறுப்பினர்கள், இருக்கை வகைகள் கலைவேலைப் பாடுகள் அடங்கிய சிற்பங்கள், சிலைகள் ஆகியவை ஐ.நா.வுக்கு அன்பளிப்பாக அளித்துள்ளார்கள்.

நாடுகளுடன் நட்புறவுகள் நிலை நாட்டுவதற்கும் மனித உரிமைகளைப் பாதுகாப்பதற்கும், கல்லாமை, நோய், பசிப்பிணி ஆகியவற்றை ஒழிப்பதற்கும் செயற்பட்டு வரும் ஐ.நா. மனித நல மேம்பாட்டிற்காக முற்றிலுமாகப் பயன்படுத்திக் கொள்ளப்பெற வேண்டும். இன்றைய நிலையோ அதிகமாகிக் கொண்டு வரும் மிகச் சிக்கலான சவால்களும் தொல்லைகளும் நிறைந்தவை; காலநிலை மாற்றம், பயங்கரவாதம், போதைமாத்திரை கடத்தல், அமைதியில் கீறல்கள், அகதிகள்-மக்களிடையே எழுந்துள்ள போராட்டங்கள் ஆகியவை இவற்றுள் அடங்கும். இங்ஙனமாக இந்த ஐ.நா. எதிர்பாராத உரிமைத் தேவைகளைச் சந்திக்கும் நிலையிலும் புதிய சந்தர்ப்பங்களில் பணிபுரியும் நிலையிலும் உள்ளது.

---

14. Economic and Social Council
15. International Court of Justice
16. Trusteeship Council 17. Agencies
18. General Assembly Building
19. Secretariat Building. இது கண்ணாடி, சலவைக் கல்லாலான 39–மாடிக் கட்டடம்.
20. Conference Building. இது மூன்று கட்டடங்களையும் இணைக்கின்றது.

ஐ.நா.வுக்குத் தனிப் பாதுகாப்பு வசதிகள், தீயணைக்கும்படை வசதிகள், தனி அஞ்சல் நிலைய வசதிகள் உள்ளன. தன்னுடைய அலுவல் முறைகளை அரபு, சீனம், ஆங்கிலம், ஃபிரெஞ்சு, உருஷிய, ஸ்பானிஷ் மொழிகளில் நடத்தி வருகின்றது இந்த நிறுவனம்.

இந்த நிறுவனத்தின் முன்பாக வடதிசையிலுள்ள ஆப்கானிஸ்தானம் தென் திசையிலுள்ள ஜிம்பாப்வே[21] வரையிலுள்ள அனைத்து நாடுகளின் கொடிகள் பறந்த வண்ணம் உள்ளன. இவை நாள்தோறும் காலையில் ஏற்றப்படும்; மாலையில் இறக்கப்படும்.

**விதிமுறைகள்:** விதிமுறைகளே ஐ.நா.வின் ஆட்சிமுறைச் சட்டம்[22]. இது ஐ.நா.வை உண்டாக்கின திட்டத்தையும், ஐ.நா. இயங்கும் விதிகளையும் கொண்டது. ஐ.நா. உறுப்பினர்கள் விதிமுறைகள் கூறும் அனைத்தையும் ஒப்புக் கொண்டுள்ளார்கள். இந்த விதிமுறைகள் 19 இயல்களாக பிரிக்கப்பெற்று 111 விதிகளையும் கொண்டது. இந்த விதிகளில் ஐ.நா.வின் நோக்க முடிவுகளும்[23], அடிப்படை நம்பிக்கைகளும், ஐ.நா. இயங்கும் முறைகளும் அடங்கும்.

**நோக்க முடிவுகள்:** விதிமுறைகள் **நான்கு** நோக்கமுடிவுகளைப் பட்டியலிட்டுக் காட்டுகின்றன. அவை: 1. உலக அமைதியையும் பாதுகாப்பையும் கெடாமல் நிலை நிறுத்தல்; 2. நாடுகள் யாவும் தமக்குள்ளும் பிறவற்றோடும் நியாயமாகவும் நேர்மையாகவும் நடந்து கொள்ளுதல்; 3. தம்முடைய பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ள நாடுகள் ஒத்துழைப்பை நல்குதல்; 4. இந்த நோக்க முடிவுகள் சரியாக நடைபெறுவதற்கு தாம் கருவிகளாக இயங்கிச் செயற்பட இசைதல்.

**அடிப்படை நம்பிக்கைகள்:** விதிமுறைகள் **ஏழு** அடிப்படை நம்பிக்கைகளைத் தெரிவிக்கின்றன. 1. உறுப்பினர்கள் அனைவருக்கும் சரிசமமான உரிமைகள் உண்டு; 2. எல்லா உறுப்பினர்களும் விதிமுறைகள் கூறும் கடமைகளை நிறைவேற்றுவார்கள் என்று எதிர்பார்க்கப் பெறுகின்றனர். 3. தமக்குள் நேரிடும் முரண்பாடுகளையும் பிணக்குகளையும் சமாதான முறையில் தீர்த்துக் கொள்ள ஒப்புக் கொள்கின்றனர்; 4. தமக்குள்ள பாதுகாப்பைத் தவிர, பிற நாடுகளுக்கு எதிராகத் தம் பலத்தைப் பயன்படுத்தவோ, பலத்தைக்காட்டி அச்சுறுத்தவோ கூடாது என்பதை ஒப்புக் கொள்கின்றனர்; 5. விதிமுறைகளிலுள்ள நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு ஐ.நா. எடுக்கும் ஒவ்வொரு நடவடிக்கையிலும் உதவுவதற்கு உறுப்பினர்கள்

---

21. Zimbabwe 22. Constitution 23. Goals

ஒப்புக் கொள்ளுகின்றனர்; 6. உலக அமைதியையும் பாதுகாப்பையும் உறுப்பினர் நாடுகளைப் போலவே உறுப்பினரல்லாத நாடுகளும் அதே கடமைகளைக் கொண்டுள்ளனர் என்பதை ஐ.நா. ஒருவகையில் செயற்படுவதற்கு ஒப்புக் கொள்ளுகின்றது; 7. உறுப்பினர் நாட்டுக்குள்-தமது எல்லைக்குள் எடுக்கும் நடவடிக்கைகளுள் ஐ.நா. தலையிடாது என்ற விதியை ஒப்புக் கொள்ளுகின்றது. ஆனால், இந்த நடவடிக்கைகள் மற்ற நாடுகட்குத் தீங்கு பயப்பதாக அமையக் கூடாது.

**உறுப்பினராகும் முறை:** 1945-இல் விதிமுறைகளில் கையெழுத்திட்ட நாடுகள் தாம் முதல் உறுப்பினர்களாக அமைந்தனர். அன்று முதல் வேறுபல நாடுகளும் இந்த அமைப்பில் சேர்ந்து கொள்ள வேண்டுகோள்கள் விடுத்தனர். 'அமைதியை விரும்பும் நாடுகள் அனைத்தும்', விதிகளில் கூறும் கடமைகளைக் கடைப்பிடித்து நடைமுறைப்படுத்த 'மனதார ஒப்புக் கொள்ளுமானால்' ஐ.நா.வில் உறுப்பினராகச் சேரலாம் என்று இந்த நிறுவனம் வரவேற்கின்றது. பாதுகாப்பு ஆலோசனை அவையும் பொதுப்பேரவையும் உறுப்பினராவதற்குரிய விண்ணப்பங்களை அங்கீகரிக்க வேண்டும். விதிமுறைகளுக்கு மீறி ஒருநாடு செயற்பட்டால் அந்த நாடு உறுப்பினர் பதவியிலிருந்து தற்காலிக நீக்கத்திற்கு உட்படுத்தப் பெறலாம்; அல்லது ஐ.நா.விலிருந்தே வெளியேற்றப்படலாம்.

**விதிகள் மாற்றம்:** விதிமுறைகளில் மாற்றம் செய்ய வேண்டுமானால் அதற்கும் இடம் தந்துள்ளது. மாற்றங்கள் வேண்டுமானால் இருமுறைகளில் கொண்டு வரப்பெறலாம். பொதுப்பேரவை உறுப்பினர்களில் **மூன்றில் இரண்டு பங்கு** உறுப்பினர்கள் ஒப்புக்கொண்டால் மாற்றங்கள் செய்யப் பெறலாம்; அல்லது பொதுப்பேரவையில் **மூன்றில் இரண்டுபங்கு** உறுப்பினர்களும் பாதுகாப்பு ஆலோசனைக் குழுவில் ஏதாவது ஒன்பது உறுப்பினர்களும் **பொது மாநாட்டைக்**[24] கூட்டி விதி முறைகளில் மாற்றம் செய்வதைக் குறித்து ஆராயலாம். இந்த மாநாட்டில் **மூன்றில் இரண்டு பங்கு** பேர் வாக்குகள் அளித்தால் தான் மாற்றம் பற்றி ஆராயலாம். பாதுகாப்பு ஆலோசனைக் குழு அவையின் நிரந்தரமான **ஐந்து உறுப்பினர்கள்** உட்பட ஐ.நா.வின் எல்லா உறுப்பினர்களில் **மூன்றில் இரண்டு பங்கு** உறுப்பினர்கள் ஒப்புதல் அளித்தால்தான் இந்த மாற்றம் அமுலுக்கு வரும்.

ஐ.நா. வினுடன் தொடர்புள்ள தனிப்பட்ட முறையில் செயற்படும் அமைப்பில் முக்கியமானவை **ஐந்து**. அவை:

---

24. General Conference

1. ஐ. நா. கல்வி அறிவியல் பற்றிய அமைப்பு[25]
2. உலக உடல் நலப் பாதுகாப்பு அமைப்பு[26]
3. ஐ.நா. குழந்தைகள் திடீர் அத்யாவசிய நிதி[27]
4. உணவு உழவுத் தொழில் அமைப்பு[28]
5. அனைத்து நாடுகளின் தொழிலாளர் நல அமைப்பு[29]

இவற்றில் முதலாவதாகக் குறிப்பிடப் பெற்றுள்ள அமைப்பின் ஆதரவில்தான் சென்னை பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர் **சர்.ஏ.எல். முதலியாரும், வரலாற்றுத்துறையைச் சார்ந்த பேராசிரியர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியாரும்** இணைந்து ஏற்படுத்தியதுதான் **தெற்கு தென் கிழக்கு ஆசிய நாடுகளின் மரபுவழிப் பண்பாட்டு நிறுவனம்**[30]. இதில் தான் அடியேன் **1996**-பிப்ரவரி முதல் **2002** வரை **மதிப்பியல் இயக்குநராகப்**[31] பணியாற்றி வந்துள்ளேன்.

---

25. UNESCO -United Nations Education and Scientific Organization. இஃது இப்போது பெயர் மாற்றம் அடைந்து விட்டது.
26. WHO-World Health Organisation.
27. UNICEF-United Nations Children's Emergency Fund.
28. FAO-Food and Agricultural Organization.
29. ILO-International Labour Organization.
30. Institute of Traditional Cultures of South and South East Asia.
31. Honorary Director.

# 5. நியூயார்க் மாநிலத்தில் உள்ளவை

## 1. திருக்கோயில்கள்

என் அமெரிக்கப் பயணத்தில் **நான்கு** திருக்கோயில்கட்குச் சென்றுவர வாய்ப்புகள் நேரிட்டன. அவைபற்றிய விவரங்களை ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

***1. கணபதி கோயில்:*** மார்ச்-30, சனிக்கிழமை காலை11.30-க்கு என் மகன் இல்லத்திற்கு அண்மையில் (நான்கு கல் தொலைவு) உள்ள இத்திருக்கோயிலுக்குக் காரில் சென்று வந்தோம். அமெரிக்காவில் சற்றேறக்குறைய மூன்று திங்கள் தங்கியிருக்கப் போகும் அடியேனுக்கு முதன் முதலாகக் கிடைத்த விநாயகர் தரிசனம் கிடைத்தற்கரிய பெரும் பேறாகத் தோன்றுகின்றது. இத்திருக் கோயிலின் முதல் தெய்வமான விநாயகரை,

*காலைப் பிடித்தேன் கணபதி!*
*நின்பதம் கண்ணி லொற்றித்*
*நூலைப் பலபல வாகச்*
*சமைத்து நொடிப் பொழுதும்*
*வேலைத் தவறு நிகழாது*
*நல்ல வினைகள் செய்துன்*
*கோலை மனமெனும் நாட்டின்*
*நிறுத்தல் குறியெனக்கே*
*- பாரதியார் விநா. நான்மணி-22*

என்ற பாடலை ஓதி உளங் கரைந்து உருகி வழிபடுகிறேன்.

அடுத்து என் உள்ளத்தைக் கொண்டு என் இதய கமலத்தில் நிரந்தரமாக எழுந்தருளியிருந்து எனக்கு நல்வழி காட்டிவரும் எம் பெருமான் **திருவேங்கடவனை,**

*'அகல கில்லேன் இறையும்' என்று*
*அலர்மேல் மங்கை உறைமார்பா!*
*நிகரில்புகழாய்! உலகம் மூன்று*
*உடையாய்! என்னை ஆள்வானே!*
*நிகரில்அமரர் முனிக்க ணங்கள்*
*விரும்பும் திருவேங் கடத்தானே!*

*புகல்ஒன்று இல்லா அடியேன்உன்*
*அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே*
*- திருவாய் 10:10*

என்ற **நம்மாழ்வார்** பாசுரத்தை ஓதி உளங்கரைந்து அவன் இணைத் தாமரை அடிகளை வழிபடுகின்றேன்.

அடுத்து திருக்கோவிலில் பரிவார தேவதைகளாக எழுந்தருளியிருக்கும் கடவுளர்களை வழிபடுகின்றேன். முதலாவதாக,

*மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து*
*உன்விரையார் கழற்கென்*
*கைதான் தலைவைத்துக் கண்ணீர்*
*ததும்பி வெதும்பி யுள்ளம்*
*பொய்தான் தவிர்த்துன்னைப் போற்றி*
*சயசய போற்றி யென்னும்*
*கைதான் நெகிழவி டேன்உடை*
*யாய்என்னைக் கண்டு கொள்ளே*
***- திருவா. திருச்ச....1***[1]

என்ற மணிவாசகப் பெருமான் திருப்பாடலை உள்ளம் நெகிழ ஓதி வணங்குகின்றேன்.

அடுத்து அம்மன் சந்நிதிக்கு வருகின்றோம். அப்பெருமாட்டியை,

***கார்ஒழுகும் குழலாளை கருணைவழித்து***
***ஒழுகும்இரு கடைக்கண் ணாளை***
***சேல்குழ நிலவுஒழுகப் புழுகுஒழுக***
***அழகுஒழுகும் முகத்தி னாளை***
***வார்ஒழுகும் தனத்தாளை வடிவுஒழுகித்***
***தெரியாத மருங்கு லாளை***
***சீர்ஒழுகும் பதத்தாளை, அருணை உண்ணா***
***முலையாளைச் சிந்தை சேர்ப்போம்***
***- அருணாசலப்புராணம்-9***

அடுத்து ஆறுமுகன் சந்நிதிக்குப் போகின்றோம். அந்த வள்ளி நாயகனை,

---

1. நான் எட்டாம் வகுப்பில் பயின்றபோது (1932) என் ஆசிரியர் திரு. இராமசாமி அய்யர். இப்பாடலை இசையோடு பாடி அநுபவித்துக் கற்பித்து அழுதலை நினைவு கூர்கின்றேன்.

*புன்னெறி யதனிற் செல்லும்*
*போக்கினை விலக்கி மேலா*
*நன்னெறி ஒழுகச் செய்து*
*நவையறு காட்சி நல்கி*
*என்னையும் அடியனாக்கி*
*இருவினை நீக்கி யாண்ட*
*பன்னிரு தடந்தோள் வள்ளல்*
*பாதபங் கயங்கள் போற்றி* - ***கந்தபுராணம்-14***

தெய்வயானைக் கொழுநனை வணங்கிய பின் பூமகள் சந்நிதிக்கு வருகின்றோம். அவளை,

*மாதவன் சக்தியினைச்-செய்ய*
*மலைவளர் மணியினை வாழ்த்திடுவோம்;*
*போதுமிவ் வறுமையெலாம்-எந்தப்*
*போதிலும் சிறுமையின் புகைதனிலே*
*வேதனைப் படுமனமும்-உயர்*
*வேதமும் வெறுப்புறச் சோரர்மதியும்*
*வாதனை பொறுக்கவில்லை-அன்னை*
*மாமகள் அடியினை சரண்புகுவோம்.*

*நாரணன் மார்பினிலே-அன்பு*
*நலமுற நித்தமும் இணைந்திருப்பாள்*
*தோரணப் பக்தரிலும்-பசுத்*
*தொழுவிலும் சுடர்மணி மாடத்திலும்*
*வீரர்தம் தோளினிலும்-உடல்*
*வியர்த்திட உழைப்பவர் தொழில்களிலும்*
*பாரதி சிரத்தினிலும்-ஒளி*
*பரவிட வீற்றிருந் தருள்புரிவாள்*
***- பாரதியார். தோ. பா. திருமகளைச் சரணம் புகுதல்-1,4***

என்ற பாடல்களில் பெரிய பிராட்டியாரைச் சரண் புகுதல் சாற்றப்படுகின்றது. இப்பாடல்கள் திருமகளின் நிலை தீட்டப்பெறுவதைச் சிந்திக்கச் செய்கின்றது. திருமகள் புருஷகாரபூதை (தகவுரை வழங்குபவள்) மட்டும் அல்லள்; தானே தனித்தியங்கும் அதிகாரத்தையும் பெற்றவள் (வடகலை) என்பதையும் எண்ணச் செய்கின்றன.

இந்தப் பெருமாட்டியைச் சேவித்த நிலையில் திருவரங்கத்துப் பெருமானின் திவ்விய மங்கள விக்கிரகம் (திருமேனி) சுவரில் தீட்டப்பெற்றிருப்பது நம் கவனத்தை ஈர்க்கின்றது. உடனே,

*பண்டை நான்மறையும், வேள்வியும் கேள்விப்*
*பதங்களும், பதங்களின் பொருளும்,*
*பிண்டமாய் விரிந்த பிறங்குஒளி அனலும்*
*பெருகிய புனலொடு நிலனும்*
*கொண்டல்மா ருதமும், குரைகடல் ஏழும்*
*ஏழுமா மலைகளும், விசும்பும்,*
*அண்டமும் தானாய் நின்றஎம் பெருமான்*
*அரங்கமா நகர்அமர்ந் தானே* **- பெரி.திரு. 3.9:1**

என்ற பாசுரம் நம் மனத்தில் குமிழியிட்ட வண்ணம் அப்பெருமானை வணங்கி மகிழ்கின்றோம்.

அடுத்து நடராசர் சந்நிதிக்கு வருகின்றோம். வள்ளலார் பாடல் மனத்தில் எழுகின்றது.

***கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த***
***குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே***
***ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைதண் ணீரே***
***உகந்ததண்ணீர் இடைமலர்ந்த சுகந்தமண மலரே***
***மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே***
***மென்காற்றில் விளைசுகமே சுகத்தில்உறும் பயனே***
***ஆடையிலே எனைமணந்த மணவாளா பொதுவில்***
***ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே***
***- ஆறாம் திருமுறை-அருள்விளக்க மாலை-2***

என்ற பாடலை மனத்தினுள் மெதுவாக ஓதி உளங்கரைந்து உருகுகின்றோம். **இசையரசி கொடுமுடி சுந்தராம்பாள்** இசையொலியும் நம் காதில் ரீங்காரம் இடுகின்றது. அடுத்து காமாட்சியம்மையின் சந்நிதி நம்மை ஈர்க்கின்றது. அப்பெருமாட்டியை வழிபட வள்ளற் பெருமான் கை கொடுத்துதவுகின்றார்.

***அரங்காய மனமாயை அளக்கர் ஆழம்***
***அறியாமல் கால்இட்டுஇங்கு அழுந்து கின்றேன்***
***இரங்காயோ சிறிதும்உயிர் இரக்கம் இல்லா***
***என்மனமோ நின்மனமும் இறைவி உன்தன்***

***உரங்காணும் அரசியற்கோல் கொடுங்கோல் ஆனால்***
***துடிஎங்கே புகுந்துஎவருக்கு உரைப்பது அம்மா***
***நிரங்காணாப் பிள்ளைஎனத் தாய்வி டாளே***
***சிவகாம வல்லிஎனும் தெய்வத் தாயே***
***- நான். திருமுறை. சிவகாமவல்லி துதி-1***

என்ற பாடலால் தாயிடம் கொஞ்சுவதுபோல் கொஞ்சுகின்றோம்.

அடுத்து இராமன் சந்நிதிக்கு வருகின்றோம் இராமன் சீதையுடனும், தம்பி இலக்குவனுடனும் காட்சி தருகின்றான். இவனை,

*வானின்று இழிந்து வரம்பிகந்த*
*மாபூ தத்தின் வைப்பெங்கும்*
*ஊனும் உயிரும் உணர்வும் போல்*
*உள்ளும் புறனும் உளன்என்ப*
*கூனும் சிறிய கோத்தாயும்*
*கொடுமை இழைப்பப் கோல்துறந்து*
*கானும் கடலும் கடந்துஇமையோர்*
*இடுக்கண் தீர்த்த கழல்வேந்தே*
***- கம்ப. அயோ. கடவுள் வாழ்த்து***

என்ற கம்பன் வாக்கினால் அயோத்தி அண்ணலை வழிபடுகின்றோம்.

ஐயப்பன் சந்நிதியை அடைந்து, இக்காலத்தில் பெரும் புகழுடன் திகழும் அப்பெருமகனை,

*சாமியே சரணம் ஐயப்பா*
*சாமியே சரணம் ஐயப்பா*
*சாமியே சரணம் ஐயப்பா*

என்று மூன்று முறை மக்கள் வாக்கில்-அவர்களது நாக்கில்-தாண்டவமாடும் தொடரைச் சொல்லி வணங்குகின்றோம். இறுதியாக 'ஒன்பது கோள்' (நவக்கிரகம்) சந்நிதிக்கு வருகின்றோம். இதுபற்றி ஞானசம்பந்தப் பெருமானின் "கோளறு பதிகம்" நினைவிற்கு வருகின்றது.

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
*மிகநல்ல வீணை தடவி*
*மாசறு திங்கள்கங்கை முடிமேல் அணிந்தென்*
*உளமே புகுந்த அதனால்*

*ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்வியா ழன்வெள்ளி*
*சனிபாம்பு இரண்டு முடனே*
*ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல*
*அடியா ரவர்க்கு மிகவே*

**– சம்.தே. 2.85:1**

என்ற பாடலை ஓதி நவகோள்களையும் வழிபடுகின்றோம்.

சிறிது நேரம் திருக்கோயிலில் அமர்ந்து தெய்வ சிந்தனையுடன் அமைதியாக இருந்து இல்லம் திரும்புகின்றோம். நியுயார்க்கில் தங்கியிருந்தபோது அண்மையிலுள்ளது இத்திருக்கோயிலே யாதலால் பலதடவைகள் இங்கு வந்து வழிபட வாய்ப்புகள் நேரிடுகின்றன.

**இரண்டாம் முறை:** ஏப்ரல்-13 யுகாதி (தெலுங்கு வருடப் பிறப்பன்று)யன்று இந்தத் திருக்கோயிலுக்குச் சென்று வந்தோம். மாலை 4.30 மணிக்குப் புறப்பட்டோம். பேருந்து நிற்குமிடத்திற்கே ஒரு பர்லாங் நடக்க வேண்டும்; திருக்கோயிலருகே பேருந்து நிற்குமிடத்திலிருந்து மீண்டும் அரை ஃபர்லாங் நடை கட்டவேண்டும்.

கோயிலருகில் வெளிப்புறமாக ஓர் ஓரத்தில் மிதியடிகள் வைக்கும் இடம் உள்ளது. மரச்சட்டங்களாலமைந்த பல அறைகளுடன் கூடிய அமைப்பு இது. இதில் அடையாளமாக நம் மிதியடிகளை வைத்துச் செல்ல வேண்டும். வைத்துவிட்டுத் திரும்பும் போது திருக்கோயிலுக்கு அடியில் (சுரங்கத்தில்) செல்லும் வாசல் ஒன்று தென்பட்டது. என்ன என்று வினவிய போது அங்கு ஒரு பெரிய மண்டபம் ஒன்று இருப்பதாகவும் திருமணம் முதலியவை நடைபெறுவதற்கும் சமயக் கூட்டம் நடைபெறுவதற்கும் அதனைப் பயன்படுத்துவர் என்றும் கூறினர். நாங்கள் உள்ளே சென்று அதனைப் பார்க்கவில்லை.

நிதானமாக அமைதியாகப் பார்த்ததால் மனமகிழ்ச்சி. சேவையும் மிகச்சிறப்பாக நடைபெற்று விநாயகருக்கும் ஏழுமலையானுக்கும் அர்ச்சனை செய்வித்தோம். ஏனைய கடவுளரையும் நிதானமாகச் சேவித்து மகிழ்ந்தோம்.

இங்கு அர்ச்சகர் தேங்காய் உடைப்பதில்லை. தேங்காய் உடைப்பதற்கென்றே ஒரு தனியான இடம், அங்குத் தேங்காய்கள் குவியலாக வைக்கப் பெற்றுவிட்டு நாமே அதனையுடைத்து அர்ச்சனைக்காக வாங்கின பழம், ஊதுவத்தி, கர்ப்பூரம் அடங்கியதட்டில் தேங்காய் மூடிகளையும் போட்டுத் தந்து விட வேண்டும். அர்ச்சனை முடிந்தவுடன் தட்டு பொருள்களுடன் நம்மிடம் வந்து சேர்ந்துவிடும்.

தீபாராதனைத் தட்டில் நாம் நம்மூரில் பணம் போடும் வழக்கம் உள்ளது. அந்தப்பணம் நம்மூரில் அர்ச்சகரைச் சேரும். இங்கு அந்தப் பணத்தை அய்யர் எடுத்துக் கொள்வதில்லை. அவர்தட்டில் சேரும் தொகைகளைச் சந்நிதிக்கு முன் வைக்கப் பெற்றுள்ள உண்டியில் சேர்த்து விடுவார். இந்த நடைமுறை ஏன் என்று வினவியதற்கு அவர் நல்ல மாத ஊதியம் பெறுவதால் இத்தொகைகளை அவர்எடுத்துக் கொள்ளக்கூடாது என்று விதிமுறைகள் இருப்பனவாக அறிந்தோம்.

பேருந்து வசதிகளைப் பார்ப்பதற்கென்றே இம்முறை பேருந்தில் சென்றோம். ஓட்டுநர் ஒருவரே. **நடத்துநர்** என்ற வேறொருவர் இங்கு இல்லை. கட்டணத்துக்குரிய தொகையை ஓட்டுநர் அருகில் வைக்கப்பெற்றுள்ள அமைப்பில் போட்டுவிட்டு நாம் இருக்கையில் அமர்ந்து கொள்ளலாம். பாஸ் வைத்திருப்பவர்கள் பாஸை அந்த அமைப்பில் செருகினால் அதில் குறியிட்டு மேலே வரும்; நாம் எடுத்துக் கொண்டு இருக்கைக்குப் போகலாம். கூட்டம் அதிகமாக இருக்கும்போது நிற்பதற்கும் பிடிகள் பொருத்தப்பெற்றுள்ள வசதிகள் உள்ளன. வண்டி நின்றவுடன் இருமுனைகளிலும் உள்ள கதவுகள் தாமாகத் திறக்கும். ஏறும் முனையிலுள்ளவர்கள் தொகையைப் போட்டுவிட்டு இருக்கைக்குப் போவார்கள்; இதே முனையிலும் சிலர் இறங்குவார்கள். பெரும்பாலும் இறங்கும் முனையிலுள்ள வழியிலேயே இறங்குவார்கள். பயணிகள் இறங்கியதும் இரு முனைகளிலுள்ள கதவுகள் தாமாக மூடிக் கொள்ளும். இங்குள்ள பேருந்து வசதி முறை என் மனத்தை மிகவும் கவர்ந்தது.

அண்மையில் உள்ள கோயிலானதால் பலமுறை சென்று வரும் வாய்ப்புகள் இருந்தன. விநாயகரும் ஏழுமலையானும் என்னை அதிகமாக ஈர்த்தனர்.

**நியுயார்க் ஸ்ரீமகா வல்லப மகாதேவஸ்தான ஆதரவில் நடைபெற்ற கூட்டத்தில் ஆற்றிய உரை**

மே மாதம் 11 சனியன்று மாலை 5 மணிக்கு நியுயார்க் நகர் ஸ்ரீ மகா வல்லப மகா கணபதி தேவஸ்தான ஆதரவில் ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தார் என் நண்பர் **டாக்டர் அம்பத்தி எம். ராவ்**[1]. இவர் என் மாணவி கோமதியின் (திருப்பதியில்) கணவர். பேசவேண்டிய பொருள் '**வைணவ-சைவ தத்துவங்கள்-ஓர் ஒப்பீடு**' என்பது. பேச்சின் சாரம் ஈண்டுத் தரப்பெறுகின்றது.

---

1. என்னைப்பற்றிய குறிப்பு தயாரித்து கூட்டத்தில் வினியோகம் செய்தவிவரம் பின்னிணைப்பு–2 இல் தரப் பெற்றுள்ளது.

1916 ஆகஸ்ட்டில் தமிழகத்தில் (இந்தியா) பிறந்த நான் 2002 மே மாதம் நியூயார்கில் (அமெரிக்கா) பேசவேண்டும் என்பது என் பிராரப்தகர்மத்தின்[2] (நுகர்வினையின்) பயன். 'முறை வழிப்படும் ஆருயிர்' (புறம்-192) என்பது சங்கப் புலவர் கணியன் பூங்குன்றனாரின் வாக்கல்லவா ? (படம் - 1)

தமிழகத்தில் சைவப் பெருமக்களின் கூட்டம் அதிகம்; பாடின புலவர்களின் கூட்டமும் அதிகம். ஆகவே, சைவ சமய இலக்கிய நூல்களும் சைவ தத்துவ (சித்தாந்த) நூல்களும் பல்கிப் பெருகியுள்ளன. வைணவப் பெருமக்களின் கூட்டம் குறைவு; பாடிய புலவர்களின் தொகையும் குறைவு, ஆகவே வைணவ சமய இலக்கியங்களும் தத்துவ நூல்களும் அளவில் குறைவு. சைவ நூல்களில் நாலில் ஒரு பங்காவது இருக்குமா என்பது ஐயப்பாடே. இதுகாறும் எந்த அறிஞரும் இந்த அளவு மதிப்பீட்டில் இயங்கித் தம் கருத்தை வெளியிடவில்லை. (படம் - 2), (படம் - 3), (படம் - 4)

இந்த ஒப்பீட்டை இலக்கியத் தொகுப்பு முதல் தத்துவங்கள் வளர்ச்சி வரை கொண்டு செலுத்துவோம்.

## 1. இலக்கியத் தொகுப்பு:

இரண்டு சமய இலக்கியத் தொகுப்புகளிலும் உண்மை வரலாறு சிறிது கற்பனையும் கலந்தே காணப்பெறுகின்றன. இரண்டும் சைவர்களால் 'கோயில்'[3] எனக்குறிப்பிடப் பெறும் சிதம்பரத்துக்கருகிலுள்ள இரண்டு ஊர்களிலிருந்தே தொடங்குகின்றன.

**1. காட்டு மன்னார் கோயில்:** சிதம்பரத்திற்கு மேற்கே சுமார் முப்பது கி.மீ. தொலைவிலுள்ளது இவ்வூர். அந்த ஊர்த் திருமால் ஆலயத்தில் **நாதமுனிகள்** என்ற வைணவப் பெருமகனார் ஒருவர் **'மன்னனார்'** என்ற பெயர் கொண்ட திருமால் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தில் வழிபாடு முதலிய திருத்தொண்டுகள் புரிந்து வந்தார்.

ஒரு சமயம் மேல் நாட்டிலிருந்து போந்த இரண்டு வைணவச் சீலர்கள் 'ஆராஅமுதே' எனத் தொடங்கும் பாசுரத்தை (திருவாய் 5.8:1) ஓதி வழிபட்டனர். அதில் பலசுருதல் பாசுரத்திலுள்ள **'ஆயிரத்தில் இப்பத்தும்'** என்று வரும் தொடரைச் செவிமடுத்த நாத முனிகள் இவை தவிர 'ஏனையவை தெரியுமா ?' என வினவ, அதற்கு அவர்கள் 'யாம் அறியோம்; இவை மட்டுமே யாங்கள் அறிந்தவை' என்று மறுமொழி பகர்ந்தார்கள். இந்தப்

---

2. பல்வேறு பிறவிகளில் செய்த வினையில் தொகுப்பு 'சஞ்சிதம்' (பழவினை); இதன் ஒரு பகுதியால் இப்பிறப்பு நேரிடுகின்றது. இப்பகுதி பிராரத்தம் (நுகர்வினை) என்பது. இப்பிறப்பில் செய்து வரும் வினை ஆகாமியம் (எதிர்வினை).
3. வைணவப் பெருமக்கள் திருஅரங்கத்தைக் 'கோயில்' என்றே குறிப்பிடுவர்.

பதிகம் கும்பகோணத்திலுள்ள **சார்ங்கபாணிப் பெருமாள்** பற்றியது. நாதமுனிகள் உடனே கும்பகோணம் சென்று இப்பதிகத்தை அப்பெருமாள் திருமுன் உளங்கரைந்து ஓதி அவர் இசைவு பெற்று அப்பதிகத்தைப் பாடிய நம்மாழ்வார் பிறந்த திருத்தலமாகிய **ஆழ்வார் திருநகரிக்கு**[4] வருகின்றார். "இந்தப் பாசுரங்கள் இருந்தால் வேதத்திற்குள்ள மதிப்பு போய்விடும் என்று கருதி அவை பொறிக்கப்பெற்றுள்ள ஓலைச் சுவடிகள் அனைத்தையும் இவ்வூர்ப் பார்ப்பனர்கள் தண்பொருநையாற்றில் ஓடவிட்டு விட்டனர்" என்று பலரும் ஒரேவிதமாகக் கூறினர். மேலும் உசாவியதில் அவர்கள் "இவ்வூரில் **'பராங்குசதாசர்'** என்ற நம்மாழ்வாரின் சீடர் ஒருவர் உள்ளார். (பராங்குசர் என்பது நம்மாழ்வாரின் பல திருநாமங்களில் ஒன்று). அவரிடம் நம்மாழ்வாரின் சீடராகிய மதுரகவியாழ்வார் தம் குருநாதர்மீது பாடிய பத்துப் பாசுரங்கள் அடங்கிய **'கண்ணி நுண் சிறுத்தாம்பு'** (முதலாயிரம்-கண்ணிநுண்) என்ற பதிகம் உள்ளது. அவரை நெருங்கி விசாரித்தால் உண்மை தெரியலாம்" என்று தெரிவித்தனர். நாதமுனிகள் அவரிடம் போந்து உசாவ அவர் "**'கண்ணிநுண் சிறுத்தாம்பைப்'** பக்தியுடன் ஓர் இலட்சம் தடவை ஓதி உளங்கரைந்தால் ஏதாவது வழிபிறக்கும்" என்று மறுமொழி பகர்ந்தார்.

நாதமுனிகள் சிறந்த **யோகி**. 'கண்ணிநுண் சிறுத்தாம்பைப்' பராங்குசதாசரிடம் பெற்ற நாதமுனிகள் அர்ச்சை நிலையிலுள்ள நம்மாழ்வார் திருமுன் யோகத்தில் அமர்ந்து அப்பதிகத்தைப் பலநாட்களில் ஓர் இலட்சம் தடவை ஓதி உளங்கரைந்தார். முனிகளின் பக்தி நிலைக்கு உவந்த ஆழ்வார் தம் அர்ச்சை சமாதி (விக்கிரக நிலை)யைக் கடந்து உண்மைவடிவை எய்தி, தாம் அருளிய **திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி** என்ற பிரபந்தங்களையும் ஏனைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களையும் இவருக்கு அருளினார். இவற்றைப் பெற்ற நாதமுனிகள் வேதத்தை முனிவர்கள் **இருக்கு, யசூர், சாமம், அதர்வணம்** என்று **நான்காக** வகுத்தது போல் இப்பிரபந்தங்களை இசைக்கு ஏற்ற பாசுரங்களை **முதலாயிரம், பெரியதிருமொழி, திருவாய்மொழி** என்றும், இசைக்கு அடங்காதவற்றை **இயற்பா** என்றும் ஆக நான்காகத் தொகுத்து வெளியிட்டார். நாதமுனிகள் திருநகரியிலிருந்து காட்டு மன்னார் கோவிலுக்குத் திரும்பியதும் அவருடைய ஒன்றுவிட்ட சகோதரர்களாகிய **மேலை அகத்தார், கீழை அகத்தார்** என்பவர்கள் பதிகங்களுக்கு சுரம், தாளம் முதலியவற்றை அமைத்தனர். பிற்காலத்தில் **அமுதனார்** பாடியருளிய

---

**4.** இத்திருத்தலம் நெல்லை மாவட்டத்தில் நெல்லையிலிருந்து திருச்செந்தூர் செல்லும் இருப்பூர்தி வழியிலுள்ள சீவைகுண்டம் என்னும் திவ்விய தேசத்திற்கருகிலுள்ள மற்றொரு திவ்வியதேசம்.

**இராமாநுச நூற்றந்தாதி** என்ற பிரபந்தத்தையும், நம்மாழ்வார்மீது மதுரகவிகள் பாடிய கண்ணிநுண் சிறுத்தாம்பை நாலாயிரத்துடன் சேர்த்ததுபோல் அமுதனார் அருளிய பிரபந்தமும் நாலாயிரத்துடன் சேர்த்துக் கொள்ளப் பெற்றது. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் தொகுக்கப்பெற்ற வரலாறு இத்துடன் நிறைவு பெறுகின்றது.

**2. திருநாரையூர்:** இத்தலமும் கோயிலுக்கு மேற்கே சுமார் பத்துக் கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. இங்கு சுயம்புவாக எழுந்தருளியுள்ள **பொல்லாப் பிள்ளையார்** என்ற திருநாமம் கொண்ட விநாயகப் பெருமானை அந்தணர் ஒருவர் வழிபட்டு வந்தார். அவருக்கு **நம்பியாண்டார் நம்பி** என்ற ஒரு மகன் உண்டு. நம்பியாண்டார் நம்பி சிறுவனாக இருந்த பொழுது ஒரு சமயம் தந்தையாருக்கு ஒரு சில நாட்கள் ஓர் அலுவல் நிமித்தமாக வேற்றூர் செல்ல நேர்ந்தது. சிறுவனிடம் பிள்ளையார் வழிபாட்டுப் பொறுப்பை விட்டுச் சென்றார்.

சிறுவன் நம்பி அன்னையார் தயாரித்த கொழுக்கட்டைகளை வைத்து நைவேத்தியம் செய்தார்; கொழுக்கட்டைகளை உண்ணுமாறு விநாயகரை வேண்டினார். அர்ச்சை நிலையிலுள்ள பிள்ளையார் அசையவில்லை. சிறுவன் பிள்ளையாரை நோக்கி, "பிள்ளையாரே, இவற்றை நீ சாப்பிடாவிட்டால் நானும் உண்ணாவிரதம்" என்று கூறி சண்டித்தனம் செய்யவே, பிள்ளையாரும் தமது அர்ச்சை சமாதியைக் கடந்து உண்மை விநாயகராகி தும்பிக்கையால் அனைத்துக் கொழுக்கட்டைகளையும் வாங்கி வாயினுள் செலுத்தி உண்டுவிட்டார். சிறுவனுக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. அம்மகிழ்ச்சிப் பெருக்கோடு சிறுவன் வீடு திரும்பினான்.

அன்னையார் "கொழுக்கட்டைகள் எங்கே?" என்று கேட்க, மைந்தன் "பிள்ளையார் தின்று விட்டார்" என்று மறுமொழி பகர்ந்தவுடன் அன்னையாரால் இவன் சொல்லை நம்ப முடியவில்லை. "நீ நம்பாவிட்டால், நாளை வந்து நீயே பார்" என்று சொல்லிவிட்டான் அந்த அருமைச் சிறுவன். அடுத்த நாள் அன்னையார் தம் அருமை மைந்தன் செய்த பிள்ளையார் வழிபாட்டை மறைந்திருந்து கவனித்தார். பிள்ளையார் கொழுக்கட்டை தின்றதை தம் "கண்ணாலேயே" பார்த்துவிட்டார். சொல்லற்கரிய வியப்பெய்தினார். இச்செய்தி விரைவில் எங்கும் பரவியது. ஊர்மக்களெல்லாம் சிறுவனின் பிள்ளையார் வழிபாட்டை மெச்சினர்; பாராட்டி மகிழ்ந்தனர்.

சிறுவன் பிள்ளையாரை நோக்கி "பிள்ளையாரே, சிலநாட்கள் பள்ளிக் கூடம் போகாமையால், வாத்தியார் அடிப்பார். இனி நான் பள்ளி போகேன். நீ தான் எனக்குப் பாடம் புகட்ட வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான்.

பிள்ளையாரும் அச்சிறு வயதிலேயே அவனது மனமுதிர்ச்சியை அறிந்து அவனுக்கு அனைத்துக் கலைகளையும் உபதேசித்தார். நம்பியும் சிறந்த ஞானியானார். இது நம்பியாண்டார் நம்பி பற்றிய வரலாறு. இஃதுடன் இது நிற்க.

திருவாரூரில் சோழப் பேரரசன் அபயகுலசேகரன் என்ற இராஜராஜ சோழன் தம் அவைக்களத்தில் உள்ள சிவனடியார்கள் மூவர் பாடிய தேவாரப் பதிகங்களுள் தமக்குத் தெரிந்த ஒவ்வொரு திருப்பதிகத்தையே ஓதக் கேட்க நேரிடுகின்றது. அதன்படி மூவர் தேவாரம் பல்கிப் பெருகிக் கிடக்கும் செய்தியை அறிகின்றான். எங்கும் தேடியும் அப்பக்திச் செல்வம் கிடைக்கவில்லை. நம்பியாண்டார் நம்பியின் 'அற்புதப் பிள்ளையாரின் வழிபாட்டு வரலாறு' அவன் செவிக்கு எட்டுகின்றது. ஏராளமான கொழுக்கட்டைகளைக் கொண்டுவந்து நம்பியாண்டார் நம்பியின் முன் சமர்ப்பித்து பிள்ளையாருக்கு நைவேத்தியம் செய்வித்து உண்ணச் செய்வித்து தேவாரச் செல்வம் இருக்குமிடத்தைத் தெரிவித்து வழிகாட்டுமாறு வேண்டச் செய்தான். கொழுக்கட்டைகளையெல்லாம் உண்டு மகிழ்ந்த விநாயகப் பெருமான் "தேவாரச் செல்வத்தை மூவர் முதலிகள் சிதம்பரம் கோயிலின் மேற்குக் கோபுர வாயிலின் மேல் மாடியில் வைத்துள்ளனர்" என்று தெரிவிக்க, அரசனும் மட்டற்ற மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கின்றான். நம்பியாண்டார் நம்பியை இட்டுக் கொண்டு கோயிலை அடைகின்றான். நம்பியாண்டார் நம்பி தீட்சிதர்களை நாடி மாடியைத் திறந்து காட்டுமாறு வேண்டுகின்றார். "இச்செல்வத்தை மூவர் முதலிகள் வைத்துச் சென்றனர். அவர்கள் வராமல் மாடியைத் திறக்க முடியாது" என்று சொல்லி மறுத்துவிட்டனர்.

'பாம்பின் கால் பாம்பு அறியு'மல்லவா ? தீட்சிதர்களின் பணத்தாசையை அறிந்து கொண்டு விடுகின்றார் நம்பிகள். அரசனைக் கொண்டு தீட்சிதர்கள் மனம் உகக்குமாறு "சம்பாவனைகள்" செய்வித்தார். மூவர் முதலிகளின் திருமேனிகளைச் சப்பரத்தில் எழுந்தருள்வித்து திருவுலாவரச்செய்து கோபுர வாயிலில் கொண்டு வந்து நிறுத்தி "தீட்சிதர்களே, மூவர் எழுந்தருளியுள்ளனர். மேல் மாடியின் திருக்காப்பு நீக்குவீர்களாக" என்று நம்பிகள் கேட்டுக் கொண்டபடி தீட்சிதர்கள் திருக்காப்பு நீக்கி சுவடிகளைப் பார்க்க அனுமதி வழங்கினர். நம்பியாண்டார் நம்பி அவற்றை எடுத்துப் பார்த்ததில் பெரும்பாலான பகுதி கரையானுக்கு இரையாகி இருந்தது. அரசன், நம்பிகள் உட்பட அனைவரும் மனங் கவன்றனர். "இக்காலத்துக்குத் தேவையானவை மட்டும் உள்ளன" என்று அசரீரி மூலம் அனைவரும் கேட்டனர்; சமாதானம் அடைந்தனர்.

நம்பியாண்டார் நம்பி அவற்றையெடுத்து சோதித்து ஒவ்வொருவர் வாக்குகளாக வந்தவற்றைப் பிரித்து வகைப்படுத்தினார். அவர்கள் முக்தியடைந்த காலத்தை முன்வைத்து அதன்படி முறை அமைத்தார். அவற்றிலும் சில வரையறைகளுடன் பிரித்து வைத்தார். பதினாறு வயதில் நடைபெற்ற திருமணத்தன்றே முக்தியடைந்த ஞானசம்பந்தப் பெருமானது பதிகங்களை **முதல் மூன்று** திருமுறைகளாகவும்; அடுத்து 81 அகவையில் சிவப்பேறு அடைந்த நாவுக்கரசரின் பதிகங்களை சிலவரையறைப்படி பாகுபாடு செய்து, **நான்கு, ஐந்து, ஆறாம்** திருமுறைகளாகவும்; இந்த இரு பெருமக்கள் முக்தி அடைந்த பிறகு பல ஆண்டுகட்குப் பிறகு பிறந்த சுந்தரமூர்த்தியின் திருப்பாடல்களை **ஏழாம் திருமுறை**யாகவும் அமைத்து அடைவுபடுத்தினார்.

சிறிதுகாலம் கழித்து பிற்காலத்தார் மணிவாசகப் பெருமான் அருளிய திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் **எட்டாம் திருமுறை**யாகவும்; ஒன்பதின்மர் அருளிய **ஒன்பது பிரபந்தங்களை ஒன்பதாம் திருமுறை**யாகவும்; **திருமூலர்** திருவாய் மலர்ந்த **திருமந்திரம் மூவாயிரத்தைப் பத்தாம் திருமுறை**யாகவும்; 11 பேர் அருளிய 27 பிரபந்தங்களை **பதினோராந் திருமுறை**யாகவும் அமைத்தனர். இதில் நம்பிகளின் பிரபந்தங்களும் இடம் பெற்றுள்ளன. சில காலம் கழிந்த பின்னர் சேக்கிழார் அடிகள் பாடிய முதற்புராணமாகிய பெரிய புராணம் **பன்னிரண்டாம் திருமுறை**யாகச் சேர்ந்து விடுகின்றது. இத்துடன் ‘இலக்கியத் தொகுப்புகள்’ நிறைவு பெறுகின்றன.

## 2. தத்துவங்கள்

இனி இருசமய தத்துவங்களைப்பற்றிய ஒப்பீட்டை நோக்குவோம்.

### வைணவ தத்துவம்

***சித்து:*** இதில் எறும்பு, கொசுமுதலாக மனிதன் ஈறாக அனைத்து உயிர்த்தொகுதிகளும் அடங்கும்.

***அசித்து:*** புல்பூண்டு முதல் அனைத்துத் தாவரவர்க்கங்களும் மண், கல் முதல் அண்டங்கள் அனைத்தும் இப்பகுதியுள் அடங்கும்.

***ஈசுவரன்:*** இது கடவுள். சைவர்கள் குறிப்பிடும் ஈசுவரன் (சிவன்) வேறு இங்கு இச் சொல் திருமால் முதலிய தெய்வங்களைக் குறிக்கும்.

### சைவ தத்துவம்

***பதி:*** கடவுள். இதில் சொரூப சிவன், தடத்தசிவன் இரண்டும் அடங்கும்.

***பசு:*** உயிர்த் தொகுதிகளைச் சித்தாந்தம் இவ்வாறு பேசும்.

சிற்றறிவுடைய உயிர்கள் அனைத்தும் இதில் அடங்கும்.

***பாசம்:*** 'பாசம்' என்பதற்குக் 'கட்டுவது' என்பது பொருள். உயிர்களைப் பிணித்து நிற்கும் இது ஆணவம், கன்மம், மாயை என்று மூவகைப்படும்.

***வைணவம்:*** சித்தாகிய உயிர்களை மூவகையாகப் பிரித்துப் பேசும். அவை:

***1. பத்தர்:*** தளைப்பட்டிருப்பவர்கள். இவ்வுலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் இதில் அடங்கும்.

***2. முத்தர்:*** தளைகளைக் களைந்து விட்டு பரமபதத்தை அடைந்தவர்கள் இதில் அடங்குவர்.

***3. நித்தியர்:*** சம்சார சம்பந்தம் இல்லாமல் பரம பதத்திலுள்ள அனந்தன், கருடன், சேனை முதலியார் (விசுவக்சேனர்) இப்பகுதியுள் அடங்குவர்.

***சைவம்:*** பசுவாகிய உயிர்த் தொகுதிகள் இங்கும் மூவகையாகப் பிரித்துப் பேசப்பெறும். அவை:

***1. விஞ்ஞானகலர்:*** விஞ்ஞானத்தால் கலை நீங்கப் பெற்றவர்கள். ஆணவம் என்ற ஒருமலம் உடையவர்கள்.

***2. பிரளயாகலர்:*** பிரளயத்தில் கலைநீங்கப் பெற்றவர்கள். ஆணவம், கன்மம் என்ற இருமலம் உடையவர்கள்.

***3. சகலர்:*** கலையோடு கூடியவர்கள். ஆணவம் கன்மம், மாயை என்ற மூன்று மலங்களையும் உடையவர்கள். கலை-தேவையான கூறு.

***வைணவம்***

***அசித்து***

***1. சுத்த தத்துவம்:*** இராசதம், தாமசம் என்ற குணங்கள் கலவாதது, பரமபதத்திலுள்ள விமானம், கோபுரம் முதலியவை இதில் அடங்கும். இவை மாறாமல் (Disintegration) அப்படியே இருக்கும்.

***2. மிச்ரத்துவம்:*** சத்துவம், இராசதம், தாமசம் என்ற முக்குணங்களை உடையது. இதனால் இது 'திரிகுணம்' என்ற பெயராலும் வழங்கும். முக்குணங்கள் சமமான நிலையில் உள்ளபோது பிரகிருதியின் விகாரங்கள் நாம ரூப பேதமில்லாமல் பிரமாணங்களால் காணக் கூடாதபடி அதிசூக்குமங்களாக இருக்கும். இதுவே மகாப் பிரளயநிலை. இந்த முக்குணங்கள் ஏற்றத் தாழ்வை அடையுங்கால் இந்தப்பிரகிருதி பலவித தத்துவங்களாக மாறி நாம ரூபவிசேடத்தை உடையனவாகும். இவை பிரமாணங்களால் காணக் கூடியவை. புலன்கள்-5, பொறிகள்-5, கருமேந்திரியங்கள்-5, ஞானேந்திரியங்கள்-5, மகத்-1, அகங்காரம்-1, மனம்-1,

மூலப்பிரகிருதி-1 ஆக தத்துவங்கள் 24; இவற்றுடன் ஆன்மா (புருஷன்), பரமான்மா (புருஷோத்தமன்) சேர வைணவ தத்துவம் 26 ஆகின்றது.

**3. சத்துவசூனியம்:** இதுவே காலத்துவம். இது நிமிடம், நாழிகை முதல் பரார்த்தம் வரையிலுள்ள பகுதிகளைக் கொண்டது.

**அண்டங்கள் 14.** கீழ்அண்ட கபாலத்தின் மேல் இருப்பது '**கர்ப்போதகம்**'. இதன்மேல் **அதலம், விதலம், நிதலம், தராதலம், மகாதலம், சுதலம், பாதலம்** என்ற ஏழு உலகங்கள் அடங்கும். இவற்றிற்கு மேல் நாம் வாழும் **பூலோகம்** அமைந்துள்ளது. இதற்கு மேல் **புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், ஜனர்லோகம், தபோலோகம், சத்தியலோகம்** என்ற ஆறு உலகங்கள் உள்ளன.

**சைவம்:**

**பாசம்** (1) ஆணவம், (2) கன்மம், (3) மாயை. மூவகை உயிர்களின் பொருட்டு உலகங்களும் மூவகையாக உள்ளன.

**(1) சுத்தப்பிரபஞ்சம்:** விஞ்ஞானகலருக்கு உரியது.

**(2) மிச்சிரப்பிரபஞ்சம்:** பிரளயாகலருக்கு உரியது.

**(3) அசுத்தப்பிரபஞ்சம்:** சகலருக்கு உரியது.

இவை மிகச் சிக்கலாகப் போகின்றன விளக்குவது கடினம்.

இங்கு ஆன்மதத்துவங்கள் 24; விவரம்; அந்தக்கரணங்கள் (சித்தம், புத்தி, அகங்காரம், மனம்) 4, ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, தந்மாத்திரைகள் 5, பூதங்கள் 5 ஆக 24. தத்துவம் 36.

**அண்டங்கள் 14.** அண்டங்களுக்குப் '**பிரமாண்டம்**' என்று பெயர் (பிரமம்-பெரியது). நாம் வாழும் பிரம்மாண்டத்தின் நடுப்பகுதி பூமியின் மேற்பரப்பாகும். இதுவே '**பூலோகம்**' எனப்படுவது. இதன் கீழே **அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதலம்** என்கின்ற **ஏழு** உலகங்கள் உள்ளன. இவற்றின் கீழே பாவிகள் சென்றடையும் 28 கோடி நரகங்கள் உள்ளன.

பூலோகத்தின் மேல் **புவலோகம், சுவலோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம்** என்னும் ஆறு உலகங்கள் உள்ளன.

**ஈசுவரன்:** வைணவத்தில் சீமந் நாராயணனே முதற் கடவுள். **கம்பன்** மூலபலவதைப் படலத்தில் கூறுவது. 'பிரளயகாலத்தில் அனைத்தையும் தன் வயிற்றில் அடக்கிக் கொண்டு ஆலிலையில் பள்ளி கொண்டிருப்பதாகக் கூறுவன். இதுவே நாராயணன் முதற் கடவுளாக இருப்பதற்குச் சான்று' என்பது.

***ஐந்து நிலைகள்***

***1. பரத்துவம்:*** *நித்திய விபூதியில் (வைகுந்தம்) மூன்று தேவிமார்களுடன் ஒக்க எழுந்தருளியிருக்கும் இருப்பு.*

***2. வியூகம்:*** *லீலாவிபூதியில் (இந்த உலகில்) படைப்பு, அளிப்பு, அழிப்புச் செயல்கள் நடைபெறவும், சம்சாரிகளைக் கவனிக்கவும், உபாசிப்பவர்களுக்கு அருள் சுரக்கவும்* ***வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்நன், அநிருத்தன்*** *என்ற பெயர்களுடன் இருக்கும் இருப்பு.*

***3. விபவம்:*** *ஆவேச அவதாரம், முக்கிய அவதாரம். அடைந்தாரைக் காத்தல், விரோதிகளைப் போக்கல், வைதிக தர்மங்களை நிலைநிறுத்தல் ஆகியவை பொருட்டு.*

***4. அந்தர்யாமித்துவம்:*** *சேநர்களின் இதய கமலத்தில் மங்களகரமான திருமேனியுடன் பெரிய பிராட்டியாரோடு கட்டைவிரல் அளவாய் எழுந்தருளியிருக்கும் இருப்பு*

***5. அர்ச்சாவதாரம்:*** *அடியார்கள் விரும்பும் திருமேனிகளையும் திருப்பெயர்களையும் கொண்டிலங்கும் இருப்பு. எல்லாநிலை எம்பெருமான்களும் இந்நிலையி லிருப்பதால் ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்தது இந்நிலை எம்பெருமான்களையே.*

***பதி:*** *சைவத்தில் சிவபெருமானே முழுமுதற்கடவுள். சங்கார காரணனே முதற்கடவுள் (சி.ஞா.போ.1)* ***கம்பன்*** *மூலபலவதைப் படலத்தில் 'தீமொய்த்த அனைய செங்கண்' (231) என்ற பாடலில் 'ஈமத்துள் தமியன் நின்ற கறைமிடற்று ஒருவன் ஒத்தான்' என்று விளக்குவான்.*

***ஐந்து நிலைகள்: சொரூபநிலை*** *- தன் இயல்பு; சிவம் ஒன்றேயாக இருத்தல்; உருவம் இல்லை.* ***தடத்தநிலை*** *- குணங்களோடு உடையது. உருவம் உண்டு. இங்கு இந்நிலை* ***சக்தி*** *எனப்பெயர் பெறுகின்றது. இங்கு* ***ஐந்து நிலைகளைக்*** *காணலாம். பதி உலகத்தை நோக்குங்கால்* ***1. பராசக்தியில்*** *ஒரு சிறுகூறு உலகத்தைத் தொழிற்படுத்த முற்படும். அதனை* ***2. ஆதிசக்தி*** *என வழங்குவர். இது* ***திரோதானசக்தி*** *என்ற திருப் பெயரையும் உடையது. திரோதானம் மறைப்பது திரோதன சக்தி உலகத்தைத் தொழிற்படுத்த இச்சித்தலால் அஃது* ***3. இச்சாசக்தி*** *எனப் பெயர் பெறுகின்றது. அதற்குரிய வழிகளை ஆராய்தலால்* ***4. ஞானசக்தி*** *என்ற திருநாமத்தை ஏற்கின்றது. அவ்வழியே தொழிற்படுத்த நினைத்தலால்* ***5. கிரியாசக்தி*** *என்ற திருப்பெயரையும் கொள்கிறது. ஆகவே இங்கு* ***ஐந்து சக்திகளைக்*** *காண்கின்றோம்.*

**வைணவம்:**

3. **இதம்** - முக்திக்கு வழிகள் நான்கு. அவை:

***(1) கர்மயோகம்:*** சாத்திரப்படி நித்திய நைமித்திய கடமைகள் செய்தல்.

***(2) ஞானயோகம்:*** முன்னதால் தூய்மையடைந்த ஆன்மா தியானத்தில் ஆழ்தல். இது கைவல்யநிலை (ஆன்மாநுபவம்). எல்லா உயிர்களிலும் ஆன்மா ஒன்றே என அறிதல். இது இறைவனைச் சார்ந்திருக்கும் நிலை - அவனை அடைய அவா.

***(3) பக்தி யோகம்:*** இங்கும் ஞானநிலை உண்டு. தனக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பை அறிதல். பக்தி தைலதாரை போலாதல், தம் சிறுமையையும் இறைவனது பெருமையையும் அறிதல். இது பரபக்தி, பரஞானம், பரம பக்தி என்று செயற்படும்.

***(4) பிரபத்தியோகம்:*** சரணாகதி என்றும் வழங்கப்படும். இதில் ஐந்து அங்கங்கள். (அ) அநு கூல்ய சங்கற்பம், (ஆ) பிராதி கூல்யவர்ஜனம், (இ) மகாவிசுவாசம் (ஈ) கோபத்ருவணம் (உ) கார்ப்பண்யம்.

**சைவம்:**

3. **முக்தி**க்கு வழிகள் நான்கு. அவை: மனம், மொழி, மெய்களால் சிவனை நோக்கிச் செய்தல்.

***(1) சரியை:*** உருவத்திருமேனியைத் தீண்டி வழிபடுதல். தேவையானவற்றை அகல நின்று செய்தல்.

***(2) கிரியை:*** உருவத்திருமேனியின் அருகிலிருந்து 'மந்திரம், கிரியை, பாவணை'களால் அகத்திலும் புறத்திலும் செய்து வழிபடுதல் - பலமுறைகள் உள.

***(3) யோகம்*** (கூடுதல்): புறத்தே செல்லும் அந்தக் கரணங்களை அடக்கி அகத்தே நிறுத்தி இறைவனோடு ஒன்றுச் செய்தல் (8 கூறுகள் இயமம் முதலியன).

***(4) ஞானம்:*** முதல் மூன்றும் ஞானத்தின் வளர்ச்சிப்படிகள். இதில் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் நிட்டை கூடல் என்ற நான்கு நிலைகள்.

## 4. மந்திரங்கள்

**வைணவம்**

***(1) திருமந்திரம் :*** 'ஓம் நமோ நாராயணாய' என்பது பதரிகாசிரமத்தில் நரனுக்கு நாராயணன் உபதேசித்தது. இதுவே மூலமந்திரம். (எட்டெழுத்து மந்திரம்)

***(2) துவையம்:*** *பெருமான் (வைகுந்தத்தில்) பிராட்டிக்கு உபதேசித்தது.*

***(3) சரமசுலோகம்:*** *பாரதப்போர்த் தொடக்கத்தில் கண்ணன் காண்டீபனுக்குத் தேர்த்தட்டிலிருந்து உபதேசித்தது (கீதை 18 : 66). கீதையில் இறுதி சுலோகம்.*

**சைவம்:**

*'சிவாய நம' என்பது. இங்கு இஃது ஒன்றே. இது ஐந்தெழுத்து மந்திரம்.*

***5. முத்தி:*** *வைணவம், சைவம் இரண்டிலும் அவரவர் சமயத்திற்கு ஏற்றவாறு விவரித்திருத்தல். ஆனால், இரண்டிலும்* **நான்கு** *பொதுநிலைகள் காணப்பெறுகின்றன.*

***(1) சாலோகம்:*** *இறைவனது உலகம்; இருப்பிடம்.*

***(2) சாமீபம்:*** *இறைவனை அருகணைந்து நிற்றல்.*

***(3) சாரூபம்:*** *உருவம். பெரிய திருமேனி முதலியவற்றை உடையவராய்த் தோழர்போல் நெருங்கி அளவளாவும் உரிமை.*

***(4) சாயுச்சியம்:*** *இறைவனோடு இரண்டறக் கலக்கும் நிலை.*

## 5. வினை:

*இரண்டு சமயத்திற்கும் பொது.*

*சஞ்சிதம் - பழவினை*

*பிராரப்தம் - நுகர்வினை*

*ஆகாமியம் - எதிர்வினை*

*இத்துடன் உரை நிறைவு பெறுகின்றது.*

***4. புத்த விகார்:*** *அமெரிக்கன் அருங்காட்சியகம் (இயற்கை வரலாறு) பார்த்துத் திரும்பும்போது (மே மாதம் 26 - மாலை 4.00 மணி) இந்தத் திருக்கோயிலுக்கு வருகின்றோம். முன்னொரு முறை வந்து கோயில் மூடியிருந்தமையால் ஏமாந்து திரும்பினோம். இன்று (மே-26, 2002 வைகாசி விசாகம் புத்தபௌர்ணமி அன்று) புத்த பகவானைச் சேவித்து அவன் அருள் பெறவேண்டும் என்று எங்கள் நுகர்வினை இருந்தது போலும்! புத்தபகவான் பிறப்பு வளர்ப்புபற்றிச் சில சொற்கள். கி.மு. 623-ஆம் ஆண்டு மே மாதம் ஒரு பௌர்ணமி நாளன்று இராணி மகாமாயை கபிலவாஸ்துவிலிருந்து (நேபாளம்) கருவுயிர்ப்பதற்காக தேவதகா என்ற ஊரிலுள்ள இல்லத்தை நோக்கிப் பயணமாகின்றார். ஆனால், அந்த இல்லத்தை அடையுமுன் நடுவழியில் சால் மரத்தின் நிழலில் ஆண்மகவைப் பெற்றெடுக்கின்றார்.*

பிறந்த பிள்ளைக்கு '**சித்தார்த்தன்**' என்று பெயர் இடப் பெறுகின்றது. 'சித்தத்தின் நோக்கம் நிறைவு பெற்றவன்' என்பது இதன் பொருள்.

சித்தார்த்தன் செல்வச் சிறப்பில் மிகச் செல்லமாக வளர்ந்து வருகின்றான். தன் குடும்பத்தினரின் எதிர்பார்ப்பிற்கு மேல் அறிவுடைமையும் இயல்பான திறன்களும் இயற்கை அருளியவை. இவன் தந்தையார் தமக்குப் பிறகு அரச பதவி பெற்று நாடாள வேண்டும் என்று கனவு கண்டார். உலகத் துன்பங்களும் இடர்களும் அவன் கண்ணில் படாமல் வளர்க்கப் பெற்றான். ஆனால், இந்நிலையில் அவன் வாழ்க்கையைப் பற்றியும் தன்னைச் சுற்றியுள்ள உலகைப் பற்றியும் சிறிது தெரிந்து கொள்ள விரும்பினான். அரண்மனைக்குப் புறம்பே உள்ள உலகைப் பார்க்க அவன் வந்தபோது நோயாளி ஒருவன், முதியோன் ஒருவன், ஒரு பிணம், ஒரு சந்நியாசி ஆகிய நான்கினையும் பார்க்க நேரிட்டது. இதனால் அவனிடம் துக்கமும் மக்கள்மேல் பரிவும் மீதூர்ந்து நிற்கின்றன. இதனால் தன் அன்பு மனைவி, மகன் அரண்மனை சுகம் ஆகியவற்றைத் துறந்து, இத்தகைய துன்பங்களிலிருந்து மீள வழிகாண இல்லத்தைவிட்டு வெளியேறுகின்றான். அவனது 29-ஆம் அகவையில் இச்சம்பவம் நேரிடுகின்றது. தான் காண நேரிட்ட துறவிகளின் முறைகளை யொட்டி தன்னை வருத்திக் கொள்ளல், தான் நுகரும் இன்பங்களைத் துறத்தல் ஆகியவற்றை ஆறாண்டுகள் கடைப்பிடிக்கின்றான். இறுதியாக, எவ்வளவு இடருற்றாலும், தன்னுடைய ஆருயிரையும் பணயம் வைத்து தன்னுடைய நோக்க எல்லையை அடைய உறுதி பூணுகின்றான். இந்த நோக்கத்தை அடைய மேற்கொள்ளும் முயற்சிகளினால் **புத்தன்** ஆகின்றான்.

கி.மு. 578-ஆம் ஆண்டு மே மாதம் பௌர்ணமியன்று கயை என்ற இடத்தில் (பீகார் மாநிலம்) தம்முடைய விடாமுயற்சியாலும் மனவுறுதியாலும் கௌதமர் பூர்ண ஞானம் பெற்று அநுபூதி நிலையில் **நான்கு** உண்மைகளைக் காண்கின்றார்.

திருக்கோயிலை அடைந்த நாம் சாலையில் கார் நிறுத்த வேண்டிய இடத்தில் காரை நிறுத்தி விட்டுத் திருக்கோயிலை அடைகின்றோம். திருக்கோயிலுக்கு வெளியே சிதையாலான புத்தரின் திருவுருவத்தைக் காண்கின்றோம்; புத்துணர்ச்சியும் மனக்கிளர்ச்சியும் அடைகின்றோம். அன்பும் கருணையும் பொலியும் அழகான புத்தரின் திருமுகம் அமைய வேண்டிய முறையில் அமையாதது சிறிது வருத்தத்தைத் தந்தது. அடுத்து, திருக்கோயிலினுள் புகுகின்றோம். நுழைவாயிலின் உட்புறம் ஆண்களும் பெண்களும் மிதியடிகளை விடுவதற்குத் தனித்தனி இடங்கள் ஒதுக்கப் பெற்றிருந்தன. அவ்விடங்களில் மிதியடிகளை விட்டுவிட்டு முதல் மாடியில் பகவான்புத்தர் எழுந்தருள்விக்கப் பெற்றிருக்கும் இடத்தை அடைகின்றோம்.

யோக நிலையிலமைந்த தங்கத்தாலான புத்தர் சிலையைக் காண்கின்றோம் **(படம் - 5).** செந்நிற, பச்சை நிற மெத்தைகளாலான இருக்கைகளில் பக்தர்கள் அமர்ந்திருக்க வழிபாடு நடைபெற்றுக் கொண்டிருந்தது. நாங்களும் இருக்கைகளில் அமர்ந்து வழிபாட்டில் கலந்து கொண்டோம். **புத்தபிட்சு (துறவி)** ஒருவர் சிங்கள மொழியிலமைந்த வழிபாட்டுப் பாடல்களை ஒத கூடியிருந்தோர் அனைவரும் அவற்றை அடுத்தடுத்துத் திரும்பியோத வழிபாடு நடைபெற்றுக் கொண்டிருந்தது. அரை மணி நேரம் வழிபாட்டில் கலந்து கொண்டிருந்துவிட்டு 5 மணி சுமாருக்குத் திரும்பினோம். இங்கு எழுந்தருளியிருக்கும் தங்கத்தாலான திருவுருவம் எங்கள் உடலில் உணர்வுகளையும் உள்ளத்தில் கிளர்ச்சிகளையும் எழுப்பியது இன்றளவும் எங்கள் மனத்தில் பசுமையாக நிலையாக இடம் பெற்றுவிட்டது[1].

**5. பஃபலோ நகரிலுள்ள இந்து - செயினக் கோயில்:** அருவிகளைப் பார்க்கச் செல்வதற்குமுன் இங்குள்ள திருக்கோவில் சேவையை முடித்துக் கொள்ளலாம் என்று நண்பர் **டாக்டர் தனஞ்செயன்** தெரிவிக்கவே நாங்கள் (மே மாதம் 31, வெள்ளி - மாலை 6.30 மணி) திருக்கோயிலுக்கு வந்தோம். இங்கு பல்வேறு தெய்வத் திருமேனிகள் எழுந்தருள்விக்கப் பெற்றுள்ளன. திருவேங்கடவனுக்கு மட்டும் வழிபாடு நடைபெற்றது. யாரோ ஒருவர் (ஆந்திரத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம்) வட மொழிச் சுலோகங்களை ஏட்டைப் பார்த்துப் படித்துக் கொண்டு வழிபாடு நடத்தினார். அங்கு வந்திருந்தவர்களில் இருவர் ஏட்டைப் பார்த்து **உலகம் உண்ட** (திருவாய் 6.10) திருவாய் மொழியின் இறுதி இரண்டு பாசுரங்களைச் சேவித்தனர்.

*'அகல்கில்லேன் இறையும்' என்று*
*அலர்மேல் மங்கை உறைமார்பா*
*நிகர்இல் புகலாய்! உலகம் மூன்று*
*உடையாய்! என்னை ஆள்வானே!*
*நிகர்இல் அமரர் முனிக்கணங்கள்*
*விரும்பும் திருவேங் கடத்தானே!*

---

1. 1968–இல் திருப்பதியில் பணியாற்றியபோது காசி யாத்திரையாக நானும் என் துணைவியும் விஷ்ணுகயையில் மூன்று சிரார்த்தங்களை நிறைவுசெய்துவிட்டு மிதிவண்டி ரிக்சாவில் சுமார் 5 கல்தொலைவிலுள்ள (கட்டணம் போகவர ரூ. 7/– என்பதாக நினைவு) புத்தகயைக்குச் சென்றோம். புத்த பகவான் ஞானம் பெற்ற போதி மரத்தடியில் நின்று வழிபாடு செய்தது இன்றும் மனத்தில் பசுமையாக உள்ளதை நினைவு கூர்கின்றோம். பல்வேறு நாட்டு விடுதிகள் தனித்தனியாகக் கட்டப்பெற்றிருந்தன. பல்வேறு மக்கள் நூற்றுக்கணக்கானவர்கள் அங்குமிங்குமாக மௌனம் கலையாமல் நடமாடிக் கொண்டிருந்தனர். எள்விழும் ஒலி கூடக் கேட்காதமௌனம் சாலை யெங்கும் நிலவி இருந்தது. அத்தகைய மௌனத்தை இன்று கண்டும் மகிழ்ந்தோம்.

*புகல்ஒன்று இல்லா அடியேன்உன்*
*அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே (10)*

*அடிக்கீழ் அமர்ந்து புகுந்துஅடியீர்!*
*வாழ்மின் என்றுஎன்று அருள்கொடுக்கும்*
*படிக்கே இல்லாப் பெருமானைப்*
*பழனக் குருகூர்ச் சடகோபன்*
*முடிப்பான் சொன்ன ஆயிரத்துத்*
*திருவேங் கடத்துக் கிவைபத்தும்*
*பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து*
*பெரிய வானுள் நிலாவுவரே (11)*

இவர்கள் பெரியாழ்வார் திருமொழியிலுள்ள திருப்பல்லாண்டில் முதல் இரண்டு பாசுரங்களையும் ஏட்டைப் பார்த்தே சேவித்தனர்.

*பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு*
*பலகோடி நூறாயிரம்*
*மல்லாண்ட திண்டோள் மணிவண் ணா! உன்*
*செவ்வடி செவ்விதிருக் காப்பு (1)*

*அடியே னோடும்நின் னோடும்*
*பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு*
*வடிவாய் நின்வல மார்பினில்*
*வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு*
*வடிவார் சோதி வலத்துறை*
*யும்சுட ராழியும் பல்லாண்டு*
*படைப்போர் புக்கு முழங்கும்அப்*
*பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே (2)*

ஏதோ இன்றும் அமெரிக்காவில் திவ்வியப் பிரபந்தம் வாழ்கின்றது என்ற மகிழ்ச்சிதான் எங்கட்கு.

அடுத்து இராமன் சந்நிதிக்குப் போகின்றோம்.

*அரக்கர் குலத்தை வேரறுத்துஎம்*
*அல்லல் நீக்கி அருளாயென்று*
*இரக்கம் எம்மேல் கருணையினால்*
*இசையா உருவம் இவையெய்திப்*

*புரக்கு மன்னர் குடிப்பிறந்து*
*போந்தாய்! அறத்தைப் பொறைதீர்ப்பான்*
*கரக்க நின்றே நெடுமாயம்*
*எமக்குக் காட்டக் கடவாயோ?*

**- கம்ப. யுத்த. பிரமாத்திரப் 224**

என்று தேவர்கள் வாக்கால் இராமனைத் துதிக்கின்றோம்.

இராமனை வணங்கியபின் இராதா கிருட்டிணன் சந்நிதிக்கு ஏகுகின்றோம்.

*குன்றினால்குடை கவித்ததும், கோலக்*
*குரவை கோதத்துவும், குடமாட்டும்*
*கன்றினால் விளவு எறிந்ததும், காலால்*
*காளியன் தலைமிதித்ததும், முதல்*
*வென்றிசேர் பிள்ளை நல்விளை யாட்டு*
*அனைத்திலும் என்உள்ளம் குளிர*
*ஒன்றும் கண்டிடப் பெற்றிலேன் அடியேன்*
*காணுமாறு இனிஉண்டெனில் அருளே*

**- பெருமாள் திருமொழி 7:9**

என்ற தேவகியின் ஏக்கம் நம்மையும் பற்றுகின்றது. குலசேகரப் பெருமான் வாக்கு நம் நாக்கில் தாண்டவமாட, கண்ணனை வணங்குகின்றோம். திருமங்கையாழ்வாரும் நம் நினைவிற்கு வந்து அவர்தம் பாசுரத்தையும் கொண்டு நம்மை வணங்கச் செய்கின்றார். கடல் மல்லைத் தலசயனப் பெருமாளை வழிபட்ட அவர் வாக்காக வரும்,

*பேய்த்தாயை முலையுண்ட பிள்ளை தன்னைப்*
*பிணைமருப்பில் கருங்களிற்றைப் பிணைமான் நோக்கின்*
*ஆய்த்தாயர் தயிர்வெண்ணெய் அமர்ந்த கோவை;*
*அந்தணர்தம் அமுதத்தைக் குரவை முன்னே*
*கோத்தானை குடமாடு கூத்தன் தன்னைக்*
*கோகுலங்கள் தளராமல் குன்றமேந்திக்*
*காத்தானை எம்மானைக் கண்டு கொண்டேன்*
*கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசய னத்தே*

**- பெரி. திரு. 2.5:4**

என்ற பாசுரத்தைச் சேவித்துக் கண்ணனையும் வணங்குகின்றோம்.

*உடம்பு உருவில் மூன்றுஒன்றாய் மூர்த்தி வேறுஆய்*
*உலகுய்ய நின்றானை; அன்று பேய்ச்சி*
*விடம்பருகு வித்தகனை; கன்று மேய்த்து*
*விளையாட வல்லானை; வரைமீ கானில்*
*தடம்பருகு கருமுகிலை; தஞ்சைக் கோயில்*
*தவநெறிக்கோர் பெருநெறியை; வையம் காக்கும்*
*கடும்பரிமேல் கற்கியைநான் கண்டு கொண்டேன்-*
*கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசய னத்தே.*
***- பெரி. திரு. 2.3:3***

என்ற பாசுரத்தை மிடற்றொலியால் சேவித்து மீண்டும் கண்ணனை வணங்குகின்றோம்.

இராதாகிருட்டிணனை வணங்கியபின் துர்க்கை சந்நிதிக்கு வருகின்றோம்.

*திருவே திகழும் கலைமகளே*
*திருவே மலையான் திருமகளே*
*உருவே இச்சை மயமேமெய்*
*உயர்வின் மணமே உயிர்இன்பம்*
*குருவே ஆதித் தனித்தாயே*
*குலவும் பரையாம் பெருந்தாயே*
*மருவே மலரே சிவகாம*
*வல்லி மணியே வலந்தருளே*
***- திருவருட்பா 4-ஆம் திருமுறை சிவகாமவல்லி துதி-3***

என்ற பாடலால் வணங்கி வாழ்த்துகின்றோம்.

கணபதி சந்நிதிக்குப் போந்து அப்பெருமானை,

*மேன்மைப் படுவாய் மனமே!கேள்*
*விண்ணின் இடிமுன் விழுந்தாலும்,*
*பான்மை தவறி நடுங்காதே,*
*பயத்தால் ஏதும் பயனில்லை;*
*யான்முன் உரைத்தேன் கோடிமுறை*
*இன்னும் கோடி முறைசொல்வேன்*
*ஆன்மா வான கணபதியின்*
*அருளுண்டு அச்சம் இல்லையே!*
***- பாரதியார் விநாயகர் நான்மணிமாலை - 23***

என்ற பாடலை நாவினால் நவிற்றிச் சேவிக்கின்றோம்.

அடுத்து சிவபெருமான் சந்நிதிக்கு வருகின்றோம். அப்பெருமானை,

*சிந்தனைநின் தனதாக்கி நாயி னேன்றன்*
*கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி*
*வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்*
*மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார*
*வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை*
*மாலமுதப் பெருகடலே மலையே உன்னைத்*
*தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்*
*தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே*
**- திருவா: திருச்சதகம்-26**

என்ற மணிவாசகப் பெருமானின் மணிவார்த்தைகள் அடங்கிய பாடலைப் பாடி வணங்குகின்றோம்.

தத்தாத்ரேயர், மகாவீர் (சமணம் கண்டவர்) ஆகியோர் சந்நிதிக்குச் சென்று வணங்கி வாழ்த்தி திருக்கோவிலை விட்டு வெளிவந்து நயாகரா அருவியைக் காணப் புறப்படுகிறோம்.

## 2. பூங்காக்கள்

அமெரிக்காவில் தங்கியிருந்தபோது பூங்காக்களுக்குச் சென்றுவர சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. அவை பற்றி விவரங்களுடன் ஈண்டு விளக்குவேன்.

**(1) இல்லத்தருகிலுள்ள பூங்கா[1]:** (ஏப்ரல் 13 அன்று இப்பூங்காவிற்குச் சென்றோம்.) என் மகன் இல்லத்திலிருந்து சுமார் அரை ஃபர்லாங் தொலைவிலுள்ளது இந்தப் பூங்கா. சாலையோர நடைபாதை வழியாகவே நடந்து சென்று இந்தப் பூங்காவை அடையலாம். நீள்வட்டமாகவுள்ள இது சரிவாக உள்ள ஒரு குளம்; தண்ணீர் மூன்றிடங்களில் 'குபுகுபு' என்று குமிழிட்டுக் கொண்டிருக்குமாறு உள்ள அமைப்பு. குளத்தைச் சுற்றிலும் சற்று அகலமான நடைபாதை உள்ளது. பல இடங்களில் 3,4 பேர் அமர்ந்துகொண்டு தண்ணீரைப் பார்த்தவண்ணம் இருப்பதற்கேற்ப மரத்தாலான இருக்கை வசதிகள். பலர் நடந்து கொண்டு இதில் சுற்றுவார்கள். ஒரு சிலர் ஓடிக் கொண்டும் சுற்றுவார்கள். சிலர் குழந்தைகளைத் தள்ளுவண்டியில் வைத்துத் தள்ளிக் கொண்டும் சுற்றுவார்கள். (படம் - 6)

---

1. Captain Tilley Park. யாரோ ஒருவர் பெயரால் இது நிறுவப் பெற்றுள்ளதாக அறியமுடிகின்றது

இந்தப் பகுதியில் அதிகமாக வாழ்பவர்கள் **இஸ்லாமியர்கள்**. நாங்கள் செல்லும் நடைபாதையில் ஒரு மசூதி கூட உள்ளது இவர்கள் தொழுகைக்காக. ஒருவரையொருவர் பார்க்கும்போது, சற்று ·உற்று நோக்கினால் முறுவலிப்பார்கள். ஒருவர் ஒரு நாள் என்னிடம் பேச்சுக் கொடுத்தார். அவருடைய 'பூர்வாசிரமம்' எது என்று வினவ, அவர் தாம் கிழக்கு பாகிஸ்தான் என்று சொன்னார். ஓரிரண்டு மணித்துளிகள் அவரிடம் உரையாடினேன். ஆங்கிலம் தான் இணைக்க கைகொடுத்து உதவியது.

பூங்காவின் ஒரு மூலையில் சற்று உயர்வான இடத்தில் குழந்தைகள் விளையாடுவதற்கான சறுக்கு அமைப்புகள், ஊஞ்சல் அமைப்புகள் உள்ளன. மூன்றிலிருந்து ஆறு வயது வரையுள்ள குழந்தைகள் மிகச் சுறுசுறுப்பாக அங்கும், இங்கும், குறுக்கும் நெடுக்குமாக ஓடுவதும், அடிக்கடி சறுக்கு அமைப்புகளில் ஏறுவதும் இறங்குவதும் சறுக்குவதும் எவருக்கும் கண் கொள்ளா மகிழ்ச்சி தரும் காட்சிகளாகும். பெரும்பாலும் தாய்மார்களுடன் தான் இவர்கள் வருவார்கள்; ஒரு சிலர் தாய், தந்தையருடன் வருவதுமுண்டு. தாய்மார்கள் இருக்கைகளில் அமர்ந்து கொண்டு தம் குழந்தைகள் பல்வேறு விதமாக விளையாடுவதைக் கண்டு மகிழ்வார்கள். சில பெற்றோர்கள் தம் சிறுகுழந்தைகளை ஊஞ்சல் போன்ற சிறு அமைப்பில் அமர வைத்து ஆட்டிக் கொண்டு மகிழ்வதையும் கண்டு மகிழ்ந்தோம். நானும் என் துணைவியாரும் ஓர் இருக்கையில் அமர்ந்துகொண்டு இக் காட்சிகளில் ஈடுபட்டு மகிழ்வோம். காரைக்குடியில் நாங்கள் வாழ்ந்தபோது எங்கள் குழந்தைகட்கு இவ்வித வசதி. வாய்ப்புகள் இல்லையே என்ற ஏக்கமும் எங்கள் மனத்தில் எழுவதுண்டு. (படம் - 7)

ஒருசமயம் என் மனைவி ஓர் இருக்கையிலும் நான் சற்றுத் தொலைவில் பிறிதோர் இருக்கையிலும் அமர்ந்து கொண்டு இருக்கும் போது என் அருகில் அமர்ந்திருந்த இரண்டு இஸ்லாமிய அன்பர்களுடன் உரையாட நேர்ந்தது. பாகிஸ்தானியரின் தனியான மனப்பான்மை தெளிவாகத் தெரிந்தது. போர்த் துறையைச் சார்ந்த ஒருவர் சமாதானப் பேச்சில் சமாதானமான முடிவுக்கு வருவது சிரமமாக இருக்கும் என்றேன். முஸரஃப் பற்றிய பேச்சு எழுந்த போது நாட்டுத் தலைவராக வந்த முறை சரியல்ல என்று குறிப்பிட்டேன். அதற்கு அவர்கள் 'பொதுமக்கள் தீர்ப்பு எடுப்பு'[2] மூலம் மீண்டும் தலைவராகி ஐந்தாண்டுகள் தலைவர் பதவியில் இருப்பார் என்றனர். அதற்கு நாட்டில் எதிர்ப்பு இருப்பதாகவும், அதற்கு அவருக்கே அந்த ஏற்பாட்டில் நம்பிக்கை இல்லாத குறிப்பையும் எடுத்துக் காட்டி, அவரே அமரிக்காவில்

---

2. Referendum

குடியேறுவதற்கு மேற் கொண்டிருக்கும் முயற்சிக் குறிப்பையும் தெரிவித்தேன். மேலும், இது குறித்துப் பேசுவதற்கு அவர்கட்கு நா எழவில்லை. **நபிகள் நாயகம்** சகோதரத்துவக் கொள்கையை எடுத்துக் காட்டி இத்தகைய பெருமானின் சீரிய புனிதக் கொள்கையை மறந்து அடிக்கடி '**புனிதப் போர்**' பற்றிப் பேச்சு எழுவது மிகவும் வருத்தமாக உள்ளது என்றேன். அதே சமயத்தாரிடையே கூட ஒற்றுமையின்மை நிலவுவதையும், அச்சுறுத்தும் போர்க் குரல்கள் அடிக்கடி எழுவதையும் காணவும் கேட்கவும் மேலும் வருத்தமாக இருக்கிறது என்று சொன்னபோது அவர்கள் வாயடைத்துப் போயினர்.

மற்றொரு நாள் **லெபனான்**[3] நாட்டிலிருந்து பிஎச்.டி. பட்டத்திற்காக ஆய்வு செய்ய வந்திருக்கும் ஒரு மாணாக்கரிடம் பேச்சு கொடுக்க நேர்ந்தது. அவர் ஒரு சிறந்த ஆய்வு மாணாக்கராகக் காணப் பெற்றார். தான் உயிரியல் துறையில்[4] ஆய்வு செய்வதாகவும் குறிப்பிட்டார். எனக்கும் அத்துறையில் ஓரளவு பயிற்சியுள்ளதால் பேச்சு நீண்டது. இரு பெற்றோர்களின் நிறக்கோல்கள்-ஜீன்கள்[5] மூலம் பெற்றோர்களின் சில உடற்கூறுகள்தாம்[6] கடத்தப்பெறுகின்றனவேயன்றி அறிவுக் கூறுகள் கடத்தப்பெறுவதில்லை என்று குறிப்பிட்டேன் அவர் இன்னும் இத்துறையில் ஆழமாகப் புகவில்லை என்பதை அறிந்து கொண்டேன்.

*ஒருமைக்கண் தான்கற்ற கல்வி[7] ஒருவர்க்கு*
*எழுமையும் ஏமாப் புடைத்து[8]*

என்ற குறளின் கருத்தை எடுத்துக் காட்டி விளக்கினேன். அதில் அறிவுக் கூறுகள் கடத்தப்பெறும் குறிப்பு இருப்பதையும் ஆனால், அக் குறிப்பு சுற்றுப்புற சூழலைக்[9] குறிப்பதாகக் கொள்ள வேண்டும் என்றும் விளக்கினேன். அப்படிக் கொள்ளாவிட்டால் ஒரு நீதிபதியின் மகன் நான்காவது படிவம் கூட தாண்ட முடியாதிருப்பதையும், ஒரு கல்லூரிப் பேராசிரியரின் மகன் வகுப்புகள் தோறும் இரண்டு ஆண்டுகள் தங்கிப் போவதையும் எடுத்துக் காட்டி அது வள்ளுவரின் கருத்துக்கு முரண்படுவதைச் சுட்டிக் காட்டினேன். ஆனால், வள்ளுவர் கருத்தை அவ்வளவு எளிதில் புறக்கணிக்க முடியாது என்று குறிப்பிட்டு, பெற்றோர்கள் படித்தவர்களாதலால் அவர்கள் வீட்டுச் சூழ்நிலை படிப்பு பற்றி இருக்கலாம் என்றும், அது தம் குழந்தைகட்குச் சாதகமாக அமையும் என்று கருதி இவ்வாறு கூறியிருக்கலாம் என்றும் விளக்கினேன்.

---

3. Lebanon 4. Biological Faculty
5. Chromosomes-Genes 6. Physical tracts 7. Intellectual Tracts
8. குறள் – 398 9. Environmental impact

ஆனால், இன்று நடைமுறையில் காண்பதென்ன? வானொலி, தொலைக்காட்சி, வேறு கேளிக்கை வசதிகள் அவர்கள் இல்லத்தில் பெருகியிருப்பதால் அவர்தம் குழந்தைகளில் பெரும்பாலோர் இச்சூழலில் ஈடுபட்டுத் தம் கல்வியைப் பாழாக்கிக் கொள்ளும் நிலையையும் எடுத்துக் காட்டினேன். அவர் மிக்க அக்கறையுடன் என் விளக்கத்தைக் கேட்டறிந்ததை அவர்தம் முகக்குறிப்புகளினின்றும் அறிந்து கொண்டேன். அவர் அடுத்த இரண்டு நாட்கள் கழித்து தாம் பயிலும் **செயிண்ட் ஜான் பல்கலைக் கழகத்தில்**[10] உயிரியல் பற்றி ஒரு கருத்தரங்கு[11] நடைபெறப் போவதைக் குறிப்பிட்டு அதில் கலந்துகொள்ள அழைத்தார். அதில் கலந்து கொள்ள முடியாவிட்டாலும் பார்வையாளராகக் கூட வருவதற்கு (என் தளர்ந்த நிலையால் தனியாக வருவதற்கு) இயலாதென்றும், கூட்டி வருவதற்கு ஒருவரும் இல்லை என்றும் கூறி வாய்ப்பில்லை என்று கூறிவிட்டேன்.

பிறிதொரு சமயம் இந்தப் பூங்காவின் சற்று உயரமான இடத்தில் சின்மயானந்த ஆசிரமத்தைச் சேர்ந்த அமெரிக்கர்கள் சமபந்தி உணவு கொண்டிருப்பதைப் பார்த்தோம். அமெரிக்கப் பெண்கள் இந்தியப் பெண்கள் போல சேலை ஆடையணிந்து கொண்டு இதில் கலந்து கொண்டிருந்ததைக் காணமுடிந்தது. இந்தியாவிலிருந்து உலகாயதத்தால்[12] உந்தப்பெற்று எண்ணற்ற இந்தியர்கள் பணம் சம்பாதிக்க வந்திருப்பதையும், இங்குள்ளவர்களில் சிலர் ஆன்மிகத்தை[13] நாடி அதில் ஈடுபட்டிருப்பதையும் நினைத்துக் கொண்டேன். இந்தக் காட்சிகளை நோக்கிய வண்ணம் வீடு திரும்பினோம்.

**மேனிலைப்பள்ளி:** பூங்காவிற்கு நேர் எதிர்ப்புறம் ஒரு பெரிய மேனிலைப்பள்ளி உள்ளது. எங்கள் இல்லத்திலிருந்து பார்த்தாலே அந்த மாபெரும் கட்டடம் கண்ணில் படும். பள்ளிக்கு முன்புறமாக உள்ள அகன்ற புல்வெளி கண்டோர் கண்ணையும் கருத்தையும் ஈர்ப்பதாகவுள்ளது. சனி, ஞாயிறு இரண்டு நாட்களைத் தவிர, காலை எட்டு மணி முதல் மாணாக்கர்கள் வரிசைவரிசையாக இப்பள்ளிக்கு வருவதைப் பார்க்கலாம். பள்ளி பிற்பகல் சுமார் 2.30 மணிக்கு முடிவடைகின்றது. (படம் - 8)

நம்மூரில் இட நெருக்கடி இருப்பதுபோல இங்கும் இட நெருக்கடி உண்டு. மாலை நேர வகுப்புகளும் இங்கு நடைபெறுகின்றன. மாலை நான்கு மணி முதல் மாணாக்கர்கள் திரள்திரளாக இங்கு வருவதைக் காணலாம். இரவு ஒன்பது மணிக்கு மாணாக்கர்கள் கலைந்து போவதையும் பார்க்கலாம்.

---

10. St. John's University 11. Seminar
12. Materialism 13. Spiritualism

ஒரு சமயம் எங்கோ காரில் நாங்கள் காரில் போய்க் கொண்டிருந்தபோது பள்ளியின் பின்பக்கம் எங்கள் பார்வை சென்றது. நூற்றுக்கணக்கான கார்கள் அங்கு நிறுத்தப் பெற்றிருந்தன. வினவியதில் அவை பள்ளி ஆசிரியர்களுடையவை என்பதை அறிந்து கொண்டோம். இதனால் ஆசிரியர்களின் பொருளாதார நிலையை ஒருவாறு ஊகிக்க முடிந்தது. இன்று தமிழகத்திலும் ஆசிரியர்களின் பொருளாதாரநிலை சிறப்புற்றிருப்பதையும், நினைவு கூர்ந்தேன். சிலர் இன்று மகிழ்வுந்தும் வைத்துக் கொண்டுள்ளனர்.

**(2) கரோனா பூங்கா**[1]: (ஏப்ரல்-11, வியாழன் - மாலை சுமார் 4.00 மணிக்கு இப்பூங்காவைக் காணச் சென்றோம்.) என் மகனின் இல்லத்திலிருந்து சுமார் 4 கல் தொலைவிலுள்ளது இந்த பூங்கா. சுற்றளவு 5 மைல்; மிகப் பெரிய பூங்கா. பல்லாண்டுகட்கு முன்னர் **வாணிகச்சந்தை**[2] அமைந்து அண்ணாநகர் (சென்னை) உண்டானதுபோல் இங்கும் இருமுறை வாணிகசந்தை நடைபெற்று அந்த இடத்தில் இந்தப் பூங்கா உண்டாயிற்று. நடுவில் ஒரு பெரிய ஏரியும் அதைச் சுற்றி இந்தப் பூங்காவும் அமைக்கப் பெற்றுள்ளது.

**1. சென்னையில் இசையரங்கு**[3] அமைந்திருப்பது போல் இங்கும் ஓர் அரங்கு உள்ளது. அடிக்கடி இங்கு கலை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுக் கூட்டங்கள், நாடகங்கள், இசை விழாக்கள் முதலியன நடைபெறும். தனியாருக்கு உரியது. பயன்படுத்துவோருக்கு வாடகை உண்டு.

**2. பனிக்கட்டி மீது சறுக்கி விளையாடு**வதற்கு ஒரு தனிக் கூட்டம் உள்ளது. **ரிங்**[4] என்ற பெயரால் வழங்குவது. கட்டணம் செலுத்தி பனிக்கட்டியில் ஓடுவது. சாதாரணத்தரையில் சக்கர அமைப்பைக் காலில் மாட்டிக் கொண்டு ஓடுவது போல், இங்கும் பனிக்கட்டிமீது ஓடுவதற்கேற்ப ஓர் அமைப்பைக் காலில் மாட்டிக் கொண்டு ஓடுவார்கள். தனியாருக்கு உரியது. பயன்படுத்துவோருக்கு வாடகை உண்டு.

**3. யு.எஸ். திறந்தவெளி டென்னிஸ் பார்வை அரங்கு**[5]: சென்னை திருவல்லிக்கேணியில் அமைந்திருப்பதுபோல் பார்வையாளர்கள் படிவரிசையில் அமர்ந்து கொண்டு பார்க்கும் இடம் ஒன்று உள்ளது. நல்ல அமைப்பு இது.

---

1. Carona Park. இது பெரியது. நியுயார்க்கில் பெரிதும் சிறியதுமாகப் பல்வேறு இடங்களில் பல பூங்காக்கள் அமைக்கப் பெற்றுள்ளன.
2. Trade Fair 3. Music Academy
4. RINK-Street of ice for skating
5. U.S. Open Tennis Stadium

**4. ஷியா விளையாட்டுப் பார்வை அரங்கு:** இங்கு பந்தடி மட்டை கொண்டு விளையாடும் பேஸ்பால் விளையாட்டு[6]த் தொடர்கள் நடைபெறும் இடம் இது. தனியாருக்குரியது.

**5. குயின்ஸ் அருங்காட்சியகம்[7]:** இது மிகச்சிறியது. நாங்கள் நுழைந்து பார்க்கவில்லை.

ஏரியில் செல்ல படகு வசதிகள் உண்டு. கட்டணங்கள் செலுத்தி ஏறிச் சுற்றலாம். சில இடங்களில் சிறுவர்கள், குழந்தைகள் விளையாடுவதற்கு ஊஞ்சல் அமைப்புகள், சறுக்கி விளையாடும் அமைப்புகள், ஏறி இறங்கி விளையாடும் அமைப்புகள் பல உள்ளன. (பெரிய பூங்காவாதலால்).

சுற்றிலும் பெரிய பெரிய மரங்கள் தோப்புகள் போல் அடர்ந்து உள்ளன. ஆங்காங்கு நடந்து சென்று பார்க்கும் பாதை வசதிகளும், அமர்ந்து ஓய்வு கொள்ளும் வசதிகளும் உள்ளன. சிறுவர்கள் ஆங்காங்கு விளையாடிக் கொண்டிருப்பதையும், பெரியவர்கள் நடந்து சென்று கொண்டிருப்பதையும், சிலர் அமர்ந்து ஓய்வாக இருப்பதையும் கண்டு மகிழ்ந்தோம்.

பெரிய இடமாதலால் காரிலேயே இருந்து பார்த்துக் கொண்டு சுற்றிவந்தோம். காரிலிருந்து இறங்கிப்பார்க்க விரும்பவில்லை. உடல்தளர்ச்சி இடங்கொடுக்கவில்லை.

**(3) மத்தியப் பூங்கா[1]:** இதனைப் பார்க்க மே 4, சனியன்று காலை 10.00 மணிக்குப் புறப்படுகின்றோம். **எம்பயர் கட்டடம்** கண்ட அன்று இதனைப் பார்க்க எழுந்த ஆர்வம் இன்று நிறைவேறுகின்றது. இது இல்லத்திலிருந்து சுமார் 12 கல் தொலைவிலுள்ள மான்காட்டன் பரோவில் உள்ளது. நியூயார்க் மாநிலத்தில் அனைத்திலும் மிகப் பெரியது (படம்-9); 850 ஏக்கர் பரப்புடையது. செயற்கை முறையில் நிறுவப்பெற்ற அற்புதப்பூங்கா; அழகெலாம் திரண்டு அமைந்த அரிய பூங்கா. நீண்ட சதுர வடிவில் அமைந்தது. இதன் நீண்ட பக்கம் ஒன்று முதல் 240 எண் வரை அமைந்துள்ள தெருக்களில் 51-வது எண்ணுள்ள தெருவில் தொடங்கி 110-வது எண்ணுள்ள தெரு வரை நீண்டு அமைந்துள்ளது. குட்டைப் பக்கம் ஒன்று முதல் 12 எண்வரை அமைந்துள்ள அவின்யூ பெருந்தெருவில் 5-வது அவின்யூ தெரு தொடங்கி 8-வது அவின்யூ தெரு முடிய அமைந்துள்ளது[2]. இதன் பராமரிப்பில் ஆயிரக் கணக்கான மக்கள் பங்கு பெற்றுள்ளனர். இவர்களது கார்களைத்தவிர பிறர் கார்கள்

---

6. Base Ball Tournament 7. Queen's Museum

1. Central Park.

2. போர்க் கப்பல்கள் (War Ships) மான்காட்டனில் 12–வது அவின்யூவின் இறுதியிலும், 46–வது தெருவின் கோடியிலும் நிறுத்தப் பெற்றுள்ளன (இவை பற்றிய விவரங்கள் போர்க் கப்பல்கள் பற்றிய விவரங்கள் தரும் இடத்தில் கண்டு தெளிக. (இந்நூல் பக்கம் 66).

உள்ளே செல்ல அனுமதி இல்லை. மிதி வண்டிகள் உள்ளே அமைந்துள்ள தெருக்களில் செல்லலாம்; குழந்தைகள் அமர்ந்துள்ள தள்ளுவண்டிகளும் சிறுவர்கள் இயக்கும் மிதிவண்டிகளும் செல்லலாம். பெரியவர்கள் செலுத்தவல்ல மிதி வண்டிகள் பூங்காவிற்குள்ளேயே வாடகைக்கெனவே வைத்துள்ளனர். சுற்றிப்பார்க்க விரும்புவோர் இவற்றில் ஒன்றை அமர்த்திக் கொண்டு சுற்றிப் பார்க்கலாம். இதனைச் சுற்றிப் பார்க்க ஒருசில குதிரை வண்டிகளும் உள்ளன. அவற்றுள் ஒன்றை வாடகைக்கு அமர்த்திக் கொண்டும் சுற்றிப் பார்க்கலாம். கால் நடையில் சுற்றிப் பார்க்க விரும்பினால் மாதக் கணக்கில் சென்று பார்க்க வேண்டும்.

**இயற்கை அழகு:** செயற்கை முறையில் அமைக்கப்பெற்ற பூங்காவாக இருப்பினும், எங்கு நோக்கினும் பூஞ்சோலைகள்; மரத்தோப்புகள். பல்வேறு வகைப் பூக்கள் பல்வேறு வண்ணங்களுடன் பூத்துக் குலுங்கும் அழகு சொல்லுந்தரமன்று. மரத்தோப்புகளில் காணப்பெறும் பல்வேறு வகை மரங்களின் அழகும் கண்ணையும் கருத்தையும் ஈர்ப்பதாக உள்ளது. அதிகமாகக் காணப்பெறுவன **வோக்**[3] மரங்கள். இவை நம்மூர் தேக்கு மரங்களை யொத்தவை. இவற்றில் பலகைகள் அறுக்கலாம். இப்பலகைகள் தாம் அமெரிக்காவில் வீடுகட்டப் பயன்படுத்தப் பெறுகின்றன. மூன்று மாடிகள் வரை இவ்வகை வீடுகள் அமைகின்றன. பலகைகளை நம் மனத்திற்குகந்த வண்ணப்பூச்சினை மேற் கொள்ளலாம் வெளியில் மெல்லிய செங்கற்களை சீமைக்காரை[4] கொண்டு ஒட்டி அழகுபடுத்தியுள்ளனர். குளிர் காலத்தில் பனிக்கட்டி சேர்ந்து வீட்டின்மீது பாரம் அதிகமாவதால் வீடுகளின் மேற்பகுதி கூம்பாக அமைக்கப்பெறுகின்றது. மூன்று மாடிக்கட்கு மேல் உள்ள கட்டடங்கள் செங்கல்கள்-சீமைக்காரையினாலானவை. மரங்களில் **மாப்பில்**[5] என்ற ஒரு வகை மரம் நம் கண்ணைக் கவர்கின்றது. இதன் இலைகள் பச்சையாகத் தோன்றுகின்றன. இவை படிப்படியாக மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு நிறங்களாக மாறி இறுதியில் உதிர்ந்து விடுகின்றன. இந்த அற்புதமான காட்சிகள் பார்ப்போர் கண்களுக்கு வியத்தகு விருந்தளித்து உள்ளத்தையும் கொள்ளை கொள்ளுகின்றன.

காரை மணிக்கு ஒரு டாலர் வீதம் இரண்டு மணி நேரத்துக்கு 2 டாலர் செலுத்தி ஓரிடத்தில் நிறுத்திவிட்டு (நிறுத்தும் இடவிவரம், தெரு எண் முதலியவற்றைக் குறித்துக் கொள்ளுதல் அவசியம்) நுழைவதற்கென ஏற்படுத்தப்பெற்றுள்ள பல வழிகளில் ஒருவழியாக உள்ளே செல்லுகின்றோம். காலையிலிருந்தே கார்கள் வந்த வண்ணமிருப்பதால் பூங்காவின் நான்கு புறங்களிலும் உரிய இடங்களில் அவற்றை நிறுத்திவிடுவதால் இடம்

3. Oak    4. Cement    5. Maple

கிடைப்பது அரிது. நாங்கள் சுற்றிச் சுற்றி அலைந்தோம்; இடம் கிடைக்கவில்லை. இறுதியில் பூங்காவிற்கு அருகிலுள்ள தெரு ஒன்றில் கட்டணம் செலுத்தி காரை நிறுத்த இடம் கண்டோம்.

**குளம்[6]:** ஒரு குளம் இருக்கும் இடத்திற்கு வருகின்றோம். அதன் நாற்புறமும் இருந்து சிலர் விளையாட்டுப் படகுகளை[7] தொலைதூர இயக்கும் கருவிகளைக்[8] கொண்டு இயக்குவதைக் காண்கின்றோம். யார் வேண்டுமானாலும் இயக்கலாம். அஃது ஒரு குறிப்பிட்ட இடத்திலுள்ள ஒரு குறியை வலம் வரவேண்டும். கோழிச்சண்டையில் பார்வையாளர்கள் பந்தயம் கட்டி இழப்பு, வரவு அடைவதைப் போல் இங்கும் அதே முறையைக் கையாண்டு பலாபலன் அடைவதைக் காண்கின்றோம். அந்த இடத்தில் என்னையும் என் மனைவியையும் நிறுத்தி வைத்து ஒளிப்படம்[9] எடுத்தான் என் மகன். சிறிது நேரம் ஓர் இருக்கையில் அமர்ந்துகொண்டு படகுக் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தோம். (படம் - 10)

**ஏரி[10]:** அடுத்து ஏரியருகில் வருகின்றோம். அருகில் **படகு இல்லம்[11]** உள்ளது. அங்கு பெரிய படகுகள் வைக்கப்பெற்றுள்ளன. ஏதாவது ஒரு படகை வாடகைக்கு வாங்கிக் கொண்டு இருவர் அல்லது மூவர் அமர்ந்து துடுப்புகளைக் கொண்டு தாமே இயக்கி ஏரியைச் சுற்றி வரலாம். பலர் இவ்வாறு படகுகளை இயக்கிச் சுற்றி வருவதைக் கண்டு மகிழ்ந்தோம். பல ஆண்டுகளுக்கு முன் (1979) கோடைக்காலத்தில் நானும் என் துணைவியும் கொடைக்கானல் சென்று மூன்று வாரம் அங்கு தங்கியிருந்தபொழுது என் **நண்பர் பா. அரங்கசாமிரெட்டியார்** (வக்கீல்) அங்கு தங்கி இருந்தார். அங்கும் ஏரியில் படகுகளைத் தாமே இயக்கும் ஏற்பாடு இருந்தது. திரு. அரங்கசாமி ரெட்டியார் ஒரு படகை வாடகைக்கு அமர்த்தி எங்களை ஏற்றிக் கொண்டு தாம் படகை இயக்கி ஏரியைச் சுற்றி வந்ததை நினைத்துக் கொண்டோம். அப்போது இருந்த இளமைத் தெம்பு இப்போது இல்லாததால் பார்வையினாலேயே இவற்றைக் கண்டு அனுபவித்து மகிழ்வதுடன் மனநிறைவு கொண்டோம்.

**திறந்தவெளி அரங்கு[12]:** இத்தகைய ஒரு சிறு அமைப்பு இருந்த இடத்திற்கு வருகின்றோம். அதன் முன்புறம் அகன்ற காலியிடம், சுற்றியும் இருபுறங்களிலும் பல பெஞ்சு அமைப்புகள். அரங்கு பேச்சு நிகழ்ச்சிகளை அமைப்பதோடுசரி; நாட்டியம் முதலியவை அமைப்பதற்கு இடம் போதாது. பேச்சு நிகழ்ச்சிகள் நடைபெறும் பொழுது ஒலிபெருக்கி[13] அமைப்புகளை

---

6. Tank
7. Toy boat
8. Remote Control
9. Photo
10. Lake
11. Boat House
12. Open theatre
13. Mike set

ஏற்படுத்திக்கொண்டு ஏராளமான பேர்கள் அமர்ந்து கொண்டு பேச்சுநிகழ்ச்சிகளைக் கேட்டு அனுபவிக்கலாம். இந்த இடத்தைப் பார்த்த வண்ணம் சுற்றி வருகின்றோம்.

**விளையாடும் இடங்கள்:** ஓர் இடத்தில் புல்வெளியில் கூடைப்பந்து[14] விளையாடும் இடத்தைக் கண்டோம். பலர் விளையாடிக் கொண்டிருப்பதையும் கண்டு மகிழ்ந்தோம்.

சுற்றி வந்ததால் சோர்வும் வந்துவிட்டது எங்களுக்கு. என்மகன் மெதுவாக கார் இருக்கும் இடத்திற்கு இட்டுக் கொண்டு வந்துவிட்டான். பகல் 1.30க்கு வீடு வந்து சேர்ந்தோம். மத்திய பூங்கா பயணம் எங்கட்கு மகிழ்ச்சியைத் தந்தது; மனநிறைவையும் பெற்றோம்.

**(4) புராஸ்பெக்ட் பூங்கா[1]:** (ஏப்ரல் 21, ஞாயிறு அன்று இப்பூங்காவைக் காணச் சென்றோம்.) இப்பூங்கா நியுயார்க்கின் ஐம்பகுதியில் ஒன்றாகிய **புரூக்லினில்** உள்ளது. என்மகன் உறைவிடத்திலிருந்து 12 கல் தொலைவிலுள்ளது. முற்பகல் 11 மணிக்குப் புறப்பட்டுச் சென்று பிற்பகல் 1.45 மணிக்குத் திரும்பினோம். (படம் - 11)

இந்தப் பூங்காவின் பரப்பு 520 ஏக்கர் சுற்றளவு கிட்டத்தட்ட 5 மைல். பூங்காவைச் சுற்றிப் பத்தாயிரம் மரங்கள் இருப்பனவாகக் குறிப்பு. பூங்காவில் உள்ள ஏரியின் பரப்பு 60 ஏக்கர். பெரும்பாலும் யூதர்களும் கறுப்பர்களும் வாழும் இடம் இது. எங்கோ ஒருசில வெள்ளையர்களின் வாழிடங்களும் உள்ளன.

நடந்து பார்க்கக் காலில் வலிவு இல்லாததால் காரில் சுற்றிப் பார்க்க விழைந்தோம். முன்னர் இசைவு இருந்ததாம். இப்போது அது மறுக்கப் பெற்றது. ஒரு சிறிய அளவு தொலைவு காரில் சென்று, காரை நிறுத்திவிட்டு நடையாக சிறிது அளவு சுற்றிப் பார்க்க முடிந்தது. ஓரிடத்தில் வட்டரங்குக் காட்சிகள்[2] நடைபெற்றுக் கொண்டிருந்து, நுழைவுச் சீட்டுகள் பெறுவதற்கு மக்கள் கூட்டம் கியுவரிசைகளில் நின்று கொண்டு திண்டாடுவதைக் கண்ணுற்றோம்.

பூங்காவில் சில இடங்களில் 'கலைக் காட்சித்தோப்பு'[3] என்ற விளம்பரப் பலகைகளைப் பார்த்தோம். **பீத்தோவன்[4], மூர்[5]** போன்ற கலைஞர்களின் சிலைகள் ஆங்காங்கு நிறுவப் பெற்றிருந்தன. சில இடங்களில் கூடாரங்கள் போன்ற அமைப்புகளும் இருந்தன. இசை, நாடக நிகழ்ச்சிகள் நடைபெறும் போது இவை அரங்குகளாகப் பயன்படுத்தப் பெறுவன போலும்.

---

14. Basket ball
1. Prospect Park
2. Circus
3. Consert Grove
4. Beethovan
5. Moore

பெரிய பூங்காவாதலால் கார்கள் செல்லவும், கால் நடையில் செல்லும் மக்கள் செல்லவும் பல நுழைவிடங்கள் அமைந்திருந்தன. அவற்றினுள் அவர்கள் உள் நுழைவதையும் காண முடிந்தது. (படம் - 12)

சிறுவர்கள் விளையாடுவதற்குத் தனிப்பூங்காப் பகுதி ஒன்றிருந்தது. சிறுவர்கள் பொம்மைகளுடன் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தோம்.

இந்தப் பூங்காவில் சவங்கள் புதைக்கும் கல்லறை, பலசிறுசிறு தோட்டங்கள், படகு வசதிகள் உயிர்ப் பிராணிகள் (பறவைகள், மிருகங்கள், கொடிய மிருகங்கள் அடங்கிய) பூங்கா[6], பழம்பொருள் காட்சியகம்[7] உள்ளன. இக்காட்சியகத்தில் 1820 முதல் சேமிக்கப்பெற்ற அமெரிக்கப் பழம் பொருள்கள், வேறு பழம்பொருள்கள் அடக்கம். அருவிகள்[8], சிறுசிறுகுளங்கள்[9], முதலியவை உள்ளன. உள்நாட்டுப் போரில் பங்கு கொண்ட வீரர்களை நினைவுகூரும் வகையில் ஒரு பெரிய வளைவும், **ஜான் எப். கென்னடிக்கு** ஒரு நினைவுச்சின்னமும்[10] உள்ளன. இந்தப் பூங்கா காலை முதல் மாலை வரை திறந்தே இருக்கும். பழம்பொருள் காட்சியகம் வேண்டும் போது திறக்கப் பெற்றிருக்கும். இரண்டிலும் இலவச தொலை பேசி வசதிகள் உள்ளன.

**(5) கிஸ்ஸெனா பூங்கா[1]:** 3 கல் தொலைவிலுள்ள இந்தப் பூங்காவிற்கு மே மாதம் 29, மாலை சுமார் 6 மணி அளவில் சென்றோம். வீட்டருகிலுள்ள பூங்காவைவிட இது பத்து மடங்கு பெரியது. சாலைக்கு இருபுறங்களிலும் இது விரிவாக அமைந்துள்ளது. குழந்தைகள் விளையாடும் பகுதிகள் நான்கு மூலைகளிலும் அமைந்துள்ளன. நான்கு இடங்களிலும் மிதி வண்டி ஒட்டி சிறுவர்கள் விளையாடுவதற்கு பெரிய தனி இடங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. சீமைக்காரை அமைந்த தரையில், முதியோர் பந்துகளைக் கொண்டு விளையாடத் தனி இடம் உண்டு; இவர்கள் உற்சாகமாக விளையாடுகின்றனர். குடிநீருக்காக 4 இடங்களிலும் தண்ணீர்க் குழாய்கள் பொருத்தப் பெற்றுள்ளன. குழந்தைகள் விளையாடும் இடங்களிலும் முதியோர் விளையாடும் இடங்களிலும் பார்வையாளர்கட்கு இருக்கை வசதிகள் செய்யப் பெற்றுள்ளன.

வீட்டருகிலுள்ள பூங்காக் குளத்தை விட இங்குள்ள குளம் மூன்று மடங்கு பெரிதாக உள்ளது. இந்தக் குளத்தைச் சுற்றிலுமுள்ள நடைப்பாதைகளிலும் சிறுவர்கள் மிதிவண்டி ஓட்டி மகிழ்கின்றார்கள்.

---

6. Zoological Garden
7. Museum
8. Waterfalls
9. Pools
10. Memorial
1. Kissena Park

டென்னிஸ்[2], பேஸ்பந்து[3], கால்பந்து[4] விளையாடுவதற்கு மூன்று நான்கு இடங்களில் வசதி செய்யப் பெற்றுள்ளன; இவர்கள் விளையாடுவதைப் பார்த்து மகிழும் பார்வையாளர்கட்கு நல்ல இருக்கை வசதிகள் செய்யப் பெற்றுள்ளன.

இங்கு நாய்களைத் தனியாக அவிழ்த்து விடக்கூடாதென்றும் அவை மலங்கழித்து சுத்தம் செய்யாவிடில் அதிகபட்சமாக 1000 டாலர் வரை சட்டப்படி அபராதம் விதிக்கப் பெறும் என்று எச்சரிக்கை செய்யப் பெற்றுள்ளது.

இங்குக் குளத்தில் தூண்டில்களைக் கொண்டு மீன்பிடிக்க உரிமை தரப்பெற்றுள்ளது. குளத்தின் பக்கம் பார்வையாளர்கள் அதிகம் இல்லை.

பந்துகள் விளையாடும் இடங்களிலும் டென்னிஸ் விளையாடும் இடங்களிலும் பார்வையாளர்கள் அதிகம் காணப்பெறுகின்றனர்.

சுமார் ஒரு மணிநேரம் பூங்காவில் அங்குமிங்குமாகச் சுற்றிப்பார்த்து வீடு திரும்புகின்றோம். இல்லத்தை அடையும் போது மணி 7.40 (மாலை). அமெரிக்காவில் பூங்காக்கள் அமைக்கப்பெறாத பகுதிகளே இல்லை என்று சொல்லலாம்.

**(6) ஜோன்ஸ் கடற்கரை ஸ்டேட் பூங்கா[1]:** ஒருநாள் மாலை 3.00 மணிக்கு இதனைக் காணச் சென்றோம். லாங்க் ஐலாந்து கடற்கரையில் 2413 ஏக்கர் நிலப்பரப்பைக் கொண்டது. இங்கு **ஜாஸ் வளைகுடா**[2] கடற்கரையையொட்டிய கடற்பகுதிகள், இரண்டு குட்டைகள் ஆகிய இடங்களில் கண்காணிப்பில் நீச்சல் ஆடிப் பார்க்க வசதிகள் உள்ளன. குளிக்கும் இல்லங்களும் உள்ளன. கடற்கரையில் நடந்து செல்ல வசதிகள் செய்யப் பெற்றுள்ளன. களம் 4-இல், கால்ஃப் விளையாடவும் களம் அமைந்த விளையாட்டுகள் நடைபெறவும் வசதிகள் உள்ளன. பந்து விளையாட்டுகள்[3] நடைபெறவும், வெட்டவெளி நடனங்கள்[4] நடைபெறவும் இலவச ஏற்பாடுகள் உண்டு. வாரஇறுதி நாட்களில் திட்டமிடப்பெற்ற நிகழ்ச்சிகள் நடைபெற ஏற்பாடுகள் உண்டு.

ஜூன் 2-வது வாரஇறுதி, தொழிலாளர் நாள்-ஆகிய நாட்களில் நாடோறும் காலை முதல் நள்ளிரவு வரையிலும் பூங்கா திறந்திருக்கும். இவை தவிர ஆண்டு முழுவதும் காலை முதல் மாலை வரையும் திறந்திருக்கும். நினைவு நாள் தொழிலாளர் நாள்களில் கார்நிறுத்த கட்டணம் 4 டாலர்; ஆண்டு முழுவதும் இலவசம்.

---

2. Tennis 3. Base Ball 4. Foot ball
1. Jones Beach State Park 2. Zach's Bay 3. Soft ball games
4. Out Door dancing

நாங்கள் சென்ற அன்று காற்றுவீசி குளிர் அதிகமாக இருந்தமையால் இறங்காமல் காரிலிருந்தபடியே சுற்றிப்பார்த்துவிட்டுத் திரும்பினோம். வழியில் வீடு கட்டும் பல்வேறு சாமான்கள் விற்கும் இடம்[5] சென்று பார்வையிட்டு ஒருசில சாமான்களை வாங்கிக் கொண்டு கணபதி கோயில் சென்று வழிபாடு முடித்துக் கொண்டு வீடு திரும்பினோம்-இரவு **8.30** மணி அளவில்.

## 3. அருங்காட்சியகங்கள்

அமெரிக்காவில் என் மகனுடன் நியுயார்க் இல்லத்தில் தங்கியிருந்த போது **இரண்டு** அருங்காட்சியகங்களைப் பார்க்க நேர்ந்தது.

**(1) அமெரிக்க அருங்காட்சியகம் (இயற்கை வரலாறு):** மான்காட்டனிலுள்ள இதனைப் பார்ப்பதற்கு (மே 26, ஞாயிறு) முற்பகல் 11.30 அளவில் நான், என்துணைவி, மகன் டாக்டர் இராமகிருஷ்ணன், மருமகள் விசயலக்குமி ஆகிய நால்வரும் சென்றோம்[1]. கார்நிறுத்துவது பெரும்பாடாய் விட்டது. தெருக்களைச் சுற்றிச்சுற்றி அலைந்து இறுதியில் ஓரிடம் கிடைத்தது. அங்குக் காரை நிறுத்திவிட்டு அருங்காட்சியத்திற்கு வருகின்றோம். பெரிய இடம்; சுற்றுவதற்கு எங்களால் இயலாது. ஆதலால், இரண்டு சக்கர நாற்காலிகள்[2] வாங்கப்பெற்றன (இவற்றிற்குக் கட்டணம் இல்லை) மகனும் மருமகளும் நாங்கள் அமர்ந்த நிலையில் தள்ளிக் கொண்டுவர சுற்றிப் பார்த்தோம். இந்தக் காட்சியகம் **நான்கு** தளங்களில் 42 மண்டபங்களில் அமைக்கப் பெற்றுள்ளது. சக்கர நாற்காலிகளுடன் தளங்களுக்கு ஏறுவதற்கும் இறங்குவதற்கும் மின்விசை ஏற்றங்கள்[3] உண்டு. சுற்றிப் பார்ப்பதற்கு விசாலமான வழுவழுப்பான தரைகள்; சிரமம் இல்லாமல் நடந்து சுற்றலாம். காட்சிப் பொருள்கள் அக்காலங்களில் அவை இருந்த இயற்கைச் சூழலிலேயே[4] அமைக்கப் பெற்றிருந்தமை அற்புதம். விண்வெளிக் காட்சிகளைக் காண்பதற்கு தனிப்படக் காட்சிசாலை[5] உள்ளது. அதற்குத் தனிக் கட்டணம் உண்டு. அதனைப் பார்த்தால், ஏனையவை பார்க்க முடியாத நிலை ஏற்படும் என்று நாங்கள் அதனைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை.

---

5. Home Depot
1. இது Frederick and Phineas and Sawdra Priest Rose Centre for Earth and Space - என்ற கட்டடத்தில் அமைந்திருந்தது. இது சில நாட்களுக்கு முன் பார்த்த மத்திய பூங்கா (Central Park) என்ற இடத்தில் தான் உள்ளது. முற்பகல் 10 மணி முதல் பிற்பகல் 5.45 வரை திறந்திருக்கும். வயது வந்தோருக்கு 10 டாலர்; முதியோருக்கு 7½ டாலர்.
2. Wheeled Chairs
3. Lift
4. Natural Environment
5. Theatre

**முதல்தளம்**[6]: என்னைச் சக்கர நாற்காலியில் என்மகனும், என் மனைவியை சக்கர நாற்காலியில் என் மருமகளும் மின் ஏற்றத்தில் ஏற்றி முதல் தளத்திற்குவந்து தள்ளிக் கொண்டுவர முதல் தளத்தில் வைக்கப் பெற்ற பொருள்களைப் பார்க்கத் தொடங்குகின்றோம். (படம் - 13)

(அ) முதலில், நிலவுலகம் ஆதியில் தோன்றிய முறை, பூகம்பம் (நிலநடுக்கம்) உண்டாகும் முறை எரிமலைகளின் தோற்றம் ஆகியவை அவை தோன்றும் சூழல்களைப் பெரிய அளவுகளில் காட்டப் பெற்றிருந்ததைக் கண்டு வியப்பெய்தினோம்.

(ஆ) அடுத்து சந்திரனின் தோற்றம் அப்போலோ-11 விண்கலம் அம்புலியில் இறங்கிய போது எடுக்கப் பெற்ற பல்வேறு ஒளிப்படங்களுடன் விளக்கப் பெற்றிருந்தமை அற்புதமாக இருந்தது. அந்த மண்டபத்திற்குப் போகும் முகப்பில் ஒரு பெரிய சந்திரனை அதன் பௌதிகத் தோற்றம் விளங்கும் படிமம் வைக்கப் பெற்றிருந்தது. பலர், இருவர் கைகோத்தநிலையில் ஒளிப்படங்கள் எடுத்துக் கொண்டிருந்ததையும் கண்டு மகிழ்ந்தோம்.

(இ) அடுத்து வட அமரிக்காவில் காணப்பெறும் பிராணிகள் குறிப்பாகப் பல்வறே மிருகங்கள், மரங்கள், பூமண்டலத்தில் காணப்பெறும் பல்வேறு கல்வகைகள் ஆகியவற்றைக் கண்டதை ஈண்டு விளக்குவேன். இந்த மண்டபத்தின் அகன்ற நுழைவாயிலின் முகப்பில் பதப்படுத்தப்பெற்ற பத்து பெரிய யானைகளின் கூட்டம் எங்களை மிரள வைத்தது. சில ஆண்டுகளுக்கு முன் என் மகன் கேரளாவில் பணியாற்றியபொழுது, ஓர் யாற்றில் படகில் சென்றபோது ஒரு புறக் கரைகளில் சில இடங்களில் குட்டிகள்-சிறியவை கொண்ட யானைக் கூட்டங்களைக் கண்டமையை நினைவு கூரச் செய்கின்றது.

**மிருக வகைகள்:** (1) பதப்படுத்தப் பெற்ற ஒரு பெரிய யானையொன்றை, முன்பு அது இருந்த இயற்கைச் சூழ்நிலை கெடாமல் வைக்கப் பெற்றிருந்ததைக் காணும் நாங்கள் வியப்படையாமல் இருக்க முடியவில்லை.

(2) ஓரிடத்தில் பண்டைய இயற்கைச் சூழ்நிலையில் சிறியனவும் பெரியனவுமான ஒன்றிரண்டு பதப்படுத்தப்பட்ட கலைமான்களைக் கண்டு மகிழ்ந்தோம். (படம் -14, 15)

(3) பண்டைய இயற்கைச் சூழ்நிலையில் கண்டோர் வியக்கும் வண்ணம் (அ) ஒரு காட்டெருமை, (ஆ) மலைச் செம்மறியாடுகளின் கூட்டம், (இ) முயல், கரடி (ஈ) ஓநாய்கள், நரிவகைகள், (உ) வெள்ளைவால் மான்வகைகள் (ஊ)

---

6. அமெரிக்காவில் தரைதளம் (Ground Floor) என்று சொல்லும் மரபு இல்லை. அதனை முதல் தளம் என்றே வழங்குவர்.

பல்வேறு வகை மான் கூட்டங்கள், (எ) மலைவாழ் கம்பீரமான் சிங்கம், (ஏ) காட்டுப்பன்றி வகைகள், (ஐ) கரடி வகைகள், (ஒ) அலாஸ்கா கபில நிறப் பெருங்கரடி, (ஓ) ஓரிடத்தில் பயங்கரமான அமெரிக்கன் காட்டெருமைகள், (ஔ) முள்ளம் பன்றி வகைகள், பூனை வகைகள், அணில் வகைகள், பயங்கரமான ஒரு சிறுத்தைப் புலி. பதப்படுத்தப்பெற்ற இம்மிருகங்களைக் காட்டப் பெறுங்கால் அவை வாழ்ந்த காடுகளின் தோற்றம் இயற்கைச் சூழ்நிலை காட்டப் பெற்றிருப்பது பார்ப்போரை வியப்புக் கடலில் மூழ்க வைத்து விடுகின்றது. (படம் - 16)

**வயல்வெளிகள்:** (1) ஓரிடத்தில் ஓர் ஆப்பிள்மரம் அற்புதமாகக் காட்டப்பெற்றிருந்தது - நான்கு நிலைகளில் (அ) ஒரு நிலையில் செழிப்புடன் வளர்ந்த ஆப்பிள் மரம், (ஆ) பிறிதொரு நிலையில் பூத்துக் குலுங்கும் ஆப்பிள் மரம், (இ) இன்னொரு நிலையில் காய்கள் தொங்கும் நிலையில் மரம், (ஈ) மற்றுமோர் நிலையில் கனிகள் தொங்கும் நிலையில் மரம்; இங்கும் சில கனிகள் மரத்தடியில் வைக்கப் பெற்றிருந்தன.

(2) **வயல்வெளிகளில்** (அ) கோடை, (ஆ) மாரி, (இ) குளிர், (ஈ) இலையுதிர் காலங்களில் பயிர்வகைகள் எப்படியிருந்தன என்பது மனம் கவரும் வண்ணம், பார்ப்பவர் வியப்பெய்யும் வண்ணம் அற்புதமாகக் காட்டப் பெற்றிருந்தது.

(3) **மலைமாற்றங்கள்:** பல மைல் தூரம் காணும் வண்ணம் (அ) பசுமைச் செழிப்புடன் ஒருபுறம்; (ஆ) அவையே கோடையில் கருகிக் காய்ந்திருக்கும் நிலை (அருகில்) மற்றொருபுறம் காட்டப்பெற்றிருந்தது. பார்ப்போர் இவ்விடத்தைவிட்டு அகலாமல் ஈர்த்துப் பிடித்தவண்ணம் இக்காட்சிகள் அமைந்திருந்தன.

(4) **சிறிய கடல் பகுதி** - அதில் ஒரு தோணி; **பெரிய கடல் பகுதி** - அதில் ஒரு பெரிய படகு; அக்கால இயற்கைச் சூழல் புலப்படும் வண்ணம் காட்டப் பெற்றிருப்பது கண்ணையும் கருத்தையும் கவர்வனவாக இருந்தன.

(5) **பல்வேறு கண்டங்களின் காட்சிகள்** ஓரிடத்தில் அமைக்கப் பெற்றிருந்தன. (அ) ஆஸ்திரேலியா, (ஆ) அமெரிக்கா, (இ) ஆஃபிரிக்கா, (ஈ) மெடிட்டரேனியன் பகுதிகள், (உ) ஐரோப்பா, (ஊ) ஆசியா. ஓரிடத்தில் ஒரு மிகப்பெரிய 'ஒக்' மரத்தின் அடிப்பகுதி காட்டப்பெற்றிருந்தது அற்புதம்.

(6) **மனிதனின் படிவளர்ச்சி**[7]: டார்வின் போன்ற அறிவியல் வல்லுநர்கள் குரங்கிலிருந்து மனித வளர்ச்சி நடைபெற்றதாகக் கூறுவர். ஓரிடத்தில் இரண்டு மனிதக் குரங்குகள். தொடர்ந்து பல்வேறு நிலைகளில் படிவளர்ச்சிகளில் அற்புதமாக காட்டப் பெற்றிருந்தன.

---

7. Evolution of man

(7) அமெரிக்காவின் ஆதிவாசிகள் செவ்விந்தியர்கள் முதலில் தோலாடைகளை உடுத்திவாழ்ந்தனர் என்பது முதலாகிய வாழ்க்கை வரலாறுகள், படங்கள் மூலம் விவரமாகக் காட்டப் பெற்றுள்ளன.

(8) எரிகற்கள், வீழ்கொள்ளிகள் முதலானவை நடைபெறும் காட்சிகள் படங்கள் மூலம் அற்புதமாகக் காட்டபெற்றுள்ளன. கடலுக்குள் நிலநடுக்கம் எப்படி நடைபெற்றுள்ளது என்பதைக் காட்டும் படங்கள் உள்ளன.

(9) அமெரிக்க மக்களின் பின்னணி; செவ்விந்தியர்கள் பண்டைநிலை - இவர்கள் கலந்து வந்த பல்வேறு நிலைகள், விளக்கமாகக் காட்டப் பெற்றுள்ளன - பல்வேறு விளக்கப் படங்களுடன்.

இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டு சற்று மேல் நிலையில் இரண்டு மூன்று படிகள் ஏறிய நிலைகளில் பூமியில் கிடைக்கும் பல்வேறு இரத்தின, வைரக்கற்கள் இயற்கையில் கிடைக்கும் பாங்குகளை விளக்கும் முறைகள் பல பெட்டி அடுக்குகளில் பிரித்து வைக்கப் பெற்றுள்ளன.

ஓரிடத்தில் நவரத்தினக் கற்கள் சிறிய அளவில் உள்ளன. பாறைகள் உருவாகும் முறைகளைக் காட்டும் கனிமங்கள், சிறுசிறு பலகையாலான மாடங்கள் பலவற்றில் பல்வேறுவகை சிறியதும் பெரியதுமான வைரக் கற்கள், கடலில் கிடைக்கும் முத்து வகைகள், கனிம வகைகள், உலகில் எந்த இடத்திலும் காணாத பல்வேறு நிற வைரங்கள் (அருங்காட்சியகத்தில் இருப்பது போல), பல்வேறு வகை வேதியியல் பொருள்களடங்கிய கனிமங்கள் தனித் தனியாக வைக்கப் பெற்றுள்ளன. வெளியில் திரும்பும்போது நுழைவாயிலில் மேற்புறம் வழுவழுப்பாக்கப் பெற்றுள்ள ஒரு பெரிய கனிமப் பாறை நமது கவனத்தை ஈர்க்கின்றது.

**இரண்டாவது தளம்:** இங்கு ஆஃபிரிக்காவிலுள்ள மிருக வகைகள் (பதப்படுத்தப் பெற்றவை) வைக்கப் பெற்றுள்ளன.

முதலில் பார்த்தது மிகப் பெரிய மனிதக் குரங்கு[8]; அருகில் மான் வகைகள். அடுத்துக் கண்டது. ஓகாபி[9] என்ற பிராணி. இது மத்திய ஆஃபிரிக்காவில் வெப்ப மண்டல மழைப் பிரதேசத்தில் வாழ்வது; இலை வகைகள், மெதுவான தாவர வகைகள், பழவகைகள் முதலானவற்றை உணவாகக் கொள்வது.

அடுத்துக் கண்டவை கலைமான் வகை; முகத்திலும் கால்களிலும் வளைவான வெள்ளைக் கோடுகளமைந்த கரடி வகை. நான்கு இடங்களில் நான்கு வகையான மான்கள் நம் கவனத்தை ஈர்க்கின்றன. ஓரிடத்தில்

---

8. Gorilla 9. Okapi

இரண்டு மூன்று பயங்கர உருவத்தைக் கொண்ட பெரிய காட்டெருமைகள் காணப் பெறுகின்றன.

அடுத்து சிங்கங்கள் உள்ள இடத்திற்கு வருகின்றோம். கம்பீரமான பிடரிமயிரைக் கொண்ட பெரிய ஆண்சிங்கம், அதனைச் சுற்றிலும் பல இடங்களில் ஒன்றிரண்டு பெண் சிங்கங்கள்-பலகல் தொலைவில் காணப் பெறுமாறுள்ள சூழ்நிலையில் இருப்பனவாகக் காட்டப் பெற்றிருப்பது காண்போர் கவனத்தைக் கவர்வதாக உள்ளது.

அடுத்து அவை வாழ்ந்த இயற்கைச் சூழ்நிலையிலேயே காண்பவை மான், வரிக்குதிரை[10] தொடர்ந்து ஆடுமாடுகள், உழவுக் கருவிகள் அந்தந்த இயற்கைச் சூழ்நிலையிலேயே காண்கின்றோம்.

**மெக்சிகோ-மத்திய அமெரிக்கப் பகுதிகள்: (1)** தென் அமெரிக்கா பெரிய பருந்துவகைகள்[11]. அவை வாழ்ந்த பெரிய சூழ்நிலைகளுடன் தெளிவாகக் காட்டப் பெற்றுள்ளன. காட்சிகள் அற்புதமாக கண்ணையும் கருத்தையும் ஆர்வத்துடன் ஈர்ப்பனவாக அமைந்துள்ளன.

(2) ஜப்பான் நாட்டைப்பற்றிய சில காட்சிகள் தக்க சூழ்நிலைகளுடன் தெளிவாகக் காட்டப் பெற்றுள்ளன. சில நகரங்கள் பற்றிய காட்சிகள் அற்புதமாக அமைந்துள்ளன.

**ஆசிய கண்டத்தின் மிருகங்கள்: (1)** ஆசிய நாட்டு சில மிருகங்கள் அவை வாழ்ந்த சூழ்நிலைகளுடன் நன்கு காட்டப் பெற்றுள்ளன.

(2) **இந்தியா:** (அ) விநாயகர், முருகன் போன்ற சில கடவுளர்களின் உருவங்கள் தெளிவாகக் காட்டப் பெற்றுள்ளன.

(ஆ) இந்திய மக்கள் கையாண்ட சில ஆயுத வகைகள் தக்க உருவங்களில் அமைத்துத் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளன.

(இ) விழாக்கள்[12] சில விவரங்களுடன் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளன.

(ஈ) வடஇந்திய மக்களின் பழக்க வழக்கங்கள் சில படங்களுடன் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளன. நாகாலாந்து மக்களைப் பற்றிய குறிப்புகள் தெளிவாகக் காட்டப் பெற்றுள்ளன. தென் இந்தியாவைப்பற்றி, குறிப்பாக தமிழ், தெலுங்கு, கன்னட மக்களின் பழக்க வழக்கங்கள் ஏனோ இடம் பெறவில்லை.

---

10. Zebra  11. Vultures  12. Festivals

(உ) சீனா, மங்கோலியா, இரஷ்ய நாடுகளின் தொடர்பு கொண்டுள்ள **சீனாவின் பெரிய சுவர்**[13] மிகத் தெளிவான படவிளக்கத்துடன் காட்டப் பெற்றுள்ளன.

(3) **ஆசியாவின் பாலூட்டும் பிராணிகள்: (அ) காண்டாமிருகம்**[14] மிகப் பெரிய அளவில் இயற்கை சூழ்நிலைகளுடன் காட்டப் பெற்றுள்ளது. இங்ஙனமே (ஆ) காட்டெருமை, (இ) யானை, (ஈ) மான் வகைகள், (உ) குரங்கு வகைகள் மிகப் பெரிய அளவில் அவை வாழ்ந்த இயற்கைச் சூழ்நிலைகளுடன் காட்டி விளக்கம் பெறுமாறு அமைக்கப் பெற்றுள்ளன.

**மூன்றாவது தளம்:** இங்குக் கண்டவற்றை ஈண்டு வரிசையாகக் குறிக்கின்றேன்.

(1) **ஆஃபிரிக்க நாட்டுப் பாலூட்டும் பிராணிகள்: (அ) காட்டுப்பன்றி** - வாழ்ந்த சூழ்நிலையில் பெரிய அளவில் காண்போர் கவனத்தை ஈர்க்கும் வண்ணம் காட்டப் பெற்றுள்ளது. இங்ஙனமே (ஆ) கிளைக் கொம்புகளையுடைய மான்கள், (இ) பல்வேறு குரங்கு வகைகள், (ஈ) சிறுத்தைப்புலி-பெரியது, (உ) பன்றி வகைகள், (ஊ) காட்டு நாய், (எ) காண்டாமிருகம், இவையாவும் தனித்தனியாகப் பெரிய அளவில் அவை வாழ்ந்த சூழ்நிலைகளிலேயே காட்டப் பெற்றுள்ளன. பதப்படுத்தப் பெற்றவையாயினும் உயிருள்ளனபோல் காணப்பெறுகின்றன.

(2) **நெருப்புக்கோழி**[15]: மிக வேகமாக ஓடக் கூடிய பிராணி. மிகப் பெரிய முட்டைகளை ஈனக் கூடியது. பல பெரிய முட்டைக் குவியலுடன் காட்டப் பெற்றுள்ளது அது வாழும் இயற்கைச் சூழலுடன்.

(3) **கருடன் போல்** கழுத்தில் வெண்மை நிறங் கொண்ட செந்நிறப் பறவைகளின் கூட்டம் நம் கவனத்தைக் கவர்வனவாக உள்ளது.

(4) **நியுயார்க் நகரில் காணப்பெறும் பறவைகள்:** இவை புழு, பூச்சிகளைத் தின்று வாழ்பவை. இவையும் பெரிய அளவில் அவை வாழும் சூழ்நிலை கெடாமல் காட்டப் பெற்றுள்ளன.

**(அ) கழுகு, (ஆ) கொக்கு, (இ) வாத்து, (ஈ) காட்டுவான்கோழி**[16]- இவைத் தனித்தனியே அவை வாழும் சூழ்நிலையில் பெரிய அளவில் காட்டப் பெற்றுள்ளன.

இவை தவிர நம் கவனத்தைக் கவர்ந்தவை (அ) குரங்கு வகைகள், (ஆ) மனிதர்கள் - அவர்கள் பயன்படுத்தும் ஆயுத வகைகள், (இ) செவ்விந்தியர்கள்-

---

13. Great Wall of China 14. Rhinoceros 15. Ostrich
16. Wild Turkey

அவர்கள் பயன்படுத்திய ஆயுதவகைகள், (ஈ) குதிரைகள் - இவை யாவும் பெரிய அளவில் சூழ்நிலைகளுடன் மிகத் தெளிவாகக் காட்டப் பெற்றுள்ளன.

(5) **பசிபிக் பிரதேசம்:** இப்பிரதேசத்தில் அக்காலத்தில் வாழ்ந்த மக்களின் நாகரிகத்தைக் காட்டும் பான்மையில் அவர்கள் பயன்படுத்திய தோணி வகைகள், ஆயுத வகைகள், பாத்திர வகைகள், குடிசை வகைகள் முதலியவை சூழ்நிலைகளுடன் பெரிய அளவில் விளக்கமாகக் காட்டப் பெற்றுள்ளன. இங்குக் குரங்கு வகைகளும் அதிகமாக இருந்தன என்று தனியாகப் பெரிய அளவில் காட்டப் பெற்றுள்ளன.

**நான்காவது தளம்:** வழக்கற்று அழிந்து போன பிராணிகளைப் பற்றிய செய்திகள் இங்கு விளக்கப் பெறுகின்றன. இவற்றின் எலும்புக் கூடுகள் மட்டிலுமே காட்சிக்கு வைக்கப் பெற்றுள்ளன.

(1) **டைனாசர்ஸ்**[17] என்ற பிராணியின் எலும்புக் கூடு நுழைவாயிலிலுள்ள ஒரு பெரிய அறை முழுவதையும் அடைத்துக் கொண்டிருந்தது; பார்க்கவே மிகப் பயங்கரம். அஃது உயிரோடுள்ள மிருகமாக இருக்கும்போது எவ்வளவு பயங்கரமாக இருந்திருக்கக் கூடுமோ என்று நினைத்துப் பார்க்கவே அச்சமாக உள்ளது.

(2) **பெரிய ஆமை**யொன்றின் எலும்புக்கூடு. இஃது எவ்வளவு பெரிய ஆமை உருவில் இருந்திருக்கக் கூடும் என்று நினைத்து பார்க்கமுடிகிறது.

(3) **முதுகெலும்புள்ள ஊர்ந்து** செல்லும் பல்வேறு வகையான பிராணிகளின் எலும்புக் கூடுகள் தனித்தனியாக வைக்கப் பெற்றுள்ளவற்றைக் கண்டு மகிழ்ந்தோம்.

(4) பல்வேறு வகை **மீன்களின்** எலும்புக் கூடுகள் தனித்தனியாகப் பார்வைக்கு வைக்கப் பெற்றுள்ளன.

(5) பழங்காலத்து **மிகப் பெரிய யானை** யொன்றன் எலும்புக் கூடு எங்கள் கவனத்தை ஈர்த்தது. இஃது உயிருள்ள யானையாயிருந்தபோது எவ்வளவு பெரிய உருவமுடைய பிராணியாக இருந்திருக்கக் கூடும் என்பதை நினைத்துப் பார்க்கின்றோம். இது உண்மையான யானை உருவில் இருந்தபோது புராணப் புகழ்பெற்ற இந்திரனின் **ஐராவதம்** என்ற வெள்ளை யானையை விடப் பெரிதாக இருந்திருக்கக் கூடுமோ என்று எண்ணிப் பார்த்து மகிழ்கின்றோம்.

(6) மிகப் பெரிய **காட்டெருமையின்**[18] எலும்புக் கூடு ஒன்றும் பார்ப்போரின் கவனத்தைக் கவர வல்லதாக உள்ளது.

---

17. Dinosaurs 18. Bison

(7) இன்னும் **பல்வேறு வகைப் பிராணிகளின்** எலும்புக் கூடுகள் தனித்தனியாக வைக்கப் பெற்றுள்ளன. அவற்றையெல்லாம் பார்த்து மகிழ்ந்தவண்ணம் வீடு திரும்ப ஆயத்தமாகின்றோம்.

வயது முதிர்ந்து தளர்ந்த நிலையிலிருக்கும் எங்களை என் மருமகளும் மகனும் சக்கர நாற்காலிகளில் அமரவைத்துத் தள்ளிக் கொண்டு வராவிட்டால் இவ்வளவு பெரிய இடங்களைச் சுற்றிப் பார்க்க இயலாது என்பதை எண்ணி பார்த்து அவர்களது அன்பையும் பாசத்தையும் நினைந்து பார்த்து உள்ளம் களிப்பெய்த உடல் புளகாங்கிதம் கொள்ள பூரித்து மகிழ்கின்றோம். சுற்றிப் பார்க்க மாலை **நான்கு மணி** வரை ஆகின்றது. தரை தளத்திலுள்ளவற்றைப் பார்ப்பதற்கே அதிக நேரம் ஆயிற்று.

சக்கர நாற்காலிகளுடன் மின்ஏற்ற வசதியுள்ள இடத்திற்கு வந்து எளிதாகக் கீழிறங்கி சக்கர நாற்காலிகளை உரியவரிடம் தந்துவிட்டு வீடுதிரும்ப நினைக்க எண்ணுகின்றோம்.

கார் நிறுத்த இடவசதியைத் தேடி எங்கோ இரண்டு தெருக்களுக்கப்பால் நிறுத்திவிட்டு வந்த எங்கள் மகன் டாக்டர். இராமகிருஷ்ணன் எங்கள் மூவரையும் காட்சியகத்தின் கீழே இருக்க வைத்து விட்டுத் தான் மட்டும் சென்று காரை எடுத்துக் கொண்டு வருகின்றான். முன்னொரு நாள் புத்தவிகாரைப் பார்க்க முடியாமல் ஏமாற்றமடைந்த, புத்த பகவான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை அடைகின்றோம்[19].

**(2) இன்ட்ரெபிட் கடல்-காற்று-விண்வெளி பழம் பொருள் காட்சியகம்[1]:** நியுயார்க் மான்காட்டன் மேற்குக் கோடியில் **46**-ஆம் தெரு **12**-வது அவின்யூ இவற்றின் கோடியிலும்[2] ஹட்சன் நதியிலுமாக அமைக்கப்பெற்ற போர்க் கப்பல் இது. இரண்டாம் உலகப் பெரும் போரில் பங்கு கொண்டு வெற்றி வாகை சூடி மிகு புகழ்பெற்ற மரக்கலமாகும். அமெரிக்க நாட்டு வரலாற்றில் இன்று மிகுந்த வியத்தகு கவர்ச்சிகளில் ஒன்றாக நியுயார்க் மாநகரில் திகழ்ந்து வருகின்றது.

இதனைப் பார்க்கும் நோக்கத்துடன் ஞாயிறன்று முற்பகல் **10** மணிக்குக் காரில் புறப்பட்டோம். நாம் இருக்குமிடத்திலிருந்து இது சுமார் **20** கல் தொலைவிலுள்ளது. அன்று ஏதோ பள்ளிப் பிள்ளைகட்கு விழாக்களும் மிதிவண்டி ஓட்டப்பந்தயமும் நடைபெற்றதால் பிள்ளைகள் நடமாட்டத்திற்காக

19. New York Buddhis Vihara, 214-22 Spencer Avenue, Hollis Hillss, Ny 11427 Tel (718) 468-4212, Fax (718) 468-5283, Web, www. newyorkbuddhist.org.
1. Intrepid Sea-Air-Space Museum.
2. மத்தியப் பூங்காவைப் பார்க்கச் சென்றபோது நம் கவனத்தை ஈர்த்த தெருக்களின் எண்ணிக்கை அவின்யூவின் எண்ணிக்கை ஆகியவற்றை நினைவு கூர்கின்றோம்.

கார் செல்லும் நேர்வழிகள் முடக்கப் பெற்றிருந்ததால் சில கல் தொலைவு சுற்றிக் கொண்டு சென்று அந்த இடத்தை அடைய வேண்டியதாயிற்று. இந்தப் போர்க் கப்பலைப் பார்க்க ஏராளமான மக்கள் கார்களில் வருவதால் அருகில் கார்கள் நிறுத்த இடவசதிகள் செய்யப்பெறவில்லை. சற்றுத் தொலைவில் இரண்டு மூன்று தெருக்களைத் தாண்டிக் கார்களை நிறுத்த கட்டணங்களைப் பெற்று வசதிகளைச் செய்து வருகின்றன சில நிறுவனங்கள். எங்களைக் கப்பல் இருக்கும் இடத்தில் இறக்கிவிட்டு என் மகன் 20 டாலர் கட்டணம் செலுத்தி கார்கள் நிறுத்தும் இடத்தில் காரை நிறுத்திவிட்டு எங்களிடம் வந்து சேர்ந்தான்.

மகன் திரும்பிய பிறகு நாங்கள் கட்டணங்கள் வாங்கும் இடத்திற்குச் செல்கின்றோம். பெரியவர்கட்கு 13 டாலர்; முதியோருக்கு 9 டாலர்; சிறுவர்கட்கு 4 டாலர் என்ற விளம்பரம் இருந்தது. இதன்படி என் மகனுக்கும் மருமகளுக்கும், எனக்கும் என் மனைவிக்குமாக நான்கு நுழைவாயில் சீட்டுகள் வாங்கிக் கொண்டு வருகின்றோம். பல வாயில்களைக் கடந்து கப்பல்கள் இருக்கும் இடத்தை நோக்கி வருகின்றோம். மூன்று கப்பல்கள் நம் கண்ணில் படுகின்றன.

(1) யு.எஸ்.எஸ். இன்ட்ரெபிட் (சிவி எஸ்-11) என்ற போர் விமானங்கள் தாங்கியுள்ள கப்பல். இஃது இடப்புறமாக ஹட்சன் ஆற்றில் மிதவையாக அமைந்துள்ளது[3].

(2) யு.எஸ்.எஸ். குரோவ்லர். நாசம்புரியும் ஏவுகணைகளை இயக்கும் நீர்மூழ்கிக் கப்பல்[4].

(3) யு.எஸ்.எஸ். எட்சன் என்ற அழிபடைக்கருவி[5].

இவை பற்றிய சில விவரங்கள்

**(1) யு. எஸ். எஸ். இன்ட்ரெபிட் (சிவிஎஸ்-11):** அமெரிக்க ஐக்கிய நாட்டு இன்ட்ரெபிட் 1943-ஆகஸ்டு 16-இல் தயாராயிற்று. இது இரண்டாம் உலகப் பெரும்போரில் பசிபிக் மாக்கடலில் நடைபெற்ற எண்ணற்ற போர் முற்றுகையில் பங்கு கொண்டு குண்டுகட்கும் ஏவுகணைத்[6] தாக்குதலுக்கும் தப்பியது. 1960-களில் நடைபெற்ற விண்வெளிப் போட்டிப் பந்தயங்களில்[7] இன்ட்ரெபிட் நாசாவுக்கு[8] முக்கிய திரும்பப்பெறும் கலனாகச் செயற்பட்டது. வியட்நாம் போரில் மூன்று முறை செயற்பட்ட பிறகு, பனிப்போர் காலத்தில்[9] நீர்மூழ்கிக் கப்பல்களைத் தாக்கும் கருவிகளைக் கொண்டு தாக்கும்

3. U.S.S. Intrepid CVS-11. 4. U.S.S. Growler-Guided-Missile Submarine.
5. U.S.S. Edson-Forest Sherman Class Destroyer
6. Torpedo 7. Space Race 8. NASA
9. Cold War-era

சோவியத் அச்சுறுத்தலால் இன்ட்ரெபிட் தனது சேவையை 1954-இல் நிறுத்திக் கொண்டு விட்டது.

போர் ஓய்விற்குப் பின்னர் இன்ட்ரெபிட் பயனற்ற பொருள்கள் கிடக்கும் இடத்திற்குத்தள்ள வேண்டியநிலைதான். ஆனால், அதற்குப் பதிலாக அது 1982-இல் உலகத்தின் முதல் பெரிய 'மிதக்கும் பழம் பொருள் காப்பகமாக'[10] மாற்றப்பெற்றுவிட்டது. இப்பொழுது பார்வையாளர்கள் கப்பலை இயக்கும்படியிலிருந்துகொண்டே நாட்டின் வரலாற்றை ஆய்பவர்களாக அமைகின்றனர்; கடல் காற்று விண்வெளி அமெரிக்க செயல் துணுக்கப்படி வளர்ச்சியை ஆராயத் துணிவுடையவராகின்றனர்.

**(2) யு. எஸ். எஸ். குரோவ்லர்:** இந்த நீர் மூழ்கிக் கப்பல் அணு ஆயுதத் தாக்குதலைத் தடுக்கவல்லது. இது இன்ட்ரெபிட்டிற்குப் போகும் வழியில் தனியாக வைக்கப் பெற்றுள்ளது. உள்ளே சென்று பார்க்க அனுமதி உண்டு. இருட்டாக இருக்கும். நாங்கள் இதனுள் சென்று பார்க்கவில்லை.

**(3) யு. எஸ். எஸ். எட்சன்:** குரோவ்லருக்கு அப்பால் தனியாக வைக்கப் பெற்றுள்ளது. இது வியட்நாம் போர் நடைபெற்றபோது பலமுற்றுகைகளில் பெரும்பங்கு கொண்டது. வெளியிலிருந்து மேல்வாரியாகப் பார்த்தோம். உட்சென்று பார்க்கவில்லை.

உள்ளே புகுவதற்குமுன் இன்ட்ரெபிட் கப்பல் பற்றி மேலும் சில கவர்ச்சிகரமான தகவல்களைத் தெரிந்து கொள்வோம். கப்பல் கட்டமைப்பு விலை 44,000,000 டாலர். எடை 27,100 டன்கள். எண்ணெய் போட்ட பிறகு எடை 33,000 டன்கள். கப்பலின் நீளம் 898 அடி; அடிமட்டத்திலிருந்து உயரம் 152 அடி. சுக்கானின் குறுக்கு விட்டத்தின்[11] அகலம் 103 அடி, மேல்மட்ட விட்டத்தின் அகலம் 152 அடி. நீரில் மூழ்கியிருக்கும் ஆழம் 31 அடி. ஆற்றல் அமைப்பு[12]-8 கொதிகலன்கள்[13], 4 சுழலும் நீராவிப் பொறிகள்[14], 4.15 அடி குறுக்கு விட்டமுள்ள சுழலும் இயக்கிகள்[15].

**கப்பலின் கொள்ளளவு[16]:** எரிபொருள் கொள்ளளவு 1,600,000 காலன்கள். மேலியக்கும் வாயு 3,00,000 காலன்கள். மேல்-கீழ் இயங்கும் அமைப்புகள் 3, நீராவிக் கவண் அமைப்புகள்2. தாழ்ப்பாள் உள்ள கதவுகள் 1,600. தொலை பேசிகள் 500. குடிநீர்க் குழாய்கள் 70. மின்கம்பித் தொகுப்புகள்[17] 20,000 மைல்கள். குழல்களும் குழல் அமைப்புகளும்[18] 380 மைல்கள். நீராவியைக் குளிர்விக்கும் முறையில் நாடோறும் தயாராகும்

---

10. Floating Museum
11. Hall Beam
12. Power plant
13. Boilers
14. Steam turbines
15. Propellers
16. Capacity
17. Elevators
18. Piping and Tubing.

தூயநீர் 85,000 காலன்கள் கப்பலில் பணியாளர்கள் 3500. கப்பலில் போர்த் தொடக்கத்திலிருந்த போர்விமானங்கள் 80-90; போர் முடிவில் இருந்தவை 110.

**போரில் இதன் செயல்கள்:** எதிரிகளின் போர் விமானங்களில் விமான அமைப்புகளால் சுட்டு வீழ்த்தப் பெற்றவை-266. கப்பலிலுள்ள துப்பாக்கி அமைப்புகளால் வீழ்த்தப் பெற்றவை 14. தரையிலிருந்து வீழ்த்தப் பெற்றவை 298. எதிரிகளின் போர்க் கப்பல்களில் மூழ்கடிக்கப் பெற்றவை 106; பழுதாக்கி செயலிழக்கப் பெற்றவை 178.

**எட்டுமாத கால செயற்பாடு:** இக்காலப் பகுதியில் பயணித்த தொலைவு 1,00,000 மைல்கள். எரிக்கப்பெற்ற எரிபொருளின் அளவு 16,000,000 காலன்கள். மேலியக்கும் வாயுவை எரித்த அளவு 8,00,000 காலன்கள். பயன்படுத்திய குடிநீர் 25,000,000 காலன்கள். உண்ட உணவு 3,200,000 இராத்தல்கள். சலவை செய்யப்பெற்ற துணிகள் அளவு 3,000,000 இராத்தல்கள். நாடோறும் பயன்பட்ட காபி அளவு 300 இராத்தல்கள். ஒருமுறை உணவில் உண்ட உருளைக்கிழங்கு ஒரு டன்.

இவற்றை அறிந்த நமக்கு தலைசுற்றத் தொடங்குகின்றது. மனித ஆணவத்தால் நேரிட்ட போரின் விளைவுகளைக் கண்டு வியப்பு ஒருபுறம்; எரிச்சல் ஒருபுறம்; எழும் சினம் ஒரு புறம். இந்நிலையில் வள்ளுவரின் பொய்யா மொழிகள் நினைவிற்கு வருகின்றன.

*இகல் என்னும் எவ்வநோய் நீக்கின் தவலில்லாத்*
*தாவில் விளக்கம் தரும்*[19]

ஒருவன் 'மாறுபாடு' என்னும் துன்பம் செய்யும் நோயை மனத்திலிருந்து நீக்கிவிட்டால் அஃது அவனுக்கு எந்தக் காலத்திலும் அழிவில்லாத நிலையான புகழைக் கொடுக்கும் என்கிறார். இக்கருத்து தனிப்பட்ட நபருக்கு அன்றி நாட்டிற்கும் பொருந்தும். நல்ல எண்ணத்துடன் ஐ.நா. நிறுவனம் இது நேரிடாமல் இருப்பதற்காகவே ஏற்படுத்தப் பெற்றுள்ளது. இதில் சேர்ந்துள்ள நாடுகள் அகந்தையையும் ஆணவத்தையும் ஒதுக்கி வைத்துவிட்டு நன்னோக்கத்துடன் செயற்பட்டால் உலகிற்கு நன்மை பயக்கும்.

காரை ஓர் ஒதுக்கிடத்தில் நிறுத்திய என் மகன் இன்ட்ரெபிட் கப்பலுக்குள் அழைத்துச் செல்லுகின்றான். இஃது ஒரு மிதக்கும் அருங்காட்சியகமாகும். ஒரு சிறிய இரும்பாலான பாலம். அதனை கடந்து கப்பலின் நடுத்தட்டுக்கு வருகின்றோம். முதலில் இக்கப்பல் மாதிரி செய்யப்

---

19. குறள்–853 (இகல்–3)

பெற்ற பொம்மைக் கப்பலைக் கண்ணுறுகின்றோம். டைட்டானிக்[20] கப்பல் மாதிரி உள்ள பொம்மைக் கப்பலையும் பார்க்கின்றோம். ஓரிடத்தில் போர் வீரர்கள் எப்படியிருப்பர் என்பதை விளக்கப் போர் ஆடைகளை அணிந்த நிலையில் மூன்று பொம்மைவீரர்கள் வைக்கப் பெற்றிருப்பதை நோக்குகின்றோம். பலவேறு போர் வீரர்களின் தலைக்கவசங்கள்[21] பார்வையாளர்கள் கவனத்தை ஈர்ப்பதற்காக வைக்கப் பெற்றுள்ளதைக் கவனிக்கின்றோம்; போர் வீரர்கள் அணியும் காலணிகளைக்[22] காணமுடிகின்றது; வெவ்வேறு வகைப் போர் உடுப்புகள் ஓரிடத்தில் வைக்கப் பெற்றிருந்ததைக் காண்கின்றோம். போர்வீரர்கள் பயன்படுத்தும் சாமான்கள், சட்டைகளில் அவர்கள் குத்திக் கொள்ளும் அடையாளம்[23], பயன்படுத்திய தாள்கள், இறந்தவர்கள் எலும்புகள், சாம்பல் முதலியவைகள் காட்சிக்கு வைக்கப் பெற்றுள்ளன.

மூன்று நான்கு இடங்களில் கப்பலின் மேல்தட்டில் வைக்கப் பெற்றுள்ள விமானங்கள் போன்ற பொம்மை விமானங்கள் படகு போன்ற அமைப்புகளில் காட்சிக்கு வைக்கப் பெற்றுள்ளன. இன்னும் எத்தனையோ சொல்லி முடியா நினைவுச் சின்னங்கள் காட்சிகளாக அமைந்துள்ளன.

விமானத்தில் பறக்கும்போது பெறும் உணர்வுகளை அநுபவிப்பதற்கான சுழலும் அமைப்புகள்[24] வைக்கப் பெற்றுள்ளன. தனிக்கட்டணம் செலுத்தி அவற்றில் ஏறி இந்த அநுபவத்தைப் பெறலாம். என் வயது நிலைக்கு அது ஒவ்வாததால் நான் அந்த ஏற்பாட்டைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பவில்லை. கப்பலில் இருந்தவாறே விண்ணில் பறந்து பெறும் அநுபவங்களை நிதர்சனமாகக் காட்டும் அற்புதமான அமைப்புகள் இவை.

ஆண்டு முழுவதும் இந்த பழம்பொருள் அருங்காட்சியகம்[25] சிறப்புக்காட்சிப் பொருள்களையும்[26] நிகழ்ச்சிகளையும் காட்டுவதற்கான ஏற்பாடுகள் உள்ளன. நாங்கள் சென்ற அன்று சிலவற்றைக் கண்டுகளித்தோம். அப்போலோ-11 என்ற விண்வெளிக்கலம் அம்புலி மண்டலத்தில் இறங்கினபோது அம்மண்டலத்தின் தரைநிலைகள் காட்டப்பெற்றதைப் பார்த்தது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும்.

இங்கு இன்னொரு காட்சியக ஏற்பாடு உண்டு. மிக்க செயல் நுணுக்கப் பொறியமைப்புள்ள ஏற்பாடு இது. ஒரு கட்டணம் தந்து இதனுள் நுழைந்தால் கடற்படைக் கப்பலில் செல்லும் போது ஏற்படும் திடீர் உணர்வுகளால் நேரிடும்

---

20. Titanic (1912). இதில் இறந்தவர்கள் 2223 பேர்
21. Helmets
22. Shoe
23. Emblem
24. Simulators
25 Museum
26 Exhibits

மகிழ்ச்சிப் பெருக்கை அநுபவிக்கலாம். என் வயதுக்கு உகந்ததாக இல்லாததால் இந்த அநுபவத்தைப் பெறவிரும்பவில்லை.

அடுத்து மின்விசை ஏற்றத்தின் மூலம் கப்பலின் மேல் தட்டுக்கு வருகின்றோம். ஏ-12 பிளாக்பேர்டு என்ற மிகவும் விரைந்து செல்லும் உளவுபார்க்கும் விமானம் நம் கவனத்தைக் கவர்கின்றது. வரிசை வரிசையாக வைக்கப் பெற்றுள்ள போர் விமானங்களைக் கண்டு வியப்பெய்துகின்றோம். இவை எத்தகைய அழிவுச் செயல் ஏற்படுத்தியிருக்க வேண்டும் என்பவற்றை நினைந்து பார்க்கின்றோம். இந்தத் தளத்திலிருந்து கொண்டே கீழேயுள்ள அழிபடைக் கருவியையும் நீர் மூழ்கிக் கப்பலையும் காண்கின்றோம். அழிபடைக் கருவிகளின் செயற்படு அமைப்புகளைக் கண்டு வியப்பெய்துகின்றோம். (படம் - 17)

**கப்பல் பணியாளர் உண்ணும் தளம்[28]:** இவற்றையெல்லாம் நிதானமாகப் பார்த்துக் கொண்டே மின்விசை இறக்கம் மூலம் பணியாளர் உண்ணும் தளத்திற்கு வருகின்றோம். இன்ட்ரெபிட்டின் மிக அடிமட்டத்தில் உள்ளது இப்பகுதி. அண்மைக் காலமாகத் தான் இது பொதுமக்கள் பார்வைக்கு ஏற்பாடாகியுள்ளது என்பதை அறிகின்றோம். இது மிகவும் விசாலமான பகுதி. சமையலறை, உண்ணும் விசாலமான பகுதி, ஓய்வு கொள்ளும் பகுதி என பல பகுதிகள். வளைந்து வளைந்து வந்து இப்பகுதிகளை கண்டு வியப்பெய்துகின்றோம். அனைத்தும் அற்புதமான அழகான அமைப்புகள். உயிர்களைப் பணயம் வைத்துப் போர்த்தொழில்களில் இறங்கியவர்களல்லவா ?

மீண்டும் மின்விசை ஏற்றம் மூலம் நடுத்தளத்திற்கு வந்து சிறிய இரும்புப் பாலத்தின் வழியாக வெளியே வருகின்றோம். அழிபடைக் கருவியையும் நீர்மூழ்கிக் கப்பலையும் உள் சென்று பார்க்கவில்லை. வெளியிலிருந்தே பார்த்தவண்ணம் வீடு திரும்ப ஆயத்தமாகின்றோம்.

**கப்பலை பார்க்கும் நேரம்:** இளவேனில்/வேனில் காலங்களில்[29] (ஏப்ரல் 1-செப்டம்பர் 30). திங்கள்-வெள்ளி முற்பகல் 10 மணி முதல் மாலை 5 மணி வரை. சனி-ஞாயிறு விடுமுறை நாட்களில் முற்பகல் 10 மணி முதல் இரவு 7 மணி வரை. இலையுதிர் காலம்/மழைக்காலம்[30] (அக்டோபர் 1-மார்ச் 31) செவ்வாய்-ஞாயிறு முற்பகல் 10 மணி முதல்-பிற்பகல் 5 மணி வரை. மூடுவதற்கு 1 மணி முன்னால் வரை நுழைவு அனுமதிக்கப்பெறும். நன்றி வழங்கும் கிறிஸ்துமஸ் நாட்களில் மூடப் பெற்றிருக்கும். எல்லா விடுமுறை நாட்களிலும் திறந்திருக்கும்.

---

27 Elevator　　28. Crew-Mess Deck

29. Spiring/Summer　　30. Fall-Winter

இச்செய்திகளை அறிந்தவண்ணம் எல்லோருமே சில தெருக்களைக் கடந்து கார் நிறுத்தப் பெற்றுள்ள இடத்திற்கு வருகின்றோம். காரில் வீடு திரும்புகின்றோம். வரும்போது சில தடைகளிருந்ததால் சுற்று வழிகளில் வந்தோம் அல்லவா ? அத் தடைகள் நீக்கப் பெற்று விட்டதால் நேர் வழியில் திரும்புகின்றோம். ஐ.நா. கட்டடத்தின்[31] அருகிலும் சிட்டி வங்கியின்[32] உயர்ந்த கட்டடத்தின் அருகிலும் வர நேரிடுகின்றது. அவற்றை நிதானமாக நோக்கி மகிழ்ந்த வண்ணம் பிற்பகல் 2.15 மணிக்கு இல்லத்தை அடைகின்றோம். (படம் - 18)

## 4. கடைகள்

மனிதன் தனக்குத் தேவையானவற்றை வாங்குவதற்கு இன்றியமையாத அமைப்புகள் கடைகள். அமெரிக்காவில் இத்தகைய அமைப்புகள் மிக அற்புதமாக அமைந்துள்ளன. என் மகனுடன் தங்கியிருந்தபோது **நான்கு** கடைகளுக்குக் கூட்டிச் சென்றான். அவை பற்றிய விவரங்களை ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

**1. ஜேக்சன் உயர்வுகள்[1]**: (ஏப்ரல் 18 அன்று இதனைக் காணச் சென்றோம்.) இப்படி ஓர் இடம். என் மகன் இல்லத்திலிருந்து சற்றேறக்குறைய ஆறுகல் தொலைவு. பெரும்பாலும் இந்தியர்களால் நடத்தப்பெறும் அங்காடிக் கடைகள். சிறப்பாக குஜராத்தைச் சேர்ந்த வணிகப் பெருமக்களால் மிகப் பெருமையுடன் இக் கடைகள் இயங்கி வருகின்றன. ஒரு நாள் முற்பகல் 10.30 மணிக்குப் புறப்பட்டுச் சென்று பகல் 1.15 மணிக்குத் திரும்பினோம். கார் நிறுத்துமிடத்தில் கட்டணம் செலுத்தும் அமைப்பு சாலையோரத்தில் அமைக்கப்பெற்றுள்ளது. ஒரு மணி நேரத்திற்கு அரை டாலர் வீதம் போடவேண்டும். ஒரே சமயத்தில் மூன்று மணி நேரத்திற்குப் போடமுடியாது. ஒரு மணி நேரத்துக்கு ஒருமுறை வந்து போடவேண்டும்.

நம்மூர்களில் குஜராத் மக்களில் ஆண்களே கடைகளை நடத்துபவர்களாகக் காண்கிறோம். பெண்கள் வீட்டைவிட்டு வெளிவருவதில்லை. முக்காடிட்டுக் கொண்டு இல்லத்திலேயே தங்கியிருப்பதைக் கண்டுள்ளோம். பாரதியார் கூட இதனைத் தம் கண்ணன் பாட்டில் குறிப்பிட்டுள்ளார்.

பெரும்பாலும் தங்க நகைக் கடைகளே அதிகம். இங்குதான் 22, 24 காரட்டுத் தங்க நகைகள் கிடைக்கும்[3]. தங்க நகைக் கடைக்குள் தனியாக

---

31. U.N. Building 32. Citi Bank

1. Jackson Heights - நியுயார்க் குயின்ஸ் பகுதியில் தான் இது உள்ளது.

3. பிற இடங்களில் 10, 12, 16 காரட்டுகளில்தான் கிடைக்கும்.

வைர நகைப்பகுதி உள்ளது. இங்கு பல்வேறு வகை வைர மோதிரங்கள், வைர மூக்குத்திகள், வைரமணி மாலைகள், வைர இடையணிகள் முதலியவை வகைப்படுத்தி வைத்திருப்பதைக் கண்டு மகிழலாம்; வியப்பெய்தலாம். நமக்குத் தேவையானவற்றைப் பொறுக்கியெடுத்தால் விலை சொல்லுவார்கள். விரலுக்குப் பெரிதாக இருந்தாலும் அல்லது சற்றுச் சிறிதாக இருந்தாலும் மாற்றிச் சரிப்படுத்தித் தருவார்கள். இதற்கு மூன்று அல்லது நான்கு நாள் தவணை சொல்லுவார்கள். அந்த நாளில் சென்று நாம் அதனைப் பெற்றுக் கொள்ளவேண்டும். நாங்கள் வேண்டா என்று மறுத்தாலும் என் மகன் எனக்கு ஒன்றும் என் துணைவிக்கு ஒன்றுமாக இரண்டு வைர மோதிரங்களை வாங்கினான். பல்லாயிரக் கணக்கான மைல் தொலைவில் தாய் தந்தையர்களைப் பிரிந்து வாழும் செல்வ மகனின் தாய்-தந்தைப் பாசத்தை என்னவென்று சொல்வது ? அன்பைப் புலப்படுத்துவதற்கு ஒருவர் விதவிதமான உண்ணும் உணவு வகைகளை அல்லது தின்னும் தின்பண்ட வகைகளைத் தந்து உண்ணச் செய்யலாம்; அல்லது தின்னச் செய்யலாம். கண்ணப்ப நாயனார் காளத்தி மலையிலுள்ள குடுமித் தேவருக்கு மான் கறியை நல்கியதையும், கங்கை வேடன் குகப் பெருமான் அயோத்தி அண்ணல் இராமபிரானுக்கு தேனும் மீனும் அன்புடன் படைத்தமையையும் இலக்கியங்களில் படித்ததையும் நினைவு கூர்கின்றேன். இவை தவிர அன்பைப் புலப்படுத்துவதற்கு மற்றொரு வழி விதவிதமான ஆடையணிகளைத் தந்து மகிழ்வதாகும். என் மகன் தன் தாய்க்கு விலையுயர்ந்த காஞ்சிப்பட்டுச் சேலை ஒன்று வாங்கித் தந்து மகிழ்ந்தான். நம்மூராகிய காஞ்சியில் கிடைக்கும் அதே சேலைக்கு இரண்டு மடங்குக்கு மேல் விலை தந்து வாங்க வேண்டும். மகன் காட்டும் அன்புக்கு முன் விலை உயர்வு ஒரு பொருட்டாகத் தோன்றுவதில்லை.

பல்வேறு தங்க நகைக் கடைகளில் புகுந்து பல்வேறு நகை வகைகளைக் கண்டு மகிழ்ந்தோம். சேலைக் கடைகளில் புகுந்து அவை வைக்கப் பெற்றுள்ள முறை வகைகளைப் பார்த்து மகிழ்ந்தோம். 25 டாலர், 30 டாலர், 35 டாலர் விலைகளுள்ளவற்றை வகைப்படுத்தி வைத்திருக்குமுறை நமக்கு வியப்பூட்டுவதாக இருந்தது. அதிக விலையுள்ள சேலைகளைப் பார்க்க வேண்டுமென்று தெரிவித்தால், அவற்றை எடுத்துக் காட்டி விலை சொல்லுவார்கள். காஞ்சிப்பட்டு, மைசூர்ப்பட்டு, பெங்களூர்ப் பட்டு இவை விதவிதமான சரிகை முந்தி, சரிகையில்லா முந்தி இவற்றுடன் பல்வேறு வகைகள் கிடைக்கும். நம்மூரில் கிடைப்பவைதாம். விலைதான் இரண்டு பங்குக்கு மேல் இருக்கும். ‘அமெரிக்காவில் வாங்கினோம்’ என்ற பெருமை வேண்டுமானால் வாங்கிக் கொள்ளலாம்.

காய்கறி வகைகள், கிழங்கு வகைகள், பழ வகைகள், கீரை வகைகள் இவை தனித்தனியாகப் பிரித்து அடுக்கி வைத்திருப்பதே ஒரு தனி அழகு. கீரை வகைகள் வாடாமல் இருப்பதற்கு சில இடைவேளைக்கொருமுறை நீர் சொட்டிக் கொண்டிருக்க அமைத்திருக்கும் முறை அற்புதமாக அமைந்திருக்கும். நமக்கு வேண்டியவற்றைப் பொறுக்கி எடுப்பதற்காகவே வைக்கப் பெற்றிருக்கும். பிளாஸ்டிக் கூடை, அல்லது தள்ளுவண்டியில் எடுத்துவந்து பணம் செலுத்த வேண்டிய இடத்திற்கு வந்தால், அவை தனித்தனியாக எடை போடப் பெற்று, விலை குறிக்கப்பெற்று பில் போட்டுத் தந்து அதிலுள்ள தொகையைப் பெற்றுக் கொள்வார்கள். யாரும் பணத்தைப் பார்ப்பதில்லை. கிரெடிட் கார்டு (Credit Card) மூலமே அனைத்தும் நடைபெறும்.

ரெடிமேட் ஆடைகளுக்குத் தனிக்கடை: பனியன், சட்டை, அண்டர்வேர், கோட் முதலிய அனைத்தும் தனித்தனியாக வகைப்படுத்தி வைக்கப் பெற்றிருக்கும். தேவையானவற்றைப் பொறுக்கி எடுத்து பில் போடப் பெற்று தொகையைச் செலுத்திப் பொருள்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

பல உண்ணும் கடைகள் உள்ளன. அங்கு சென்று தேவையானவற்றை உண்ணலாம்; சிலவற்றைப் பார்சல்களாகக் கட்டிப் பெறலாம். நம் நாட்டு உணவு வகைகள் தின்பண்ட வகைகள் வேண்டுமானால் இப்பகுதியிலுள்ள கடைகளுக்குத் தான் வரவேண்டும். சில உண்ணும் கடைகளில் முடிவெட்டும் அமைப்பும் உள்ளது. இப்பகுதியில் மட்டும் மூடிவெட்ட எட்டு டாலர் என்று விளம்பரம் செய்துள்ளனர். பிற இடங்களில் பத்து டாலர் வாங்குகின்றனர்.

**2. ஸ்டேபில்ஸ்[4] (ஏப்ரல்-20):** காலை சிற்றுண்டிக்கு பிறகு முற்பகல் 10 மணிக்குப் புறப்பட்டுச் சென்று பகல் 12.15க்கு திரும்பிவிட்டோம். இந்த இடம் **நார்த்தெர்ன் புல்வோர்டு**[2] என்ற இடத்தில் உள்ளது. என் மகன் இல்லத்திலிருந்து சுமார் 3-4 கல் தொலைவு.

ஓரிடத்தில் அலுவலகத்திற்கு வேண்டிய பல்வேறு வகை மேசைகள், நாற்காலிகள் ஒருவித ஒழுங்கில் வைக்கப் பெற்றிருந்தன. இவை தனிமையாக ஒரு மூடு அறையில் வைக்கப் பெற்றிருந்தன. அவற்றை வாங்க விரும்புவோருக்கு அந்த அறை திறந்து காட்டப்பெறும் முறையில் அமைந்திருந்தன.

அடியிற் குறிப்பிட்டுள்ள பொருள்களனைத்தும் ஒரு பெரிய அறையில் அற்புதமான ஒழுங்கு வரிசையில் அமைக்கப்பெற்றிருந்தன. தேவையறிந்து

---

4. staples - அலுவலகத்திற்குரிய சாமான்கள் அனைத்தும் கிடைக்கும் இடம்
2. Northern Boulevard - a prominent street or Dromenade

வாங்குவோருக்கு அவை எளிய முறையில் கைக்குக் கிட்டுவனவாக இருந்தன.

கணினிகளும் அவற்றிற்குத் தேவையான பகுதிப் பொருள்களும்[3]

தட்டச்சு செய்யப் பெற்றவற்றை நகல் எடுக்கும் கருவிகள்[4]

தந்திபோல் செய்திகளை அனுப்பும் தொலைக்கல அமைப்புகள்[5]

கணக்கிடும் கருவிகள்[6]

கையடக்கமான கணினிகள்[7]

கையில் வைத்தெழுதும் பலகைகள்[8]

கையில் வைத்துக் கொண்டு ஓவியம் வரையும் பலகைகள்[9]

அடிக்கோல் வகைகள்[10]

இசைகள், காட்சிகள் முதலியவை பதிவாகியுள்ள தட்டுகள்[11]

தொகுப்பொட்டிகள்[12]

மூக்குக் கண்ணாடி வகைகள்[13]

நிலை விளக்குகள்[14]

மேசை விளக்குகள்[15]

மின்விசை விளக்குகள்[16]

தொலைபேசிக் கருவி அமைப்புகள்[17]

பூட்டு வகைகள்[18]

கத்திரிக்கோல் வகைகள்[19]

எழுத உதவும் தாள்கள்[20]

மை வகைகள்[21]

பேனா வகைகள்[22]

எழுதுகோல் வகைகள்[23]

---

3. Computer and its parts 4. Printers 5. Fax Machines
6. Calculators 7. Organisers 8. Writing Boards
9. Drawing Boards 10. Different type of Scales
11. CD Players 12. Albums 13. Spects
14. Lights in standing positions 15. Table lamps
16. Torch lights 17. Phone Instruments
18. Different types of locks
19. Different types of scissors
20. Writing papers 21. Different types of inks
22. Different types of pens
23. Different types of pencils

வண்ண எழுதுகோல் வகைகள்[24]

வண்ணச் சுண்ணக்கட்டி போல் வரைய உதவும் வண்ண எழுது கோல்கள்[25]

அழிப்பான்கள்[26]

மை எழுத்து மறைப்பான்கள்[27]

செருகி பிடிப்பு ஊசிகள்[28]

குண்டூசிகள்[29]

இரப்பர் பேண்ட்ஸ்[30]

ஓட்டை போடும் இயந்திர அமைப்புகள்[31]

தாள் இணைப்பான்கள்[32]

தாள் உறை வகைகள்[33]

கோப்பு வகைகள்[34]

அன்றாட நாட் குறிப்புகள்[35]

நோட்டுப் புத்தகங்கள்[36]

அலுவலகப் பைகள்[37]

ஒட்டும் பசை[38]

ஒட்டும் நாடா[39]

ஒளிப்பட சட்ட அமைப்புகள்[40]

என்று பல்வேறு வகைப் பொருள்கள் இந்த இடத்தில் வாங்க வசதி.

**3. வால் மார்ட்**[1]: (ஏப்ரல் 22 அன்று இதனைக் காணச் சென்றோம்.) இது ஒரு பல்பொருள் அங்காடி[2]. இஃது இருபது மைல் தொலைவிலுள்ள **நீண்ட தீவு**[3] என்ற இடத்தில் உள்ளது. இது போன்ற அங்காடிக் கிளைகள் அமெரிக்காவில் 1500 கிளைகள் உள்ளன. மாலை 4.30 மணிக்குப் புறப்பட்டுச் சென்று இரவு 8.00 மணிக்குத் திரும்பினோம். வால்மார்ட் அருகில் மருந்துக்கடை[4], மின்சாரப் பொருட்கள் கடை[5], ஆடைகள் தூய்மை செய்யும் கடை[6] என்ற மூன்று கடைகள் இருந்தன. இம்மூன்றில் நாங்கள் நுழைந்து பார்க்கவில்லை.

---

24. Different types of colour pencils
25. Markers
26. Rubber-Eraser
27. White art
28. Gem clips
29. Head pins
30. Rubber bands
31. Punching machines
32. Staplers
33. Envelopes
34. Files
35. Diaries
36. Note Books
37. Office bags
38. Glue
39. Cellotape
40. Photo frames

1. WAL MART
2. Departmental Store
3. Long Island
4. Pharmacy
5. Electricals
6. Laundry

வால்மார்ட்டில் மட்டும் நுழைந்து பார்த்தோம். சாமான்கள் அடுக்கி வைக்கப் பெற்றிருக்கும் முறைகளே எங்கள் கருத்தையும் கண்ணையும் கவர்ந்தன. அறை ஓரங்களில் திறந்த மர அடுக்குகளில்[7] உள்ள சாமான்களின் விலை தனித்தனியாகக் குறிக்கப்பெற்றிருந்தது. இவ்விடங்களில், தயாரிக்கப் பெற்ற ஆடை வகைகள்[8]; தங்க நகைகள்; தங்க முலாம் பூசப் பெற்ற நகை வகைகள்[9]; குழந்தைகள் முதல் வளர்ந்தோர் வரை உள்ளவர்கட்கு காலணி வகைகள்; காலடி துணி உறைகள்[10]; மிதியடி வகைகள்; பொம்மை வகைகள்; தாள் வகைகள்; கோப்பு வகைகள்[11]; புத்தகங்கள்; அகராதி வகைகள்; விளையாட்டுச் சாமான் வகைகள்[12]; துணி வகைகளில் படுக்கைவிரிப்புகள்; ஏனைய துணிவகைகள்; தோட்டத்திற்குத் தேவையான பொருள்கள்; விதை வகைகள்; செடிவகைகள்; பேனா வகைகள்; எழுதுகோல் வகைகள்; மேசை, நாற்காலி வகைகள்; ஊஞ்சல் வகைகள்; பலவண்ணம் பிளாஸ்டிக் பூ போன்ற அலங்கார வகைகள்; ஊசி, நூல் வகைகள்; பல்வேறு பாசி வகைகள்; வானொலி, தொலைபேசி கருவிகள்; ஒளிப்படக் கருவிகள்; படத் தொகுப்புப் பொட்டி வகைகள்[13]; அடுப்பறைக்குத் தேவையான பொருள் வகைகள்; பல்வேறு பிசுகோத்து வகைகள்; மிளகு மிட்டாய் வகைகள்; சாக்லட்டு வகைகள்; பல்வேறு பழச்சாறு வகைகள்; பால், சர்க்கரை; கால்நடை தீவனங்கள், அவை வளர்ப்புக்குத் தேவையான சாமான்கள்; காலி மீன் தொட்டிகள்; பல்வேறு வண்ண மீன்கள் கொண்ட தொட்டிகள்.

அறை நடுவில் பல்வகைச் சாமான் குவியல்கள். இவற்றில் எதையெடுத்தாலும் ஒரே விலை. நாங்கள் இவற்றையெல்லாம் பார்த்து மகிழ்ந்து ஒளிப்படத் தொகுப்பொட்டி, பிசுகோத்து வகைகளில் சில ஆகியவற்றை வாங்கிக்கொண்டு திரும்பினோம். போகும்போது தடவகைகளைக் குறித்துக்கொண்டு சென்றதால் எளிதாக அங்காடி இருக்கும் இடத்தை அடைய முடிந்தது. திரும்பும்போது இரண்டு இடங்களில் வழிமாறியது. காருக்கு பெட்ரோல் போடும் இடங்களின் உரிமையாளரை வினவி சரியான தடங்களில் திரும்பினோம்.

**4. உலக வாணிக மையம்[1]:** (ஏப்ரல் 10, புதன் பிற்பகல் சுமார் 4.30 மணிக்கு) ஏழெட்டுக் கல் தொலைவிலுள்ள இந்த மையத்தைப் பார்க்கச் சென்றோம். நான் என் மனைவி, என் மகன், மருமகள் காரில் சென்றோம். காரை ஓரிடத்தில் நிறுத்திவிட்டு கடையைப் பார்க்க ஆயத்தமாகின்றோம். வெட்டவெளியில் கார்கள் நிறுத்தும் இடங்கள், மூடிய பகுதிக்குள் நிறுத்தும்

---

7. Rack
8. Readymades
9. Imitation gold
10. Socks
11. Files
12. Sports goods.
13. Albums
1. Mall – என்ற பெயரில் வழங்கும் வணிக மையம்.

இடங்கள் என்ற இரு பகுதிகள் இருந்தன. மூடிய பகுதிகளில் இரண்டு மூன்று அடுக்குகள். இரண்டு கார்கள் செல்லும் அகலத்தில் இவ்வடுக்குகள். கார்கள் ஏறிச் செல்லும் முறையில் இந்த அடுக்குகள் அமைந்திருந்தன. இரண்டிடங்களிலும் 10 ஆயிரம் கார்கள் நிறுத்தலாம். (படம் - 19)

இப்பகுதியில் நம்மூர் சரவணா ஸ்டோர் மாதிரி (அதைவிட மிகப் பெரியவை) 4 பெரிய கடைகளும், ஐம்பது, அறுபது சிறிய கடைகளும் அமைந்திருக்கின்றன. **மாஸி**[2] என்ற பெயர் கொண்ட கடையில் நுழைகின்றோம்.

ஆடை வகைகள் உள்ள இடத்துக்குப் போகின்றோம். கால் சட்டைகள், மேல் சட்டைகள், பனியன்கள், கோட் வகைகள், கழுத்துப் பட்டைகள் (டைஸ்), ஜீன்ஸ் வகைகள், ஒருபுறம்; இங்ஙனமே மகளிருக்குரிய பல்வேறு ஆடை வகைகள் என்று ஏராளமாக அடுக்கி வைக்கப் பெற்றிருந்தன. ஒவ்வொரு வகை ஆடைகளிலும் விலை விவரம் குறிக்கப்பெற்றுள்ளன.

பல்வேறு வகை காலணிகள் - பெரியவை, பெரியவர்களுக்கு உரியவை, சிறியவர்கள், குழந்தைகளுக்கு உரியவை தனித்தனியாக வைக்கப் பெற்றுள்ளன.

பல்வேறு வகைப் பவுடர்கள், திரவவகை வாசனைத் திரவியங்கள் ஒருபுறம் ஏராளமாக வரிசையாக குவிக்கப் பெற்றுள்ளன.

கடிகார வகைகள்-சுவர்கடிகாரம், மேசை மேல் வைக்கும் கடிகாரம், கைக்கடிகாரம், சட்டைகளில் மாட்டிக் கொள்ளும் கடிகாரம் - ஆகிய பல்வேறு வகைக் கடிகாரங்கள் மற்றொருபுறம் வரிசையாகக் குவிக்கப் பெற்றுள்ளன.

விளையாட்டுக் கருவிகளில், கூடைபந்து, கைப்பந்து[3], டென்னிஸ்[4], கால்ஃப்[5], மீன்பிடிக்கும் தூண்டில்கள் போன்றவை வகை வகையாக வைக்கப் பெற்றுள்ளன.

குழந்தைகளுக்கான பல்வேறு வகைப் பிளாஸ்டிக் பொம்மைகள்; மின்கலங்களால் இயக்கி ஓடும் விளையாட்டுக் கருவிகள், ரோலர் ஸ்கேட்டஸ்[7] வகைகள், மெல்லிய பஞ்சு அடைக்கப் பெற்ற பொம்மைகள் பலவகைகள் இருந்தன.

ஒளிப்படங்கள் அமைக்கும் பல்வேறு சட்ட வகைகள்[8], பெரியனவும் சிறியனவுமான தொகுப்பொட்டிகள்[9] (அனைத்தும் அதிக விலையுள்ளவை) ஏராளமாக இருந்தன.

---

2. Macy
3. Base Ball
4. Tennis
5. Golf
6. Batteries
7. Roller Skatting
8. Fraies
9. Albums

தின்னும் வகைகளில் மிளகுமிட்டாய் வகைகள்[10], சாக்லெட்டு வகைகள், விரைவாகத் தயாரிக்கும் உணவு வகைகள்[11], காஃபி பொடி வகைகள், பருகுவதற்குத் தயார் நிலையில் காஃபி, ஐஸ்கிரீம்[12], பிஸ்கோத்து[13] வகைகள் முதலியவை ஏராளம்.

பல இடங்களில் எதை எடுத்தாலும் 99 செண்ட்[14] என்று பல்வேறு வகைப் பொருள்கள் பல இடங்களில் குவியல் குவியலாக வைக்கப் பெற்றிருந்தன. இவற்றுள் கைக்குட்டைகள், காலுறைகள்[15], சாக்லெட்டுகள், மிளகு மிட்டாய்கள், சோப்பு வகைகள், பல்பசைகள், எழுதுகோல் வகைகள், பேனா வகைகள் முதலியவை இவற்றுள் அடங்கும். (நம்மூரில் எவை எடுத்தாலும் ஒரு ரூபாய் விற்பது போல்)

இந்த வணிக மையம் சுமார் 25 ஏக்கர் பரப்புள்ள இடங்களில் அமைக்கப் பெற்றுள்ளது.

## 5. முக்கிய மூன்று இடங்கள்

என் தற்காலிக மூன்று திங்கள் அமெரிக்க வாழ்க்கை **மூன்று** முக்கிய இடங்களைப் பார்க்க வாய்ப்புகள் அளித்தன. அவற்றுள் **இரண்டு** அழியா வாழ்வு பெற்று மகிழ்ச்சிப் பெருக்கை நல்குவன. **மூன்றாவது** பேரழிவு பட்டு இடிபாடுகளுடன் தோன்றி நம்மைக் கண் கலங்க வைத்து துக்கக் கடலில் ஆழ்த்துவது.

**1. எம்பயர் ஸ்டேட் கட்டடம்[1]:** ஏப்ரல் 22 அன்று சிற்றுண்டிக்குப் பின் முற்பகல் 10 மணிக்கு மின்சார இருப்பூர்தியில் புறப்பட்டுச் சென்று பிற்பகல் 2.45 மணிக்குத் திரும்பினோம். நாடோறும் முற்பகல் 9.30 மணிக்குத் திறக்கப்பெற்று, இறுதி நுழைவுச் சீட்டு இரவு 11.25 மணிக்கு விற்கப்பெறும். நள்ளிரவில் மூடப்பெறும்.

நியுயார்க்கில் இப்போதைய பெரிய கட்டடம் இது தான்; மான்காட்டன் என்ற இடத்தில் இருப்பது. பல்வேறு இடங்களிலிருந்து வருவதற்கேற்ப பொழுது போக்கு வசதிகள் வாய்க்குமாறு அமைந்திருப்பது. 102 மாடிகளைக் கொண்டது; உயரம் கால் மைல். 86-வது மாடியிலுள்ள திறந்தவெளி உயர பார்வை அமைப்பு[2] மிகுபுகழ் வாய்ந்தது[3]. நகரத்தின் மிக நெருக்கடியான கட்டடங்களிடையே அமைந்திருக்கும் இந்த அமைப்பு இரவு-பகல் ஓய்வின்றி

---

10. Peppermints  11. Fast Foods  12. Ice-Cream
13. Biscuits  14. Cent  15 Socks

1. Empire State Building - கட்டட அறைகள் யாவும் பல்வேறு அலுவலகங்களாகச் செயற்படுவன.
2. Observatory
3. 86–மாடிக்கு மேல் உள்ள 16 மாடிகளில் பார்வையாளர்களை அனுமதிப்பதில்லை.

பார்வையாளர்களை ஈர்த்து வியத்தகு குலை நடுக்கமுள்ள காட்சிகளால் மயக்கமுறச் செய்வது. அண்மை மாநிலங்களிலுள்ளோரையும், அட்லாண்டிக் மாக்கடலுக்கப்பாற்பட்ட இடங்களிலுள்ளாரையும் உணர்வு பொங்கும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்த வல்லது. 86-வது மாடியிலுள்ள திறந்தவெளி உயரப் பார்வை அமைப்பு சாவகாசமாக நடந்து பார்க்கும் இந்த இடம் கண்ணாடியால் சுற்றிலும் மூடப் பெற்றுள்ளது. நியுயார்க்குக்கு வருவோர் தவறாமல் கட்டாயம் பார்க்க வேண்டிய இடம் இது. (படம் - 20)

ஒன்றிரண்டு மாடிக்கு **மின்னேற்ற அமைப்பில்**[4] சென்று கியுவரிசையில் நின்று நுழைவுச்சீட்டு பெறவேண்டும். பெரியவர்கட்கு 9 டாலர்; **முதுபெரும் மக்களுக்கு**[5] 7டாலர்; சிறுவர்கட்கு 4 டாலர். நுழைவுச் சீட்டுகள் வாங்கியவுடன் 80 மாடிகளை நேராக சென்று இடம் மாறி மீண்டும் 6 மாடி கடந்து திறந்த வெளி உயர் பார்வை அமைப்பிற்குச் செல்ல வேண்டும். இங்கிருந்து மெதுவாக நகர்ந்த வண்ணம் நான்கு திசைகளிலும் நம்பார்வையைச் செலுத்துகின்றோம்.

**மேற்குத்திசை:** இத்திசையில் நம் கண்வட்டத்தைச் செலுத்தும் போது மாடிசன் விளையாட்டு வளாகம்[6], ஹட்சன் ஆற்றில் அமைந்துள்ள இரண்டாம் உலகப் பெரும் போரில் பங்கு கொண்ட இன்ட்ரெட்[7] என்ற போர்க்கப்பல் ஆகியவற்றைக் காண்கின்றோம். நியுயார்க், நியுஜெர்சி துறைமுகம், மான்காட்டனையும், நியுஜெர்சியையும் விரைவில் இணைக்க வல்ல படகு வசதிகள்[8], சுற்றுலாவிற்குரிய வாகன வசதிகள், நியுயார்க்கையும் நியுஜெர்சியையும் இணைக்கும் **ஜார்ஜ் வாஷிங்டன் பாலம்**[9] ஆகியவற்றையும் பார்க்கின்றோம். (படம் - 21)

**தெற்குத்திசை:** இத்திசையில் நம் பார்வை செல்லும் போது மிக உயர்ந்த வால் தெருவின் கட்டடங்களுக்கிடையே[10] வரலாற்றுப் புகழ் பெற்ற கட்டடங்கள் யாவும் சிறுத்துக் காணப்பெறுகின்றன. தெருக்களில் குறுக்கும் நெடுக்குமாக ஓடும் கார்கள் யாவும் சிறுவர்கள் விளையாடும் பொம்மைக் கார்கள் போல் தென்படுகின்றன. நம் பார்வை தொலை தூரப் பார்வையாக மாறும்போது இடிபாடுகளுடன் சிதைந்து கிடக்கும் இரட்டை உலக வாணிக மைய கோபுரங்கள் நம் கண்ணில் படுகின்றன. அடுத்து சற்று நடுவில்

---

4. Electric lift
5. Senior Citizen
6. Madison Square Garden Sports entertainment complex. இங்கு கூடைப்பந்து பந்தயக்காட்சி அரங்கம் உள்ளது. இங்கு உலகக் குத்துச் சண்டைப் போட்டிகள் நடைபெறும். இவை போன்றவற்றைப் பார்க்கும் அமைப்பில் தொகை செலுத்தினால் அந்த அமைப்பு நம்மை இட்டுச் சென்று காட்டும்.
7. Intrepid
8. Ferry Services
9. George Washington Bridge
10. Wall Street Structures

பிளாட்டிரான் கட்டடமும்[11], இதற்கு அடுத்து தெற்குப் புறமாக ஒரு காலத்தில் 60 மாடிகளைக் கொண்ட எடுப்பான மிக உயர்ந்த கட்டடம் என்று வழங்கிய வுட்வொர்த் கட்டடமும்[12] நம் பார்வைக்கு எட்டுகின்றன. வடபுறமாகவுள்ள நியுயார்க் வளைகுடா[13]வில் உள்ள சுதந்திர தேவியின் சிலை[14], அதன் அருகில் உள்ள எல்லிஸ்தீவு[15], ஆகியவையும் கீழ் இடபுறமாக புரூக்லினையும் ஸ்டாட்டன் தீவையும் இணைக்கும் கம்பீரமான வளைவில் அமைந்த **வெரஸானா நேரோஸ் பாலமும்**[16] இதன் பின்னணியில் சிறியவையாகத் தென்படும். புரூக்லின் பாலம், மான்காட்டன் பாலம், வில்லியம் பாக் பாலம் ஆகியவையும் கண் வட்டத்தில் அமைகின்றன.

**வடக்குத்திசை:** வடக்குத்திசையில் நம்பார்வை செல்லும்போது ஆடும் ஒளியுடன் காணப்பெறும் கிரைஸ்லர் கட்டடமும்[17] அதனையொட்டிக் கண்ணைக் கவரும் மெட்லைஃப் கட்டடமும்[18] பார்வையில்படுகின்றன. ஐந்தாவது அவின்யூ சாலையில் நம்பார்வை செல்லும்போது இராக்ஃபெல்லர் மையம்[19] ஜி.இ. கட்டடம்[20], அதன் வலப்புறம் உலகப்புகழ், வாய்ந்த புனித பாட்ரிக் தேவாலயம், மத்திய பூங்கா[21] ஆகியவை புலனாகின்றன. இடப்புறமாக நியுயார்க்கையும் நியுஜெர்சியையும் இணைக்கும் கம்பீரமான வாஷிங்டன் பாலத்தின் கீழே ஹட்சன் ஆறு ஒடுவது தெரிகின்றது.

**கிழக்குத்திசை:** நேர்கிழக்குத் திசையில் இருப்பது குயின்ஸ் பரோ என்பது. இதன் வடகிழக்கில் உள்ள ஐ.நா.வின் தலைமைச் செயலகக் கட்டடம் நம் கண்ணில்படுகின்றது. இதன் பொதுச் செயலகப் பகுதியின் கண்ணாடி உருக்கு இரும்பாலான அமைப்பு நம் கவனத்தை ஈர்ப்பதாக உள்ளது. லாங் தீவை நோக்கி வளைந்து செல்லும் ஆற்றில் அமைந்துள்ள டிரைபரோ[22], வொயிட்ஸ்டோன்[23], திராக் நெக் பாலங்கள்[24] லாக் கார்டியா விமான நிலையம்[25] அனைத்து உலக நாடுகளின் கென்னடி விமான நிலையம்[26], நூற்றுக் கணக்கான கல் நீண்டு கிடக்கும் லாங்க் தீவின் மணல் தரையாலான கடற்கரை[27] ஆகியவை தென்படுகின்றன. தென்கிழக்குத் திசையில் வில்லியம்பர்க் பாலம்[28] புரூக்லினைத் தொடுவதாக அமைந்துள்ளது. (படம் - 22)

---

11. Flatiron Building  12. Woodworth Building  13. New York Bay
14. Statue of Liberty  15. Ellis Island
16. Verasana - Narrows Bridge
17. Chrisler Building - கார் உற்பத்தி செய்யும் மிகப் பெரிய ஒரு நிறுவனம்.
18. Metlife Building  19. Rockfiller Centre cornpark
20. G.E. Building  21. Central Park  22. Triboro
23 Whitestone  24. Throgs Neck  25. Lock Guardia Airport
26. JFK International Airport
27. Long Islands sandy beach  28. Williamburg Bridge

இவற்றையெல்லாம் பார்த்த பிறகு மின்விசை இறக்கம் மூலம் கீழிறங்கித் திரும்பும் போது மேஸி[29] என்ற பல்பொருள் அங்காடியைக் காண்கின்றோம். இதன் விவரம் பற்றி வினவியதில் என்மகன் டாக்டர் எஸ். இராமகிருஷ்ணனை துணிவகைகள், மிதியடி வகைகள், காலணி வகைகள், கடிகார வகைகள், தங்க நகை வகைகள் (18 காரட் வரை), அழகுப் பொருள் வகைகள்[30], படுக்கை வகைகள், மேசை நாற்காலி வகைகள், வீட்டுத் தேவைப் பொருள்கள் வகைகள்[31], வாசனைத் திரவியங்கள்[32] முதலியவை இங்குப் பெறலாம் எனத் தெரிவித்தான்.

**இந்தக் கட்டடம் பற்றிய குறிப்புக்கள்:** இக் குறிப்புகள் கவர்ச்சிகரமாகவும் நம் விடுப்பூக்கத்தை[33]த் தூண்டத் தக்கவையாயும் உள்ளன. வார விடுமுறை நாட்கள், சிறப்பு விடுமுறைகள் இவை அடங்க செயற்பட்டுக் கட்டடம் கட்டியதில் ஒரு வாரத்திற்கு 4½ அடுக்குகள் வீதம் நிறைவு பெற்றன. ஒவ்வொரு நாளும் 4000 மக்கள் வீதம் பங்குபெற்று 70 இலட்சம் மணி நேரம் பணியாற்றினர்.

**கட்டட அமைப்பில்:** 60,000 டன் உருக்கு இரும்பு, 100 இலட்சம் செங்கற்கள், 25 இலட்ச அடி நீளமுள்ள மின்கம்பி, 120 கல் நீள குழாய், 1000 கல் நீளமுள்ள தொலைபேசி கம்பிச் சுருள், 6500 சாளரங்கள், 1860 படிகள் (இவற்றின் எடை 365,000 டன்கள்), நிமிடத்துக்கு 1400 அடி (427 மீட்டர்) வேகம் இயங்கும் 73 மின் ஏற்ற இறக்க அமைப்புகள்...... 200,000 கனஅடி இந்தியானா சுண்ணாம்புக் கல், பல இலட்சக் கணக்கான துருப்பிடிக்காத உருக்கு இரும்பினால் வழுவழுப்பாக்கப்பெற்ற கருங்கல்[34].... கட்டடத்தின் உள்ளே உள்ள நடைபாதையைக் கலையுணர்வுடன் சீர்படுத்த 500+410 இலட்ச டாலர் செலவில் இத்தாலி, ஃபிரஞ்சுநாடு, ஜெர்மனி ஆகிய இடங்களிலிருந்து தருவிக்கப்பெற்ற அரிய சலவைக்கல்[35]... கடந்த பத்தாண்டுகட்டு மேல் பழைய நிலையிலேயே இருக்குமாறு செய்ய பராமரிப்பு செலவு 670+200 இலட்ச டாலர்.... கட்டட இடத்தின் பரப்பு 2.66 ஏக்கர்.

இவற்றையெல்லாம் அறிந்துகொண்டு வீடு திரும்புகின்றோம். மத்திய பூங்காவைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் என்னுள்ளே எழுகிறது. அதற்குரிய வாய்ப்பை எதிர் நோக்கியுள்ளேன்.

---

29. Macy. பல இடங்களில் இந்த அமைப்பு உள்ளது. ஆனால், அவற்றிற்கெல்லாம் இதுதான் மிகப் பெரியது.
30. Cosmetics
31. Home appliances-T.V. sets, மின்சாரப் பொருள் வகைகள், சீதள அலமாரி முதலியவை.
32. Perfumes
33. Instinct of Curiosity
34. Granite
35. Rare Marble

**2. ரூஸ்வெல்ட் தீவு**[1]: ஏப்ரல் 15, திங்கள் அன்று இத்தீவிற்குச் சென்றோம். **பிராங்க்ளின் ரூஸ்வெல்ட்** என்பார் அமெரிக்காவுக்கு **நான்குமுறை (1933-1945) தலைவராக** இருந்தவர்; நான்காவது முறை பதவி காலம் முடிவதற்குள் பரமபதம் அடைந்தவர். இந்தத் தீவு ஒரு கல் தொலைவுக்கு மேல் நீளமானது. இருபுறமும் கீழாறு[2] என்ற ஆறால் சூழப்பெற்றது இத்தீவு. தமிழகத்தில் உள்ள திருவரங்கத் தீவுடன் இதனை ஒப்பிடலாம். குணசேகரத்தருகில் காவிரி சிலசமயம் தன்னிடம் வரும் அதிக நீரைப் பிரித்துக் கொள்வதற்கு-கொள்ளிடம்-என்ற பெயரில் வடபுறமாகப் பிரிந்து சென்று பலகல் தொலைவிற்கப்பால் கல்லணை என்ற இடத்தில் மீண்டும் காவிரியுடன் கலக்கின்றது. அங்ஙனமே தென்புறமாகப் பலகல் தொலைவிற்கப்பால் கல்லணை என்ற இடத்தில் கொள்ளிடத்துடன் கலக்கிறது காவிரி. இவ்விடத்தில் தான் தென்திருப்பேர்நகர் (கோவிலடி)[3] என்ற வைணவ திவ்வியதேசம் உள்ளது. இங்கிருந்து வடபுறம் நோக்கிக் கொள்ளிடத்தைக் கடந்தால் மறுபுறம் இலால்குடிக்குக் கீழக்கேயுள்ள '**அன்பில்**' என்ற மற்றொரு வைணவ திவ்விய தேசத்தைச் சேவிக்கலாம். (படம் - 23)

இந்தத் தீவின் ஒரு கோடியில் **கோலர் கோல்டு வாட்டர்**[4] என்ற பெயரில் 1000 படுக்கையுள்ள ஒரு முதியோர் மருத்துவமனையும்[5] மற்றொரு கோடியில் 1000 படுக்கையுடன் கூடிய **கோலர் மருத்துவமனை**[6] என்ற பெயரில் மற்றொரு முதியோர் மருத்துவமனையும் உள்ளன. வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் முதியோர் இந்த மருத்துவமனைகளில் இலவசமாக இடம் பெற்றுத் தாங்கள் இறக்கும் வரை சிகிச்சை பெறுகின்றனர். தாங்கள் பதவிகளில் இருந்தபொழுது ஏராளமான வருமான வரிகள் கட்டியவர்களல்லவா ? அதற்குப் பரிசுபோல் இந்த ஏற்பாடு அமைக்கப் பெற்றது போலும் ! இது தவிர தங்கள் வாழ்நாள் காலத்திலேயே தமது ஈமச் சடங்கிற்காகத் தமது சமயாசாரப்படி அதனை நடத்துவதற்கு 'ஈமச்சடங்ககம்'[7] என்ற பெயரிலுள்ள ஒரு நிறுவனத்தில் தத்தமது நிலைமைக் கேற்றவாறு ஒரு தொகைக்கு ஏற்பாடு செய்து ஆயுள் காப்பீடுபோல் செலுத்தி ஈமச் சடங்கு நடைபெறுவதற்கும் ஓர் ஏற்பாடும் இருந்து வருகின்றது. இவர்கள் மரித்தபிறகு அந்தச் சடங்கை நடத்துவதற்குரிய இயக்குநர்[8] பொறுப்பேற்று இதனைச் செய்து வைப்பார். இஃது ஓர் அற்புதமான ஏற்பாடு ஆகும்.

---

1. Roosevelt Island. Franklin D. Roosevelt (1933-45).
2. East River
3. இஃது 'அப்பக்குடத்தான் சந்நிதி' என்றும் வழங்கப் பெறுகின்றது.
4. Coler Goldwater   5. Gariotrics Hospital   6. Coler Hospital
7. Funeral Home   8. Director

இந்த ஏற்பாடு செட்டி நாட்டிலுள்ள இத்தகைய ஓர் ஏற்பாட்டை நினைவு கூரச் செய்கிறது. செட்டி நாட்டில் நகரத்தார் வாழும் பகுதியில் உள்ளவர்கள் தாம் இறக்கும் போது செய்ய வேண்டிய ஈமச் சடங்கிற்காக ஒரு தொகையை ஒதுக்கி வைப்பார்கள். அது வட்டியும் முதலுமாக வளர்ந்து வரும். உரியவர் இறந்த அன்று அத் தொகையை எடுதது திருமணவிருந்து போல் நடைபெறச் செய்வர். ஒருபக்கம் பிணம் கிடக்க மறுபக்கம் விருந்து நடைபெற்றுக் கொண்டிருக்கும். நம் போன்றோர் துக்கம் விசாரிக்கச் செல்லும்போது இதனைப் பார்க்கச் சகிக்காது. விருந்தில் பங்கு கொள்ளாது துக்கம் விசாரித்த நிலையில் நாம் திரும்பிவிடுகின்றோம். இஃதுடன் இது நிற்க.

ரூஸ்வெல்ட் தீவிலிருந்த வண்ணம் மான்காட்டன் தீவையும் குயின்ஸ் தீவையும் பாலம் ஒன்று இணைப்பதையும் கண்ணுறுகின்றோம். இருமுனைகளில் அமைந்த இருபெரும் முதியோர் மருத்துவ மனைகளுக்கிடையில் அமைந்துள்ள பல கட்டடங்கள் மக்கள் வாழும் இல்லங்கள் ஆகும். இந்த இருபெரும் முதியோர் மருத்துவமனையில் பணியாற்றும் மருத்துவர்களும் மான்காட்டனில் பணியாற்றுபவர்களும் இவ்வாழ்விடங்களில் வாழ்ந்து வருபவர்கள் ஆவர். (படம் - 24)

ரூஸ்வெல்ட் தீவின் ஒரு பக்க ஓரமாக நடந்து கொண்டும் சிலசமயம் ஆங்காங்கு அமைக்கப் பெற்றிருந்த இருக்கைகளில் சில மணித்துளிகள் அமர்ந்தும் குயின்ஸ் தீவில் தொலைவில் தென்படும் பெரிய கட்டடங்களின் காட்சிகளைக் கண்டனுபவித்தவாறும், காலங் கடத்தினோம். அடுத்து மான்காட்டன் தீவு பக்கமாக வந்து இதே நிலையில் நடந்து கொண்டும் அமர்ந்த நிலையிலும் பல கட்டடக் காட்சிகளைக் கண்டு அனுபவித்தோம்.

ஒரு நிலையில் மான்காட்டன் பக்கம் பல்லடுக்கு மாளிகைகள் அடங்கிய ஐக்கிய நாட்டு அமைப்பு நிறுவனம்[9] என் கண்ணில் தென்பட்டது. அருகிலிருந்த என் மகன் டாக்டர் இராம கிருஷ்ணன் அக்கட்டடம் பற்றி விரிவாக விளக்கினான்[10]. (படம் - 25)

உடனே என் மனம் ஐம்பது ஆண்டுகளின் கால நிலைக்குத் தள்ளப்பெற்றது. இந்த நிறுவனத்தின் ஆதரவில் எழுந்த **உலக உடல் நல நிறுவனம்**[11], **ஐக்கிய நாடுகளின் கல்வி அறிவியல் நிறுவனம்**[12] போன்றவற்றில் பங்குபெற்றவைகள் எல்லாம் படலம் படலமாக என் நினைவில் எழுகின்றன. பின்னவற்றின் ஆதரவின்கீழ் தொடங்கப்பெற்ற நான்

9. U.N.O - United Nations Organization.
10. பிறிதோரிடத்தில் இதன் விவரம் தரப்பெற்றுள்ளது.
11. World Health Organization.
12. United National Education and Science Organization.

பணியாற்றும் **தெற்கு - தென் கிழக்கு ஆசிய நாடுகளின் மரபுவழிப் பண்பாட்டு நிறுவனத்தின்**[13] முன்னைய நிலைகளையும் 1996-பிப்ரவரிக்கு மேல் நான் மேற்கொண்ட புதிய ஏற்பாடுகளையும் வரிசை வரிசையாக நினைவு கூர்கின்றேன். (படம் - 26)

மரபுவழிப் பண்பாட்டு நிறுவனம் **சர். ஏ.எல். முதலியார் அவர்கள்** இந்திய வரலாற்றுத்துறை **பேராசிரியர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார்** அவர்களை இணைத்துக் கொண்டு தொடங்கிய காலத்தில் எந்தவித சிறப்புச் சொற்பொழிவுகளோ கருத்தரங்குகளோ நடைபெற்றனவாகத் தெரியவில்லை. ஆனால், இந்த நிறுவனத்தின் ஆதரவில் அனைத்திந்திய கீழ்த்திசை மாநாடுகள் பலவிடங்களில் நடைபெறும்போது பேராசிரியர் சாஸ்திரியார் சென்று கலந்து கொண்டதாகத் தெரிகின்றது. நான் வழக்கமாக இந்த மாநாடுகளில் என் ஆய்வு மாணவன் டாக்டர் என். கடிகாசலத்துடன் ஆய்வுக் கட்டுரைகளுடன் கலந்து கொள்ளச் சென்றிருந்தபோது, ஒருமுறை குருட் சேத்திரா பல்கலைக் கழகத்திலும் பிறிதொருமுறை மற்றோர் இடத்திலும் சந்தித்ததை நினைவுகூர முடிகின்றது. குருட்சேத்திராவில் சந்தித்த பொழுது தலையெல்லாம் பொடுவு; அது உடலெல்லார் உதிர்ந்த நிலையில் காணப் பெற்றார் சாஸ்திரியார்; மிகவும் பரிதாபகரமான நிலை. அவர் மரித்தபோது அச்செய்தி என் கவனத்திற்கு வரவில்லை.

பேராசிரியர் சாஸ்திரியாரை அடுத்து மரபுவழிப் பண்பாட்டு நிறுவனத்தின் இயக்குநராகப் பணியாற்றியவர் **டாக்டர் கே.கே. பிள்ளை**யவர்கள். அவர் பணியாற்றிய விவரம் என் கவனத்தில் இல்லை. அவர் மறைந்த செய்தி நாளிதழ்களில் வந்ததைப் பார்க்க முடிந்தது. அப்போது நான் தமிழ்க்கலைக் களஞ்சியத்தில் பதினைந்து மாதம் பணியாற்றி மிகச் சோகமான முறையில் விலக்கப்பெற்ற செய்தியும் மேற்குறிப்பிட்ட செய்தியும் சேர்ந்து கொண்டன. ஏதோ ஒரு பணியாக கன்னியாகுமரி சென்றிருந்த **டாக்டர் ந. சஞ்சீவி** இந்த இரண்டு செய்திகளையும் நாளிதழ்களில் பார்த்தவர் எனக்கு எழுதிய கடிதத்தில் "தமிழ்க் கலைக்களஞ்சியப் பணியிலிருந்து விலக்கப்பெற்ற சோகச் செய்தியை நாளிதழ்களில் படித்தேன். கவலை வேண்டா. உங்கள் கடின உழைப்புக்குப் பொருத்தமான மரபு வழிப் பண்பாட்டு இயக்குநர் பொறுப்பில் சேர்த்து விடுகின்றேன்" என்று எழுதினார்.

தேர்வுக் குழு ஒன்று அமைக்கப் பெற்றது. அதில் வழக்கமாக தமிழ் இலக்கியத் துறைத் தலைவரும் இந்திய வரலாற்றுத்துறைத் தலைவரும் உறுப்பினர்களாக இருப்பர். **டாக்டர் ந. சஞ்சீவியும்** (தமிழ் இலக்கியத்துறை),

---

13. Insstitute of Traditional Cultures of South and South East Asia.

**டாக்டர் சி.ஏ. இராமச்சந்திரனும்** (இந்திய வரலாற்றுத் துறை) உறுப்பினர்களாக அமர்ந்தார்கள். மாநிலக் கல்லூரியில் வடமொழித்துறைப் பேராசிரியர்-துறைத் தலைவராகப் பணியாற்றிய திருஞானசம்பந்தம்பிள்ளை ஓய்வுபெற்றபின், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் சென்னையில் நிறுவியுள்ள ஆய்வு நிறுவனம் ஒன்றில் ஆய்வாளராகப் பணியாற்றி அது மூடப்பெற்றபின் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஓரிரண்டு ஆண்டுகள் பதிவாளராகப் பணியாற்றி அப்பணிக்காலம் முடிவுற்றதும் மரபுவழிப் பண்பாட்டு நிறுவன இயக்குநர் பதவியில் கண் வைக்கின்றார். மிகவும் நல்லவர். ஏதாவது பணியிலிருந்து கொண்டு ஊதியம் பெற ஆசைப் படுபவர். நல்லவராகவும் செல்வாக்குள்ளவராகவும் இருந்ததனால் பணியும் எளிதாகக் கிடைத்து விடுகின்றது. **டாக்டர் ந. சஞ்சீவி** என் பெயரையும் **டாக்டர் சி. ஏ. இராமச்சந்திரன்** திருஞானசம்பந்தம் பிள்ளை பெயரையும் குழு முன் வைக்கிறார்கள். டாக்டர் இராமச்சந்திரன் "டாக்டர் ரெட்டியாருக்கு வடமொழி தெரியாது; அவர் இப்பதவிக்குப் பொருத்தமானவர் ஆகார்" என்று பேச, டாக்டர் பிள்ளையவர்கள் செல்வாக்குள்ளவராக இருந்தபடியால், டாக்டர் ந. சஞ்சீவி உயர்ந்த நெறியாளராகவும் பண்பாளராகவும் இருந்தபடியால் டாக்டர் இராமச்சந்திரனை மறுத்துப் பேசவும் என் பெயரைப் பரிந்துரைக்கவும் செய்யவில்லை; மவுனமாக இருந்து விட்டார். டாக்டர் பிள்ளையவர்கள் இயக்குநராக நியமனம் பெற்று ஒருசில ஆண்டுகள் பணியாற்றி உடல்நலக் கோளாறினால் பதவியிலிருந்து விலகிவிட்டார். அவரையடுத்து **டாக்டர் கே.ஆர். அநுமந்தன்** (மதுரைப் பல்கலைக் கழக வரலாற்றுத் துறைப் பேராசிரியர் துறைத் தலைவராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர்) இப்பணியில் அமர்ந்தார். டாக்டர் அநுமந்தன் **நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை**யின் மருமகனானதால் மாமனாரின் புகழ்ஒளி இவருக்கு எப்போதும் கைகொடுத்து உதவும்.

இளமைக்காலம் முதல் அறிவியல் துறையில் அதிக ஈடுபாடு கொண்ட நான், தனியாகத் தமிழ் இலக்கியம் கற்கத் தொடங்கும் நிலையில் சங்க இலக்கியம் தான் என்னை அதிகமாகக் கவர்ந்தது. அவற்றில் 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' (புறம்-192) என்ற கணியன் பூங்குன்றனாரின் ஒரே பாட்டு-ஒப்பற்ற பாட்டு-என் உள்ளத்தை அதிகமாகத் தொட்டபாட்டு. அதிலுள்ள

*'தீதும் நன்றும் பிறர்தர வாரா'*

*'...... நீர்வழிப்படூஉம் புணைபோல்*
*முறைவழிப்படும் ஆருயிர்'*

*'பெரியோரை வியத்தல் இலமே; சிறியோரை*
*இகழ்தல் அதனினும் இலமே'.*

என்ற அடிகள் மன்பதைக்கு என்றும் நிரந்தரமாக 'அறிவு ஒளி - அறஒளி' காட்டிக் கொண்டிருக்கும் என்பது என் கருத்து. டாக்டர் சஞ்சீவியால் **'நன்று'** செய்ய முடியவில்லை. டாக்டர் இராமச்சந்திரன் **'தீது'** செய்ததாக நான் கருதவில்லை. 'முறைவழிப்படும் ஆருயிர்' என்ற அடி எனக்கு ஒளி காட்டுவதால். இதனால் டாக்டர் சஞ்சீவிக்குப் **புகழாரம்** சூட்டவில்லை; டாக்டர் இராமச்சந்திரனை **'இகழ்தல்'** செய்யவும் இல்லை. திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பணியேற்ற பின் ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால்பட நேர்ந்தபோது, நம்மாழ்வாரின் திருவாய்மொழியில்

*தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுகப்*
*பண்டேபரமன் பணித்த பணிவகையே*
*- திருவாய் 10.4:9*

என்ற பாசுர அடிகளின் கருத்து என் உள்ளத்தைக் கவர்ந்தது. இதனால் வேறுபணிகளில் இறங்கிவிட்டேன். பாரதியாரின் நூற்றாண்டுக் காலமாக இருந்தமையால் அதன் நினைவாக **1. பாஞ்சாலிசபதம்-ஒரு மதிப்பீடு, 2. குயில்பாட்டு-ஒரு மதிப்பீடு, 3. கண்ணன்பாட்டுத் திறன், 4. பாரதீயம்** என்ற நான்கு திறனாய்வு நூல்கள் எழுதத் திட்டமிட்டு அப்பணியில் முழு மூச்சில் இறங்கிவிட்டேன். வேறு திசைகளிலும் பணியாற்ற இழுத்துச் செல்லப் பெற்றேன். அவற்றுள் ஒன்று **தமிழ் இலக்கியத் துறையில் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்** பணி. அது தீவிரமாக நடைபெற்று வருகின்றது. என் பார்வையில் மூன்று மேல்நிலைப் பள்ளி ஆசிரியப் பெருமக்கள் பகுதி நேரத்திட்டத்தில் டாக்டர் பட்டத்திற்கு (பிஎச்.டி) ஆய்வு செய்து வருகின்றனர்.

**3. உலக வாணிக மையம் (ஏப்ரல் 3, முற்பகல் 12 மணி): பின்லேடனால்** இடிக்கப்பெற்று புனர் அமைப்பிலுள்ள இந்த இடத்தைப் பார்ப்பதற்கு நிலத்தடியிலுள்ள (சுரங்கம்) மின்சார இருப்பூர்தி வழியாகப் புறப்பட்டோம். இந்த இருப்பூர்தி சில இடங்களில் ஒன்றன்கீழ் ஒன்றாக மூன்று நிலைகளில் இயங்குகின்றன. இந்த ஊர்திகளுக்கு மேல் ஆறுகள் ஓடுகின்றன; கடல்கள் உள்ளன. அவ்வளவு ஆழத்தில் இவை இயங்குகின்றன.

முதலில் இறங்கிச் சென்ற இடம் மான்காட்டன் தீவு[1] என்பது. அங்கு இறங்கி சுமார் அரை ஃபர்லாங் தொலைவு நடந்து சென்று ஒரு **படகில்**[2] ஏறினோம். அது படகு அல்ல; நகரும் ஊர் போன்றது. மூன்று அசுரர்கள்,

1. Manhatton Island  2. Ferry

விண்ணில் இயங்கும் மூன்று நகரங்களில் இருந்துகொண்டு பல இடங்களை அழித்ததாகப் புராணங்களில் படித்துள்ளோம். இதுதான் கதை. முற்காலத்தில் தாரகாசுரனுடைய புதல்வர்களான **வித்யுன்மாலி, தாரகாட்சன், கமலாட்சன்** என்னும் மூவரும் மிக்க தவம் செய்து நான்முகனிடம் வானத்தில் பறந்து செல்லும் தன்மை வாய்ந்த மூன்று பட்டணங்களை அடைந்தனர். இவர்கள் மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்த இடங்களிலே பறந்து சென்று பலவிடங்களின் மேலும் தங்கி அவ்விடங்களைப் பாழாக்கி வந்தனர். இத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலானாருடைய வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திர சூரியர்களைச் சக்கரங்களாகவும், நான்மறைகளைக் குதிரைகளாகவும் நான்முகனைச் சாரதியாகவும் மகாமேருவை வில்லாகவும், ஆதிசேடனை வில்நாணாகவும், திருமாலை வாயுவாகிய சிறகமைத்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும் அமைத்துக்கொண்டு போருக்குத் தயாராகச் சென்று போர் தொடங்கும்போது வெகுளிச் சிரிப்பு சிரித்து அச்சிரிப்பினின்று உண்டாகிய தீயினால் அவ்வசுரர்களை அந்நகரங்களுடனே எரித்திட்டனன் என்பது[3].

இதனை நினைவுகூரும் நிலையில் இந்தப் படகில் ஏறுகின்றோம். நம்மைப் போல் ஏராளமான மக்கள் ஏறுகின்றனர். இதில் 500 பேர் ஏறிச் செல்ல இருக்கை வசதிகள் உள்ளன. கடலில் சுமார் 20 மணித்துளிகள் சென்றபோது கடலின் நடுவில் வைக்கப் பெற்றுள்ள பெண் வடிவிலுள்ள **சுதந்திரச் சிலையைப்**[4] பார்த்துக்கொண்டே செல்லுகின்றோம். (படம் - 27) இச்சிலை **சுதந்திரத் தீவு**[5] என்ற ஒருசிறு தீவினிடையே வைக்கப் பெற்றுள்ளது. இதன் உயரம் 151 அடி; 154 அடி உயரமுள்ள ஒரு பீடத்தின் மீது வைக்கப் பெற்றுள்ளது. படகில் சென்ற நாம் **ஸ்டேட்டன் தீவில்**[6] இறங்குகின்றோம். படகில் செல்லும் போதே **எல்லிஸ் தீவு**[7] கண்ணில்படுகின்றது. சுமார் 100 ஆண்டுகட்கு முன்னர்(படம் - 28) (1892-1954) **அமெரிக்காவுக்கு வருபவர்கள்**[8] இங்குச் சோதிக்கப்பெற்று அனுப்பப் பெறுவார்களாம். இதை அறிந்து கொள்ளுகின்றோம்.

ஸ்டேட்டன் தீவில் சிறிது தொலைவு (சுமார் 100 அடி) சென்று மற்றொரு படகில் ஏறுகின்றோம். இது மான்காட்டன் தீவுக்குத் திரும்புவதற்காக

3. பெரி. திரு. 10.2:9 என்ற பாசுரத்தின் உரைக் குறிப்பில் விளக்கப் பெற்றுள்ளது.
4. Statue of Liberty. இது ஃபிரெஞ்சு அரசினரால் 1884–இல் அமெரிக்கப் புரட்சியின்போது (American Revolution) இரு நாடுகள் செய்து கொண்ட சமாதானத்தின் நினைவாக அன்பளிப்பாக வழங்கப் பெற்றது. 100 ஆண்டுகட்குமேல் இங்கு இருந்து வருகின்றது. இது நவீன காலத்தில் மிக உயர்ந்தது.
5. Liberty Island
6. Staten Island (Ferry)
7. Ellis Island
8. Immigrants

அமைந்த படகு. இதில் ஏறி சுமார் 20 மணித் துளிகளில் வந்த இடத்தை அடைகின்றோம். திரும்பும்போது சுதந்திரச் சிலையின் பின்புறத்தை நோக்கிய வண்ணம் வருகின்றோம். படகிலிருந்து இறங்கி மீண்டும் மின்சார இருப்பூர்தியில் ஏறுவதற்கு வரும்போது கண்ணிலான் ஒருவன் கோலுடன் தடவிக் கொண்டே வரும்போது நாய் ஒன்று அவனுக்கு வழிகாட்டிக் கொண்டு வரும் வியத்தகு காட்சியைக் காண்கின்றோம். சமூகத்திற்கு காவலர்கட்கு நன்றிக்கு எடுத்துக் காட்டுகளாக உள்ள நாய்களின் நற்றொண்டு நம் மனத்தில் குமிழிகளிட்டு நம்மை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துகின்றது.

மீண்டும் மின்சார இருப்பூர்தியில் ஏறி சிதைவுற்றுக் கிடக்கும் உலக வாணிக மையத்தை அடைகின்றோம். வாணிக மையம் 110 அடுக்கு மாடிகளுள்ள இரண்டு கட்டடங்களில் அமைந்திருந்தது. இரண்டிலும் உலக வாணிக அலுவலகங்கள் அமைந்திருந்தன. இவற்றுடன் வேறு ஐந்து சிறிய கட்டடங்கள் இருந்தன. இவற்றில் நான்கு அலுவலகங்கள் அடங்கியவை; ஒன்று உணவு விடுதியாக செயல்பட்டது. பாஸ்டனிலிருந்து[9] புறப்பட்ட இரண்டு பெரிய விமானங்களில் (சுமார் 200 பயணிகள் வீதம் அமர்ந்திருந்தவை) ஃபின்லேடனைச் சேர்ந்த தீவிரவாதிகள் ஏறி விமான ஓட்டிகளை வல்லந்தமாகத் தள்ளிவிட்டு தாம் அந்த விமானங்களை ஓட்டி வாணிக மைய இரண்டு கட்டடங்களில் பலமாக மோதுகின்றனர். விமானங்கள் இரண்டும் வாணிக மையக் கட்டடங்களில் வெடித்து கட்டடங்கள் இரண்டையும் அருகிலிருந்த ஐந்தையும் தரைமட்டமாக்கிவிட்டன. இரண்டு மையங்களிலிருந்த நூற்றுக் கணக்கான வாணிக நிறுவனங்களும் அவற்றில் பணியாற்றிய ஆயிரக் கணக்கான மக்களும் (2600) காலனுக்கு இரையாயினர்.

மற்றொரு விமானம் நியுஜெர்சியிலிருந்து புறப்பட்டுச் சென்றது. இஃது அமெரிக்காவின் தலைநகரான வாஷிங்டனிலுள்ள பெண்டகன்[10] வடிவிலுள்ள இராணுவத் தலைமைச் செயலகத்தைத்[11] தாக்கி ஒரு பகுதியைச் சிதைத்தது.

இடிபாடுகளுடன் சிதைந்து கிடந்த வாணிக மையங்களிலிருந்த இடத்தை அடைகின்றோம். இடிபாடுகளை அகற்றிக் கொண்டிருந்தனர். பல பாரந்தூக்கிகள் இந்த அகற்றும் பணியில் ஈடுபட்டிருந்தன. இடிபாட்டுப் பொருள்களை ஸ்டேட்டன் தீவில் போட்டுக் கொண்டிருந்ததைக்

---

9. Boston - என்ற இடம் நியுயார்க்கிலிருந்து 220 கல் தொலைவிலுள்ளது. இந்த இரண்டு விமானங்களும் இங்கிருந்துதான் புறப்பட்டன.

10. Pentagon 11. Military Head Quarters.

காண்கின்றோம். இவற்றிலிருந்த பழைய இரும்புப் பகுதியைச் சென்னையிலிருக்கும் இரும்பு வாணிகர் ஒருவர் ஏலத்தில் எடுத்துக் கொண்டதையும் அறிகின்றோம்.

அடுத்து இருப்பூர்தியில் நிலையத்துக்கு வந்து வீடு திரும்புகின்றோம். இரவு சுமார் 8 மணிக்கு இல்லத்தை அடைகின்றோம்.

## 6. நயாகரா அருவிகள்[1]

இவை **பஃப்பலோ நயாகரா அருவிகள்**[2] எனவும் வழங்கப் பெறுகின்றன. **பஃப்பலோ** என்பது இந்த அருவிகள் இருக்கும் **நகரத்தின்** பெயர். இந்த ஊருக்கு இப்பெயர் எப்படி ஏற்பட்டது என்பது இன்றளவும் விளங்காப்புதிராகவே[3] உள்ளது. ஆனால், அவை இருக்கும் இடம் வேறு எந்தப் பெயராலும் வழங்கப் பெறவில்லை. கிண்டலாக நோக்கினால் இந்த **பஃப்பலோ நகரில்** என்றுமே **எருமை**[4] இருந்ததில்லை. ஃபிரெஞ்சு சொல்லாகிய **'beau flauve'** (அழகான ஆறு) என்ற பொருளைக் கொண்டது, தவறாக உச்சரிக்கப் பெற்று இப்பெயர் ஏற்படக் காரணமாயிற்று என்பது ஒரு கொள்கை.

**இராபெர்ட் வாசாலி**[7] என்ற ஃபிரெஞ்சு ஆய்வாளர் தமது சிறியபடகை, சிறிய படகை இயக்கும் உறுப்பால்[8] குறைந்த ஆழமுடைய நீரில் 1628-இல் நடத்திச் சென்றார். ஒரு சிறிய ஃபிரெஞ்சுக் குடியேற்றம்[9] 1758-இல் இங்கு ஏற்பட்டது. அடுத்த ஆண்டு இது பிரிட்டிஷாரால் எரியூட்டப் பெற்றது. ஆனால், குடியிருந்தார் உறுதியாக எதிர்த்தனர். **ஜோசஃப் எல்லிகாட்**[10] என்பார் **ஹாலண்ட் காண்ட் கம்பெனியார்**[11] இந்நிலத்தை வாங்கிவிட்டதாகத் தெரிவித்தார். **எல்லிகாட்**[12] என்பார் **நியு ஆம்ஸ்டர்டாம்**[13] என்ற பெயரில் அமைக்கத் திட்டம் தீட்டினார்; அதனை **'வாஷிங்டன்' (டி.சி)** போல் அமைத்தார்.

நகர் அவ்வாறு அமைக்கப்பெற்றது. ஆனால், குடியிருந்தோர் அதனை **பஃப்பலோ** என்ற பெயரால் வழங்கவேண்டும் என்று வற்புறுத்தினர். மீண்டும் பிரிட்டிஷார் இந்நகரை 1812-இல் நடைபெற்ற போரில் எரிக்கு இரையாக்கினர்; ஆனால், அது விரைவில் திரும்பக் கட்டப்பெற்றது. 1818-இல் நீரில் செல்லக்கூடிய நீராவிக் கப்பல் ஒன்று அமைக்கப் பெற்றது. இந்த இரண்டு பெரிய நிகழ்ச்சிகளில் **முதலாவது** இச்சிறிய ஊரை 16 ஆண்டுகளில் பெரிய நகரமாக மாற்றியது.

---

1. Niagara falls, New York (மாநிலம்)
2. Buffello Niagara falls
3. Mystery
4. Buffelo
7. Robert La Salla
8. Paddle
9. Setlement
10. Joseph Ellicot
11. Holland Cand Co
12. Ellicott
13. New Amsterdam

1825-இல் **ஈரி கால்வாய்**[14] என்பது திறக்கப் பெற்றது இரண்டாவது நிகழ்ச்சியாகும். எண்ணற்ற வாணிக-கப்பல் போக்குவரத்து வசதிகளை இந்தக் கால்வாய்கள் ஒன்று சேர்க்க வாய்ப்பளித்தமையால், பெரிய ஏரிப்பகுதி[15], கனடா, கிழக்கு ஒன்றிணைந்த மாநிலங்கள்[16] ஆகியவற்றிடையே கப்பல் வாணிகம் நடைபெறும் இடமாக பஃப்பலோ நகர் வளர்ந்தது.

இவ்வாறு பன்முக வளர்ச்சியுடன் திகழும் நகரின் ஒரு பகுதியில் வாய்ப்பாக அமைந்துள்ள இந்த நயாகரா அருவிகளைப் பார்க்க மே 31-ஆம் நாள் (2002)-வெள்ளி, காலை 7.15 மணிக்குப் புறப்பட்டோம். நாங்கள் இருப்பது நியுயார்க்கேயாயினும் நயாகரா அருவிகளை அடைய 430 கல் தொலைவைக் கடந்தாக வேண்டும். அப்படிக் கடந்து செல்லும்போது அடுத்த மாநிலமாகிய **பென்சில் வேனியா** மாநிலத்திலும் நுழைந்து செல்ல வேண்டிய நிலை. மாலை 4.00 மணிக்கு எங்கள் அரிய நண்பர் **டாக்டர் தனஞ்செயன்** (திருப்பதியைச் சேர்ந்தவர்; இருபத்தைந்து ஆண்டுகட்கு முன் அமெரிக்கா வந்து பணியாற்றிக் கொண்டிருப்பவர்) இல்லத்தை அடைந்தோம்[17].

**சிந்தனையோட்டம்:** நயாகரா அருவிகளைப் பார்க்க நினைக்கும்போது என் சிந்தனையோட்டம் 1940-களுக்குத் தள்ளப் பெறுகின்றது. நாடு விடுதலை பெறுவதற்கு இரண்டு மூன்று ஆண்டுகளில் (1945-47) நடைபெற்ற நிகழ்ச்சிகள் குமிழியிடுகின்றன. அக்காலத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் '**ஆற்றோரம்**' என்ற தலைப்பில் சொற்பொழிவுகள் நிகழ்த்திய **அறிஞர் அண்ணாதுரை** துறையூருக்கு வந்தார். அக்காலத்தில் சுயமரியாதை, காங்கிரசு, பொதுவுடைமைக் கட்சிகள் மட்டும் இருந்தன. தந்தை பெரியாருக்குச் செல்வாக்கு மிகுந்திருந்தது. அதனால் அவ்வூரில் சுயமரியாதைக் (தன்மான இயக்கம்) கட்சிக்கு மதிப்பு மிகுந்திருந்தது.

'**ஆற்றோரம்**' என்ற தலைப்பிலேயே இங்கு பேசுமாறு வேண்டிக் கொண்டதற்கிணங்க, பேசினார். ஊரே திரண்டு வந்தது போன்ற பெருங்கூட்டம்; பள்ளியில் 750 மாணவர்கள்; ஊர்ப் பெருமக்கள் 500-க்கு மேல். உலகில் உள்ள நாகரிகங்கள் யாவும் ஆற்றோரங்களில் வாழும் மக்களிடையேதான் தோன்றி வளர்ந்தன என்று கூறி ஆஃபிரிக்காவில் **நைல்நதி**, அமெரிக்காவில் **நயாகரா**, இங்கிலாந்தில் **தேம்ஸ்,** நம் நாட்டில் **கங்கை, யமுனை, கோதாவரி, கிருஷ்ணா, காவிரி, வைகை, பொருநை** நதிகளை எடுத்துக் கூறி விளக்கினார். இந்நிலையில் **நயாகரா** மனத்தில் எழுகின்றது! இந்நிலையில்,

---

14. Eric Canal　　15. Great Lakes region

16. Eastern United States

17. 55, Halston Parkway, East Anherest, New York 1405, USA (716-688-4146). இந்தஇடம் பஃப்பலோ மாநகரிலுள்ள ஒரு சிறு பகுதி.

*அயர்விலா ஆவல் தூண்டும்*
*ஆர்த்தெழும் 'வீழ்ச்சி'[18] காணுமே*
*பயன்விரி வேகம் நெஞ்சில்*
*பாயலை உணர்ச்சி பாய்ச்சும்*
*வியன்தலைத் தேக்கம் நீர்கொள்*
*விரிநிலை பெருகும் காட்சி![19]*

என்பதற்கிணங்க நம் மனத்தில் உந்தல் எழுகிறது.

**நயாகரா-இரவுக் காட்சி:** அன்று இரவு **டாக்டர் தனஞ்செயன்** எங்கள் காரை ஓட்டிவர சரியாக இரவு 8.30-க்கு அருவியிருக்கும் இடத்தை அடைந்தோம். 5 டாலர் கட்டணம் செலுத்தி காரை உரிய இடத்தில் நிறுத்திவிட்டு பாலம்போல் கட்டியிருக்கும் உயரமான இடத்திற்குச் சென்றோம். நயாகரா ஆறு அமெரிக்காவையும் கனடாவையும் பிரித்து நிற்பதுபோல் அமைந்துள்ளது. எதிர்ப்புறமுள்ள கனடாவைச் சேர்ந்த அருவியின் உயரம் 176 அடி; குதிரையின் காலடி லாடம்[20] போல் சுமார் 2200 அடி அளவில் வளைந்து அமைந்துள்ளது. அமெரிக்கா பக்கமுள்ள அருவி சற்று உயரமாக (184 அடி), அமைந்து சுமார் 10.75 அடி வளைந்து அமைந்துள்ளது. ஏனைய இரண்டு அருவிகளிலும் மிகச் சிறிதானது‍ன 'முக்காடிட்ட பெண் போல்' அமைந்துள்ள அருவி[21] **லூனா**[22] என்ற தீவினாலும் **கோட்**[23] என்ற தீவினாலும் பிரிக்கப் பெற்றுள்ளது. (படம் - 29)

மூன்று அருவிகளிலும் ஒன்று சேர்ந்து வெளிவரும் நீரின் அளவு வினாடிக்கு 1.5 மில்லியன் (15 இலட்சம்) காலன்களாகும். ஆயினும் ஆற்று நீரில் பாதி முதல் முக்கால் பகுதி வரை. கடலில் கலப்பதற்கு முன்னர் மின்சார உற்பத்திக்காகப் பிரித்து விடப்பெறுகின்றது. இரவு நேரத்தில்தான் இவ்வாறு பிரித்து விடும் செயல் நடைபெறுகின்றது. உல்லாசப் பயணக் காலங்களில் ஆற்றின் பிரவாகம் வினாடிக்கு 700,000 காலன் வீதமும் ஏனைய காலங்களில் இதை விடக் குறைவாகவும் குறைக்கப் பெறுகின்றது.

இரவு நேரத்தில் நாட்டியமாடும் நங்கையின்மீது பன்னிற ஒளி செலுத்தப்பெறும்போது அவள் மிக அழகாகக் காணப்பெறுவதைக் கண்டு மகிழ்கின்றோம் அல்லவா ? அங்ஙனமே தொலைவிலுலிருந்து சிவப்பு, நீலம், பச்சை, மஞ்சள் நிற ஒளிகள் செலுத்தப் பெற்றபோது அருவிகள்[24]

---

18. வீழ்ச்சி–Falls. 'அருவிகள்' தாமே தமிழ் வழக்கு.
19. வா.மு.சே – அமெரிக்காவில் பெருங்கவிக்கோ. பக் 287.
20. Horse shoe    21. Bridal Neil    22. Luna Island
23. Goat Island
24. மலைகளை ஆணாகவும், ஆறுகளைப் பெண்ணாகவும் வருணிப்பது இலக்கியமரபு. இதனை நினைத்துக் கொள்ள வேண்டியது.

அற்புதமாகக் கண்களுக்கு விருந்தளித்துக் கொண்டிருந்தன. இந்த அழகுகட்கெல்லாம் முத்தாய்ப்பு வைத்த மாதிரி அருவிகள் திகழும் வான மண்டலம் முழுவதும் கவிந்து மூடும் வண்ணம், உள்ளத்தையீர்க்கும் வண்ணம் பல்வகை வாண வேடிக்கைகள் காட்டப் பெற்று பார்ப்போரை மருளும்படி செய்தன. சில காட்சிகளை நாங்கள் ஒளிப்படங்களாக எடுத்து வைத்துள்ளோம். (படம் - **30, 31, 32, 33**)

இக்காட்சிகளைக் கண்ட கவிஞர் பெருங்கவிக்கோ தம் கவிதைகளில் கூறுவனவற்றையும் உங்கள் முன் வைக்கின்றேன்.

*அக்கரை கனடா ஆட்சி!*
*இக்கரை அமெரிக் கர்க்காம்!*
*சொக்குபே ரின்ப மாட்சி*
*தொடர்ந்திடும் இருபு றத்தும்!*
*தக்கநல் விளக்கொ ளிகள்*
*தனியொளி பாய்ச்சும்! ஏரார்*
*பக்கங்க ளெல்லாம் பச்சை*
*படர்ந்திடும் இருளை வென்று (1)*

*இருகரை நடுவில் ஓடும்*
*இணையிலா வேகம் ஆற்றின்*
*பெருநதி நீர்நி லைகள்*
*பேராளம் இருநூற் றுக்கும்*
*வரும்படி மேலாம் சூழ*
*வளமைசால் குன்றக் கோலம்!*
*மருவிலா அற்பு தங்கள்!*
*மலைவளம் அலையின் வேகம்! (2)*

***இரவிலே ஒளிவீச் சுக்கள்***
***இருமுப்பத் தின்மூன் றாகும்!***
***கரவிலார் நெஞ்சம் போலக்***
***கனடாவின் வண்ணம் பாடும்***
***இரவலர் போலச் சூழ்ந்த***
***இருளதோ கெஞ்சிப் பெற்று***
***பரமனின் இயற்கைக் கோ!ஓ!***
***பயன்புதுப் பாதை காட்டும்! (3)***

*வண்ணங்கள் மாறும்; மேலும்*
*வர்ணசா லங்கள் தோறும்*
*எண்ணங்கள் மீறும்; எங்கும்*
*இனிமையின் இனிமை பூக்கும்;*
*பண்ணிசை அருவி வெல்லும்*
*பாய்ந்திடும் நயாக ராவின்*
*தண்மதி கணக்கில் லாமல்*
*தாகத்தைத் தீர்க்கும் அம்மா! (4)*

*அற்புதத் தின்மேல் ஓங்கு*
*அற்புதம் கண்டேன்! வாழ்வின்*
*பொற்பதங் கண்டேன்! பாக்கள்*
*பூரித்துப் பொங்கென், நெஞ்சச்*
*சொற்பதங் கண்டேன்! வையச்*
*சுகம்கண்டேன்! மீண்டும் வந்தே*
*அற்புதம் நிகழ்த்துவேன் ஆம்!*
*அற்புதம் தானே வாழ்வு! (5)*

***உச்சிமேல் வானி டிந்து***
***ஒழுகுதல் தானோ? இல்லை***
***மெச்சுதல் கால தேவன்***
***விழிநீரை வடிக்கின் றானோ?***
***முச்சங்கத் தமிழ்ப்பெ ருக்கோ?***
***முனிந்தெழு தமிழர் ஓர்நல்***
***பச்சைநல் தமிழர்நா டாக்கப்***
***பாய்ந்தெழு உணர்ச்சி தானோ? (6)***

*கற்கண்டுப் பாலா மோ?பார்*
*கவிஞனின் படைப்போ எந்த*
*விற்கொண்டே எய்த தாலே*
*வியற்பிற்கே எல்லை யாக*
*பற்கொண்டே இயற்கைத் தாயாள்*
*பதைத்திடச் சிரிக்கின் றாளோ?*
*பொற்பென்னே என்னே என்று*
*பூரிக்கும் உள்ளம் அம்மா! (7)*

*சீர்தந்த கொடையோ? இல்லை*
*தேவனின் கொடையோ? ஆற்றல்*
*கார்தந்த கொடையோ அன்பர்*
*கவலைதீர் கொடையோ எந்த*
*வேர்தந்த கொடையீ தாமோ?*
*விரிநிலம் அதிச யிக்க*
*யார்தந்த கொடையி தம்மா!*
*நம்பிக்கை வெண்தி ரை!ஆ! (8)*

*இயற்கைத்தாய் கூத்துக் காட்ட*
*இத்திரைச் சீலை தன்னை*
*அயராமல் விரித்துள் ளாளோ?*
*யாரிதைச் சுருட்ட வல்லார்?*
*பெயல்மழை மலையில் வீழ்ந்து*
*பெருகினும் இதனைப் போலப்*
*புயல்வேகம் வெல்லு மாமோ?*
*புதுமையுள் புதுமை ஆ!ஆ! (9)*

***சித்திரக் கூட மோ?நல்***
***தேவலோ கந்தான் ஈதோ?***
***முத்திரை ஓவி யத்தை***
***முறைஅறி சித்தன் வித்தை***
***இத்தரை வேந்தன் கால***
***எண்ணத்தால் வடிக்கின் றானோ?***
***பத்தினிப் பெண்ணின் கற்போ?***
***பரமனின் கரமோ? விந்தை (10)***

***இப்புது மைஅ ரங்கம்***
***எழில்கூத்தோ அடடா! ஓ!ஓ!***
***ஒப்பிலாக் கூத்து! ஆசை***
***ஊட்டிடும் கூத்து! இன்ப***
***முப்பழச் சுவைக்கூத் தை! வெல்***
***முத்தமிழ்க் கூத்தீ தோ?ஆ!***
***எப்பக்கம் திரும்பி னாலும்***
***ஏரார்ந்த கூத்தென் சொல்வேன் (11)***

*வியந்தோறும் வியப்பைக் கண்டோம்!*
*வெண்ணிலா கோடி சேர்ந்தே*
*நயந்தரும் ஒளிவெள் ளத்தை*
*நாளெல்லாம் தெளித்த தைப்போல்*
*வயப்படும் இயற்கை தந்த*
*வனப்பினை எழிலின் எல்லை*
*நயாகரா அருவி கண்டேன்!*
*நாம்வாழ்ந்த பயனைக் கண்டோம்! (12)*

பாடல்கள் யாவும் கவிஞரின் கற்பனை கலந்த அநுபவத்தை உணர்த்துகின்றன. இத்துடன் நிற்க.

இரவுக் காட்சிகளைக் கண்டு களித்த நிலையில் இரவு 11.30 மணிக்கு வீடு திரும்பினோம். இல்லத்தை வந்தடைந்தபோது நள்ளிரவு 12.00 மணி.

**நயாகரா-பகல் காட்சிகள்:** இன்று (1-8-2002) சனிக்கிழமை; டாக்டர் தனஞ்செயன் எங்களுடன் வரவில்லை. நான், என் மனைவி, மகன் டாக்டர் இராமகிருஷ்ணன் மருமகள் விசயலட்சுமி நால்வர் மட்டுமே பகலில் அருவிகளைக் காண முற்பகல் 9.30 மணிக்குப் புறப்பட்டு 10.00 மணிக்கு அருவிகள் இருக்கும் இடத்தை அடைந்தோம் (20 கல் தொலைவு). காருக்கு 5 டாலர் செலுத்தி உரிய இடத்தில் நிறுத்திவிட்டு ஒருவருக்கு 8.50 டாலர் வீதம் செலுத்தி சீட்டுகள் வாங்கிக் கொண்டு அருவிகளை மேல் மட்டத்திலிருந்து காண்கின்றோம் - இனம் தெரியாத உள்ள எழுச்சியில். பெருங்கவின்கோ பாணியில் கூறினால்,

*உலகத்தேழ் அதிச யத்தில்*
*ஒருபெரும் அதிச யத்தைத்*
*தலம்புகழ் நயாக ராவை*
*தான்பார்க்கும் பேறும் என்னே!*
*நிலமகள் இவ்வி டத்தில்*
*நீரெனும் கைகள் கொண்டு*
*குலமகள் கொடையாய் வெள்ளம்*
*குதித்துவீழ் காட்சி என்னே! (13)*

*வீழ்ந்திடும் அருவி கீழ்வீழ்*
*வேகத்தில் நீர்த் திவலை*
*தாழ்ந்திடும் வெண்மே கங்கள்*
*தான்வந்து புறப்ப டல்போல்*

*வாழ்ந்திட வேண்டும் மேக*
*மண்டலம் செல்ல லைப்போல்*
*ஆழ்ந்திட எழும்பிச் செல்லும்*
*அடடா! அழகென் னே!ஆ![25] (14)*

*மின்விசை தூக்கியின் மூலம்[26] ஆற்றின் மட்டத்திற்கு இறங்கினோம் (சுமார் 180 அடி). கவிஞர் பாணியில் சொன்னால்.*

*தூக்கியின் கீழி றங்கித்*
*தொடுகரைப் படகில் ஏறி*
*காக்கவே இரப்பர்ச் சட்டை*
*கையேற்று மாட்டிக் கொண்டு*
*மீக்கெழும் ஆவல் உந்த*
*மீதூர்ந்த அருவி பாய்ந்து*
*ஊக்கிடும் திசையை நோக்கி*
*உட்புகுந் திட்டோம் ஆ!ஆ! (15)*

என்பதாக அமையும். வழங்கியது இரப்பர் சட்டையல்ல. பாலிதீனாலான மெல்லிய போர்வை போன்றது அது. நூற்றுக்கணக்கான பேர்களை ஏற்றிக் கொள்ளவல்ல பெரிய படகில் ஏறிக் கொண்டோம். படகு மெதுவாக அருவிகளை நெருங்கி வந்தது. மிகவும் அருகில் நகர்ந்து சென்றது. மூன்று அருவிகளையும் நனைந்து கொண்டே கண்டு அனுபவித்தோம். இது கிட்டற்கரிய அற்புதமான அநுபவம். இதனைப் பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன் வாக்கில் கூறுவேன்.

***புதுமணப் பெண்பொ ருள்கொள்***
***'பிரைடெ'னும் நயாக ராதான்***
***கதுமெனும் ஒலியி லார்த்து***
***கதிவீழும் வேகம் காட்டி***
***விதுவிதிர்த் திடவே வீழும்***
***வேகமோ அதிவே கம்!ஆ!***
***முதுமைகொள் மின்னல் ஆற்றல்***
***முழுவேகம் வெல்லும் அம்மா! (1)***

---

25. அமெரிக்காவில் பெருங்கவிக்கோ – பக்.288
26. Elevator
27. அமெரிக்காவில் பெருங்கவிக்கோ – பக் 289–298, 304.

எந்திரப் படகு கள்தாம்
　　இடறியே கிழித்துச் செல்லும்
மந்திரம் மாயம் கொல்லோ
　　வானவர் தானம் கொல்லோ
சந்திரன் ஒளிவெள் ளம்தான்
　　தரையினில் இறங்கும் கொல்லோ!
விந்தைவெள் ளிக்குன் றங்கள்
　　உருகியே விடுவார் யாரோ! (2)

ஆயிரம் கோடிக் கொல்லர்
　　அமர்ந்தொன்றாய் உருக்க வெள்ளிப்
பாயிருந் தூசி வெண்மை
　　படர்ந்தொன்றாய் வந்த தைப்போல்
போயதைத் தகர்க்கும் ஓடம்
　　புகவிடா வகைநீர்த் திவலை
சாயவே இறைக்கும் அள்ளித்
　　தண்ணீரைத் தெளிக்கு மாதோ (3)

பலஅடித் தூரம் யாமும்
　　பார்க்கின்ற ஆவ லாலே
நலமுறச் செல்லும் போதே
　　நயாகரா மேகத் தூரல்
சலசலப் பாக ஆர்க்கும்
　　காவலாய்க் கொண்ட சட்டை
சலசல வென்றி ரைக்கும்
　　சாரலால் நனையும் நீரால்! (4)

ஓடிடும் படகின் கூம்பில்
　　உயிர்ப்புற நின்று பார்த்தோம்
கூடிடும் அருவிச் சாரல்
　　கொணர்ந்திடும் நீரி ரைச்சல்
பாடிடும் கீதம் கேட்டோம்
　　பனிபோலக் குளிரி ரைச்சல்
சாடிடும் உறையோ தாங்கும்
　　தண்முகம் இரைக்கும் சாரல்! (5)

மலர்ந்தன வெண்மே கங்கள்
மலர்ந்தன மகிழ்ச்சி வெள்ளம்
மலர்ந்தனள் இயற்கை அன்னை
மதிபோதாய் இருந்த எண்ணம்
மலர்த்தின ஆவல் உள்ளம்
மாபெரும் நயாக ராவில்
மலர்ந்தபன் னீரின் பூக்கள்
மல்கிடும் வியப்பு என்னே! (6)

எதிர்நோக்கி வீழ் ரைச்சல்
எம்செவி புகுந்து மீட்டும்
கதிகூட்டும் இன்பம் தாக்க
தூயவெண் ணகைமுத் தங்கொள்
நிதித்திவ லைகள் மேலே
நீர்த்திவ லையாய் வீழ
குதித்தெழுந் தேவீழ் ஓடம்
குறிவைக்கும் எழும்மேல் கீழாய்! (7)

சுற்றிலும் வெண்மைப் பஞ்சு
சூழ்பொதி வானில் தங்கி
கற்றைகற் றையாய் நீரைக்
கணக்கின்றி இறைத்த லைப்போல்
முற்றிலும் இறைக்கும் வானில்
முன்னேறத் துடிவான் ஊர்திப்
பற்றினைப் போலே ஓடம்
பாய்ந்தெழும் வீழும் கண்டாய்! (8)

எங்கிருந் தடடா! இந்த
இணையிலா வெள்ளம் ஒன்றாய்
பொங்கியே வந்த தோ?ஆ!
பூரித்தேன் வான லோகக்
கங்கையாள் பெருக்கோ? இல்லை
கடல்சேர்ந்து விழும்பெ ருக்கோ?
தொங்குவான் முகில்பெ ருக்கோ?
.................................. (9)

*விரைந்திடும் விமானம் சூழ்ந்த*
*வெண்பொதி முகிலி றங்கி*
*விரைவுடன் திரித லைப்போல்*
*வெண்ணுரை படரும், தூரல்*
*இரைத்திடும் நயாக ராவை*
*எதிர்த்திடர் வெல்லும் ஓடம்!*
*கரைகாணா வெள்ளம் மோதும்!*
*காட்சியின் மாட்சி! ஆ!ஆ! (10)*

*அம்மம்மா! என்ன மாட்சி*
*அடடா ஓ! வியப்பின் ஆட்சி*
*விம்மியே இயற்கைத் தாயாள்*
*வேதனை கொண்ட போதில்*
*தம்விழி வடித்த நீரின்*
*சாயலைக் காட்டி னாளோ?*
*செம்மணித் திறளோ? இங்கே*
*சிதறின? என்ஈ தென்னே? (11)*

*நெடியஅவ் வருவி வீழ்ச்சி*
*நெருக்கிடும் ஓடம் அங்கே*
*கொடியதோர் தீமை வீழ்த்திக்*
*குருதியை வெண்மை ஆக்கிப்*
*படிமிசை கொணர்ந்து மாந்தர்*
*பண்ணாதீர் வஞ்சம் என்றே*
*குடிகளுக் கறிவித் தல்போல்*
*குவியலாய் அருவி வீழும்! (12)*

***மலைமழை அணிந்தி ருந்த***
***மண்டிடும் படகோ ரத்தின்***
***தலைமுகம் குவித்துக் கண்கள்***
***தான்பார்க்க விரும்ப, ஏலா***
***நிலையாக இரைக்கும் வாரி***
***நிலைகொளா வகையுள் ஓடம்***
***அலையெறி ஆற்றின் போக்கில்***
***அணிபெறச் செல்லும் அம்மா! (13)***

மேற்றிசைக் கதிரோன் செல்ல
வெயில்முகம் அருவி வீழ
போற்றிசை பாடும் இன்பப்
பூரிப்பில் குதிக்கும் விஞ்சும்
ஆற்றல்நீர் வான வில்லின்
அழகினைக் காட்டு மம்மா!
தோற்றெழில் ஏழு வண்ணத்
திருக்கோல மாட்சி என்னே! (14)

எட்டரை மணிஇர வுக்கும்
எழில்கொழி அருவி காண
பட்டொளிக் கற்றை காட்டும்
பரிதியும்! விட்டெ றிந்த
மொட்டுக்கள் சிதறா வண்ணம்
மொத்தமாய் நெய்த வெண்மைப்
பட்டுபோல் இயற்கைத் தாயாள்
படத்திக்கொண் டேயி ருப்பாள்! (15)

புகைமண்ட லத்தி னுள்ளே
புகுந்திடும் விமானம் போலே
மிகைகொளப் படகு பாய்ந்து
மிக்கெழும் திவலை யுள்ளே
நகைகொண்டு சிரிக்கும் வேக
நடைமகள் அருவி விஞ்சி
பகைசாடி விரட்ட லைப்போல்
படகினை விரட்டும் அம்மா! (16)

பச்சைப்பட் டுடுத்திக் கொண்டு
பரதம்செய் இயற்கைத் தாயாள்
இச்சையாய் நகைக்கும் போதில்
ஈங்கெழுந் தேசித றும்அப்
பச்சரி சிப்பல்லின் தோற்றம்
பன்முத்துக் குவியல் குப்பை
எச்சரித் தேவீழ் கின்ற
எழில்கலச் சின்னம் ஈதோ? (17)

விளிம்பினி விருந்தே இன்ப
வெண்ணுரை தொடர்ந்து வீழும்
முளிபனிக் கட்டி யாமோ?
முதிர்தொங்கல் ஒளிக்கற் றையோ?
களிபெரும் இன்ப ஆட்சிக்
கதவுகள் திறந்தன வோ?எப்
பளிங்கு மண்டப மிடிந்தே
பாறையாய்த் தொடர்ந்து வீழும்! (18)

மந்தையாய் மனிதர் உன்னை
வந்துவந் தேதான் பார்ப்பார்
சிந்தையை உனக்குத் தந்தார்
சிலரேஆம்! மற்றோ ரெல்லாம்
விந்தைஈ தென்பார் சென்றே
வேசிகள் போலக் காசுப்
பந்தத்தில் கட்டுண் டேஉன்
பாசத்தை மறப்பா ரன்றோ? (19)

கனடாநல் நாடும் மேன்மைக்
கவினாரும் அமெரிக் காவும்
தனதாகக் கொண்ட ஒப்பில்
தடையிலா நயாக ராவே!
உனதரும் அழகு கோடி!
உரிமைகள் கோடி! கோடி!
எனதரும் இதயம் ஆடி
இருப்பாய்நீ காலம் பாடி! (20)

குதிரையின் லாடம் போலக்
குறியீடே அமைந்த இந்தப்
புதினத்தைப் பழமைக் காலப்
புத்தெழில் பெட்ட கத்தை
மதியினால் வெல்லும் ஆற்றல்
மமதையர் தம்மைக் கூட
விதியென மலைக்க வைக்கும்
மேன்மையின் மேன்மை காண்போம்! (21)

அமெரிக்கப் பகுதி வீழும்
 அருவியைக் கூடக் கண்கள்
இமைக்காமல் பார்ப்ப தற்கு
 இயலுமாம்! கனடா சேர்ந்த
குமைத்தெழு நயக ராவை
 கூர்விழி நோக்கு தற்கும்
அமைவிலா வகைபு கைசேர்
 அணிவீழ்ச்சி நிலையீ தென்னே! (22)

எங்கணும் வெண்பு கைகள்
 எங்கணும் மழைநீர்ச் சாரல்!
பொங்கியே சிதறுமா போல்
 பொலிமுகப் பார்வை யாளர்
அங்கங்கள் தெரிக்கும் ஈதை
 அவர்மழைக் கோட்டுத் தாங்கும்!
மங்கையர் ஆட வர்கள்
 மருளுவர் கண்ணால் பார்க்க! (23)

புதுப்புதுக் கோலம் காணப்
 பொன்விழி கோடி போதா!
புதுப்புதுத் தோற்றம்! அச்சம்
 புதுமையின் ஆச்ச ரியம்!
புதுப்புதுக் கோலம்! காலம்
 புதுக்கிய பழமைத் தொங்கல்!
புதுப்புதுப் புனலின் வீச்சு
 புதுமையோ புதுமை எங்கும்! (24)

இயற்கையாய்ப் பரியின் பாயும்
 இலாடம்போல் அருவி தோன்றும்
வியத்தொறும் வியப்பே கீழ்வீழ்
 வேகமோ மாத்தி ரைக்கே
நயத்தெழு பத்து லட்சம்
 காலன்ஓட் டம்வி ளிம்பின்
செயல்நிலை ஆண்டு தோறும்
 திறல்குறை கின்ற தாம்!ஆ! (25)

*நூற்றுஎண் பதிஅ டிக்கும்*
*நுண்மலை மேலி ருந்து*
*காற்றினால் உதவி கொண்டு*
*கவினெலாம் உண்டு பள்ளப்*
*பேற்றினை விரும்பும் ஆவல்*
*பெற்றிமை கற்றுக் கொண்டு*
*ஆற்றினை அடையும் வேகம்*
*அம்மம்மா சொல்லப் போமோ! (26)*

*புவனநீ ரோட்ட மொன்றாய்ப்*
*பொலிந்திடும் நிலைஈ தோ!ஆ!*
*தவம்தொடர் தண்ணீ ராகித்*
*தாரணி வந்த தாமோ?*
*சிவபெரு மானின் கங்கை*
*சிற்றாறு இதைஒப் பிட்டால்!*
*எவனம்மா இதைப்ப டைத்தான்*
*என்னடா கனடா வீழ்ச்சி! (27)*

*தூக்கிக்கீழ் நோக்கி ஆற்றைத்*
*தொட்டிடப் படகு சென்று*
*தாக்கலை மீறி வென்று*
*தனிஓடம் அருவி மோதப்*
*போக்கிடும்! உயரப் பார்த்தால்*
*பொதிவெள்ளிக் கட்டி, கட்டி*
*ஆக்கமாய்த் தொடங்க விட்ட*
*அழகினை வெல்லு தம்மா! (28)*

***ஆப்பிரிக் காநீர் வீழ்ச்சி***
***ஆயிரம் அடிக்கு மேலே***
***மாப்பெரி தாக வீழும்***
***மதிவிக்டோ ரியாவென் னும்அக்***
***காப்புல அருவிக் கோலம்***
***கவிஞர்க்கோ நயாக ராவின்***
***மூப்பினுள் அடக்க மென்று***
***முறைகண்டார் அறிவா ரம்மா! (29)***

*ஓடமோ லாடம் போன்ற*
*உட்புறம் சென்று, நின்று*
*தேடரும் நீர்வீழ்ச் சிக்குள்*
*சென்றிடும் மாந்தர் கண்கள்*
*ஊடுரு வித்தான் பார்த்தால்*
*உவப்பலை அதிச யம் ஆ!*
*பாடரும் பாட்டின் விந்தை*
*பாய்ச்சிடும் என்பர்! என்னே! (30)*

கிளம்பியது முதல் அருவிக்குள் நுழையும் வரை 20 மணித்துளிகள் ஆயின; சுற்றிக் கொண்டு திரும்புவதற்கு மீண்டும் 20 மணித் துளிகள். திரும்பியதும் படகை விட்டிறங்கி அருகிலுள்ள திரையரங்கை[28] அடைகின்றோம். ஒருவருக்கு 2 டாலர் வீதம் செலுத்தி நுழைவுச் சீட்டுகள் வாங்கிக் கொண்டு அரங்கிற்குள் நுழைந்தோம்; அமர்ந்து 20 மணித்துளிகள் படங்களைக் கண்டு களித்தோம். ஆதிமுதல் இன்று வரை அருவிகள் தோன்றி வளர்ந்த காட்சிகளை நேரில் கண்டு நுகர்ந்தோம்.

மின்விசை மூலம் அருவிகளைக் காணும் மேல் மட்டத்திற்கு வந்து சேர்ந்தோம். மீண்டும் காரில் ஏறி **'கோட்ஐலாந்து'**[29] (ஆட்டுத்தீவு) என்ற தீவிற்கு வந்தோம். தமிழகத்தில் **குணசீலம்** என்ற இடத்தில் (முக்கொம்பு) காவிரி, காவிரி-கொள்ளிடம் என்று இரண்டாகப் பிரிந்து 'திருஅரங்கம்' என்ற பெரிய தீவினை உண்டாக்கிக் கொண்டு மீண்டும் கல்லணையில் ஒன்றுசேர்வதை அறிவோம். பலர் நேரிலும் சென்று கண்டிருப்பர். நானும் என் இளைய மகன் டாக்டர் இராமகிருஷ்ணனும் (அப்பொழுது 10 வயது சிறுவன்) காரைக்குடியில் வள்ளல் அழகப்பர் பயிற்சிக் கல்லூரியில் விடுதலை பெற்று திருப்பதியில் பணியாற்றிக் கொண்டிருந்த காலம்[30]. நான் வைணவ திவ்விய தேசங்களைச் சேவித்துக் கொண்டு வந்தநிலை - கல்லணைவந்து அருகிலுள்ள **திருப்பேர்நகர்** (கோவிலடி) என்ற திவ்விய தேசத்தைச் சேவித்தோம். அதே காலத்தில் அழகப்பர் பயிற்சிக் கல்லூரி மாணாக்கர்கள் காவிரியின் தென் கரையிலுள்ள திருப்பராய்த் துறையில் - இராமகிருஷ்ணர் தபோவனத்தில் (தவத்திரு சித்பவானந்த அடிகள் நிறுவியது) குடிமைப் பயிற்சி முகாம் அமைந்திருந்த காலத்தில் (1954 என்பதாக நினைவு) - மாணாக்கர்களுடன் படகுகளின் மூலம் நேரில் காவிரியின் வடகரையில்

---

28. Theatre
29. Goat Island
30. 1960 முதல் 1966 வரை நான் திருப்பதியில் பணியாற்றினாலும் குடும்பம் சிறுவர்களுடன் தமிழ்ப் படிப்பின் நிமித்தம் காரைக்குடியில் இருந்தது.

உள்ள குணசீலத்தைப் பார்த்தோம். (காவிரி, கொள்ளிடம் என இரண்டாகப் பிரியும் இடம்)[31]

**கோட் ஐலாந்து** தோன்றி வளர்ந்த வரலாறு மிகவும் சுவையானது. நயாகரா ஆற்றின் வெள்ளம் ஆதியில் மிக அதிகமாக இருந்ததாகவும், அது வரவர குறைந்து கொண்டே வந்ததாகவும், குறைந்து கொண்டே வந்த ஒரு நிலையில் ஆற்றினிடையே இச்சிறு தீவு ஏற்பட்டு ஆறு இரு பிரிவாகப் பிரிந்து பிறகு ஒன்று சேர்ந்ததாகவும் ஒரு வரலாறு. அரசு இந்தத் தீவை ஒரு தனி நபருக்கு விற்றதாகவும், அவர் தலை முறைகளில் ஆடுமாடுகளை வளர்த்து அற்புதப் பண்ணைகளைக் கண்டதாகவும் மற்றொரு வரலாறு. இந்த நிலையில் ஏதோ ஒரு சமயம் ஒரு சூறாவளியும் பீடை நோய்களும் தோன்றி ஓர் ஆடும் ஒரு மனிதனும் தவிர அனைத்தும் அழிந்து பட்டதாகவும் பிறிதொரு வரலாறு. இந்நிலையில் அத்தனி நபர் ஆட்டையும், தீவையும் அரசிடம் ஒப்படைத்ததாகவும், அரசு அத்தீவிற்கு கோட்ஐலாந்து[32] (ஆட்டுத்தீவு) என்று பெயரிட்டதாகவும் இன்னொரு வரலாறு.

இத்தீவைக் காரிலே சுற்றிக் கொண்டு வந்து ஓரிடத்தில் காரை நிறுத்திவிட்டு கையுடன் கொண்டு வந்திருந்த எலுமிச்சைப் பழச்சாதத்தை உண்டு பசியாறினோம் (இப்போது பகல் 1 மணி). அடுத்து **கனடா பக்கமுள்ள நயாகரா அருவியை** அருகில் சென்று பார்க்கின்றோம். அடுத்து இத்தீவை விட்டுவேறு சிலவற்றைப் பார்க்கச் செல்லுகின்றோம்.

**(1) சுழலும் குட்டை**[33]: சுமார் ஒரு கல் தெலைவில் கனடாப் பகுதியிலுள்ள இக்குட்டையைப் பார்க்க அமெரிக்கப் பகுதியிலுள்ள சாலை வழியே செல்லுகின்றோம். வெள்ளம் பெருகியிருக்கும் பகல் காலத்தில் ஒரு பகுதி நீர் பிரிந்து இக்குட்டைக்கு வந்து இடப்பக்கமாகச் சுழன்று கொண்டு வெளிச் சென்று ஆற்றுடன் கலந்து விடுகிறது. இரவு நேரங்களில் ஆற்று நீர் மின் உற்பத்திக்காக எடுத்துச் செல்லப்படும் பொழுது ஆற்றில் வெள்ளம் குறைந்து இக்குட்டைக்கு வந்து இடப்பக்கமாகச்[34] சுழன்று கொண்டு வெளிச்சென்று ஆற்றுடன் கலந்து விடுகிறது. இரவு நேரங்களில் ஆற்றுநீர் மின்உற்பத்திக்காக எடுத்துச் செல்லப்படும் பொழுது ஆற்றில் வெள்ளம் குறைந்து இக்குட்டைக்கு வரும்நீரின் அளவு குறைகின்றது. இப்பொழுது நீர் வலப்பக்கமாகச்[35] சுழன்று ஆற்றில் கலக்கின்றது. இஃது ஓர் அற்புதமான நிகழ்ச்சியாகும்.

---

31. திருவரங்கம் உள்ள தீவு மிகப் பெரியது – கோட்ஐலாந்து மிகச் சிறியது – எளிதில் நடந்தே சுற்றிப் பார்க்கும் நிலையிலுள்ளது.

32. Goat Island 33. Whirl pool 34. Clock wise

35. Anti-clockwise

(2) அடுத்து மின்சார உற்பத்தித் திட்டம்[36] செயற்படும் இடத்தைப் பார்க்க விழைகின்றோம். நயாகரா பல்கலைக் கழகம் அமைந்துள்ள இடத்திற்கு வருகின்றோம். அதிகதூரம் நடக்கமுடியாத என்னையும் என் துணைவியையும் நயாகரா பல்கலைக் கழக வளாகத்தில் காருடன் ஒரு மரத்து நிழலில் இருக்கச் செய்துவிட்டு நீரின்மூலம் மின்உற்பத்தி செய்யும் அமைப்பினை பார்ப்பதற்காக என் மகனும் மருமகளும் பிரிந்து சென்று ஒரு மணி நேரம் கழித்துத் திரும்பி வந்து சேர்ந்தனர்.

**நீர்மின்சார உற்பத்தி யந்திர அமைப்பு:** உலகின் முதன் முதலாக அருவிகள் உள்ள இடத்தில் வாணிக முறையில் 1895-இல் நிறுவப் பெற்றது நயாகரா மின்னாற்றல் திட்டம்[37]. 13 மின்சார இயக்கிகளைக்[38] கொண்டு 1961-இல் தொடங்கப் பெற்றது. இவை 2,190,000 கிலோவாட் உற்பத்தி செய்யக் கூடியவை. உலகிலேயே நீர்மின்சார வசதிகளமைந்த அமைப்புகளில் இதுவும் ஒன்று. ஆயினும், இந்த ஆற்றல் என்றுமே நிலையாக இருக்க முடியாது; அருவிகள் ஆண்டிற்கு ஓர் அங்குலம் வீதம் தேய்ந்து கொண்டே வருகின்றன. எனினும் அடுத்த 2500 ஆண்டுகள் வரை முதன் முதலில் கண்டபோது இருந்த நிலையிலேயே இருக்கும் என்பது உறுதி.

இயந்திர அமைப்பு உள்ள இடத்திற்குச்[39] சென்ற பொழுது, அந்த விக்டோரியா[40] என்ற கட்டடத்தில் இரண்டு தளங்களில் காட்டப் பெற்றிருந்தது. மின்சாரத்தை எப்படி வீணாக்காமல் செலவழிக்கப்படுகிறது என்பது முதல் பல பயன்படும் முறைகள் விளக்கப் பெறுகின்றன. இவற்றை அறிந்த நிலையில் என் மகனும் மருமகளும் எங்களுடன் வந்து சேர்ந்தனர்.

அடுத்து, காரில் சென்று சாலையில் இருந்த வண்ணம் மின்சார உற்பத்தி அமைப்பு இருந்த நிலையைக் கண்டு மகிழ்ந்தோம். அருவிகளை அடையும் முன்னர் 4½ கல் தொலைவில் ஆற்றின் பிரவாகத்திலிருந்து மின்சாரம் எடுக்கப் பெறுகின்றது என்பது நினைவிலிருத்தத் தக்கது.

இத்திட்டம் நியுயார்க்கின் மிகப் பெரிய மின்சார உற்பத்தி வசதியைத்தரும் இடமாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மிகப்பெரிய திட்டங்களில் ஒன்றாகும். இத்திட்டம் நயாகரா ஆற்றின் ஆற்றலை நாட்டின் தெளிவான குறைந்த செலவிலான மின்சாரமாக மாற்றியது வியப்பிற்குரியது. இத்திட்டம் இரண்டு முக்கிய பகுதிகளையுடையது. ஒன்று **(இராபர்ட் மோசஸ் நயாகரா** ஆற்றல் அமைப்பு[41]. இங்கு மின்சாரத்தின் பெரும்பகுதி

---

36. Power Project
37. The Niagara Power Project
38. Generators
39. The Niagara Power Project's POWER VISTA
40. Victorian House
41. Robert Moses Niagara Power Plant

உற்பத்தியாகின்றது. இரண்டு) **லுவிஸ்டன்பம்ப் உற்பத்தி அமைப்பு**[42]. இங்கு நுகர்வோர் தேவை உச்ச கட்டத்தை எட்டும்போது மேலும் அதிகமான ஆற்றலை உண்டாக்குகிறது.

**நயாகரா அருவிகள்-ஆதி வரலாறு:** இந்த அருவிகள் மாபெரும் அகன்ற இராக்கத பனிக்கட்டிப் படலம் பின்னடைவு பெற்று உருகியதால் உண்டானவை. 50,000 ஆண்டுகட்கு முன்னர் பனிக்கட்டி பின்னடைவு பெற்றதால் அதன் பின்புறமாக பூமி தோன்றியது; இது நீண்ட குறுகிய மலைகளாகி உயர்ந்த நயாகரா மலையுச்சிப் பக்கங்களாயின. உருகிய பனிக்கட்டி மிகப் பெரிய ஏரியாயிற்று. அதுதான் இன்று சுற்றுப்புறங்களையும் தாழ்ந்த நிலப்பகுதிகளையும் கொண்ட **ஈரிஏரி**[43] என்று வழங்குகின்றது. இந்த ஏரிதான் 12,000 ஆண்டுகட்கு முன்னர் பெருகி வழிந்து நயாகரா அருவிகளை உண்டாக்கின.

இந்த அருவிகள் வடபுறமாக ஏழு மைல் நீண்டனவாக அமைந்தன; அவை தாம் இன்று **லூவிஸ்டன்** என்ற பெயரால் வழங்கி வருகின்றன. நாளடைவில் தேய்ந்து போனமையால் ஈரி, **ஒண்டாரியோ**[44] என்ற இரு ஏரிகளுக்கிடையில் 37 மைல் நீளமான நீர்சந்தி[45]யாகியது. இது அனைத்துலக எல்லைக் கோட்டால் பிரிக்கப் பெற்றுள்ளது. நயாகரா அருவிகளைக் கொண்ட நியுயார்க் மாநகரும் ஒண்டாரியோ மாநகரும் ஆற்றின் குறுக்கே பாலங்களால் இணைக்கப்பெற்றுள்ளன.

இந்த இயற்கைக் காட்சியை முதன்முதலாக உற்றுநோக்கிக் கண்டவர்கள் செனிகா இந்தியர்களைச் சார்ந்த முன்னோர்கள். அவர்கள்தாம் 2000 ஆண்டுகட்கு முன்னர் இந்தப் பகுதியில் குடியேறியவர்கள். நீண்ட நாட்களுக்குமுன் இந்த அருவிகளை முதன் முதலாக 1678-இல் நோக்கிய ஐரோப்பியர்களில் முதலானவர் ஃபிரெஞ்சு குருமாராகிய **அருள்தந்தை லூயிஸ் கென்னெபின்**[46] என்பார். முதன்முதலாகக் கண்ட அருள்தந்தை தரையில் மண்டியிட்டு வழிபாடு செய்து இந்த அருவிகளைப் பற்றி "இந்த அகிலம் இவை போன்றவற்றிற்கு இணையானவற்றை காணப் போவதில்லை" என்று கூறியதாக வரலாறு குறிப்பிடுகின்றது.

சில ஆண்டுகள் அடுத்து இந்த ஆற்றின் நுழைவாயிலில் பல கோட்டைகளைக் கட்டினர் ஃபிரெஞ்சு மக்கள். இவர்கள் கட்டிய நயாகரா பழங்கோட்டை[47] அடுத்து 90 ஆண்டுகளாக நடைபெற்ற பெரும்போர்களில் முக்கிய பங்குகள் பெற்றது. 1759இல் நடைபெற்ற ஃபிரெஞ்சு-இந்தியப் போரில்

---

42. Lewiston Pump - Generating Plant
43. Lake Erie
44. Ontario
45. Strait
46. Father Louis Hennepin
47. Old Fort Niagara

பிரிட்டிஷார் இந்தக் கோட்டையைக் கைப்பற்றினர். கனடாவிலுள்ள ஜார்ஜ் கோட்டைக்குத் திரும்பப் போகும்வரை (1796 வரை) இக்கோட்டை அவர்கள் வசம் இருந்தது.

1812-இல் நடைபெற்ற போர்தான் நயாகரா அருவிகளை மிக அதிகமாக நாசமாக்கியது. ஆற்றிற்கு இரு பகுதிகளிலும் சிறிய அளவு குடியேற்றங்களில்[48] பெருபான்மை கொள்ளையடிக்கப் பெற்றுஎரியூட்டப் பெற்றன. 1814 சூலை 25-இல் மிகக் கொடுமையான **லூண்டே-லேன்** என்ற கடும்போரையும் இந்த அருவிகள் சந்தித்தன. இந்தக் கடுமையான போரில் இருசாராரும் வெற்றியை உரிமை கொள்ள முடியவில்லை. ஐந்து மாதங்களுக்குப் பிறகு **கெண்ட் ஒப்பந்தத்தால்**[49] 2.5 ஆண்டுகளாக நடைபெற்று வந்த போர் முடிவுக்கு வந்தது; எல்லைக்கோடுகள் திரும்பவும் உறுதி செய்யப் பெற்றன.

போருக்குப் பின்னர் நயாகரா அருவிகள் அமைதியையும் ஆக்க முன்னேற்றத்தையும் கொண்ட புதிய யுகத்தைக் கண்டன. குடியேற்றங்கள் ஆர்வத்துடனும் அக்கறையுடனும் நடைபெற்றன. 1812-இல் நயாகரா அருவிகள் இருந்த இடம் ஒரு நகரமாக உருவாயிற்று. 1820-இல் நீராவிக் கப்பல்களின் வருகையாலும், 1825-இல் ஈரிவாய்க்கால்[50] உருவாக்கப் பெற்றதாலும், 1840-இல் இருப்பூர்திப் பாதை உண்டாக்கப் பெற்றதாலும் இந்த மாநகர் உல்லாசப் பயணிகட்கு எளிதில் எட்டும்படியாக அமைந்துவிட்டது. "தேனிலவுக்காக இங்கு வருவோரின் காதல் இந்த அருவிகள் வாழும் நாட்கள் வரை நீண்டு வாழும்" என்ற பழமொழியும் தோன்றியது.

1800-இலும் 1900-த்தின் தொடக்கத்திலும் எச்சரிக்கையற்றவர்களை இந்த அருவிகள் புதிய காதல் முறையில் ஈடுபடுமாறு ஈர்த்தன. இதில் முதலாவதாக ஈடுபட்டவர் **சாம் பாட்ச்**[51] என்பார். இவர் இருமுறை அருவிகளில் கீழ்மூழ்கி உயிர்தப்பினார். உருண்டை வடிவமான மரத்தாலான அமைப்பினுள் புகுந்து கொண்டு அருவிகளின்மீது முதன்முதலாக 1901-இல் சென்றவர் **அன்னி டெய்லர்**[52] என்பார். **வில்லியம் பிட்ஸ்ஜெரால்டு**[53] என்பார் 1961-இல் துணிவாக அருவிகளில் குதித்துப் பாய்ந்தார். அவர் மேலெழுந்ததும், ஆற்றிலும் அருவிகளிலும் துணிவாக இறங்குவது குற்றம் என்று விதிக்கப்பெற்றதால் சட்டப்படி கைதியாக்கப் பெற்றார்.

இன்று அருவிகள் உல்லாசப் பயணிகளின் ஈர்ப்பு மையங்களாக ஆக்கப் பெற்றுள்ளமையால் எண்ணற்றவர்கள் வந்து போகும் இடங்களாகத் திகழ்கின்றன.

---

48. Small Settlements
49. Treaty of Ghent
50. Erie Canal
51. Sam Patch
52. Annie Taylor
53. William Fitzgerald

# 6. நியுஜெர்ஸி மாநிலத்தில் உள்ளவை

நியுயார்க் நகரில் தங்கியிருந்த போதிலும் அண்டை மாநிலமாகிய நியுஜெர்ஸி மாநிலத்தில் **இரண்டு** முக்கிய இடங்களைப் பார்க்க நேர்ந்தது. அவற்றுள் **ஒன்று** புனிதம் திகழும் தெய்வத்திருக்கோயில்; **மற்றொன்று** 'ஆக்கம் கருதி முதல் இழக்கும்' சூதாடுகளன். இன்று திருக்கோயில்களும் அவரவர் வாழ்க்கை அவரவர் பிராரப்தத்தால் (நுகர்வினையால்) அமைகின்றது என்பதை மறந்து மனிதன் தெய்வங்களை தட்டும் புனிதத்தை பேரம் பேசும் 'வாணிக மன்றமாக' மாற்றிக் கெடுப்பதை வருத்தத்துடன் காண்கின்றோம். நன்றும் தீதும் கலந்தது தானே மானிட வாழ்க்கை அல்லவா ? இந்த இடங்கள் பற்றிய விவரங்களை ஈண்டுத் தருகின்றேன்.

## 1. திருவேங்கடவன் திருக்கோயில்

(ஏப்ரல் 8), மாலை 4.00 மணிக்குப் புறப்பட்டுச் சென்று இரவு 9.30 மணிக்குத் திரும்பினோம். இத்திருக்கோயில் நியுயார்க்குக்கு அருகில் உள்ள நியுஜெர்ஸி மாநிலத்தில் உள்ளது. 40 கல் தொலைவில் உள்ளது. நியுயார்க் மாநிலத்தில் 15 கல் தொலைவும் நியுஜெர்சி மாநிலத்தில் 25 கல் தொலைவும் கடந்து செல்ல வேண்டியிருந்தது. நாங்கள் சென்றபோது மாலைவழிபாடு (சாயரட்சை) நடைபெற்றுக் கொண்டிருந்தது. நாங்கள் தங்குமிடத்தில் 4 கல் தொலைவிலுள்ள திருக்கோயிலில் விநாயகர் பிரதான தேவதைபோல், இங்குப் பிரதான தேவதை **வேங்கடவன்**. திருமலை-திருப்பதி சூழ்நிலை இங்கு நிலவியிருந்தது.

ஒரு வரிசையில் விநாயகர், சிவபெருமான், வள்ளி தெய்வயானையுடன் முருகன், ஐயப்பன், சத்திய நாராயணன் திருவுருவங்கள் அமைந்திருந்தன. இவற்றை விபூதியுடன் சிவ வேடம் தாங்கிய அர்ச்சகர் வழிபாடு நடத்தி வருகின்றார்.

மற்றொரு வரிசையில் சீதேவி, பூதேவி, இலட்சுமி நாராயணன், துர்க்கை, இராதாகிருட்டிணன், ராம்பரிவார்-இராமன், இலக்குவன், சீதை அநுமன் அடங்கிய மூர்த்திகள் அமைந்திருந்தன. இவற்றைத் திருமண் அணிந்திருந்த அர்ச்சகர் வழிபாடு செய்து வருகிறார்.

ஓரிடத்தில் இலட்சுமி-பார்வதி-சரசுவதி மூவருடைய திருவுருவங்களும் சேர்ந்து அமைந்திருந்தன. இது இங்கு தனிச் சிறப்பு. நவக்கிரக அமைப்பு தமிழ்நாட்டு இறக்குமதி. பெரும்பாலும் வைணவத்திருக்கோயில்களில் நவக்கிரக வழிபாட்டிற்கு இடம் இல்லை.

இங்கு தரையெல்லாம் சலவைக் கல் பரப்பப் பெற்றிருந்தது. காலணிகள் வைப்பதற்குத்தனி இடம் அமைக்கப் பெற்றிருந்தது. திருக்கோயிலுக்கு அடியில் (சுரங்கம்) ஒரு பெரிய மண்டபம் இருந்தது. இதில் திருமணங்கள், சிறப்புச் சொற்பொழிவுகள் நடைபெறுவன.

இங்கு திருவேங்கடவன்தான் மூலமுதற் கடவுள். ஏனையவை பரிவார தேவதைகள், முதலில் திருவேங்கடவனை வழிபடுகின்றோம். இங்கு திருமலை சூழ்நிலை நிலவுகின்றது. ஆழ்வார் பாசுரங்கள் நம் மனத்தில் எழத் தொடங்குகின்றன. நம்மாழ்வார் முதலில் காட்சி தருகின்றார்.

அடியேன் மேவி அமர்கின்ற
 அமுதே! இமையோர் அதிபதியே!
கொடியா அடுபுள் உடையானே!
 கோலக் கனிவாய்ப் பெருமானே!
செடியார் வினைகள் தீர்மருந்தே!
 திருவேங் கடத்துஎம் பெருமானே!
கொடியார் பொழுதும் உன்பாத
 காண நோலாது ஆற்றேனே! - 6.10:7

என்ற திருவாய் மொழிப்பாசுரத்தை ஓதி உளங்கரைந்து வழிபடுகின்றோம். அடுத்து கலியன் பிரசன்னமாகின்றான். அப்பெருமான் பாசுரங்கள் நெஞ்சில் குமிழியிடத் தொடங்குகின்றன.

குலந்தான் எத்தனையும்
 பிறந்தேயிறந்து எய்த்தொழிந்தேன்
நலந்தான் ஒன்றுமிலேன்;
 நல்லதோர்அறம் செய்துமிலேன்;
நிலந்தோய் நீள்முகில்சேர்
 நெறியார்திரு வேங்கடவா!
அலந்தேன் வந்தடைந்தேன்;
 அடியேனை ஆட்கொண்டருளே

நோற்றேன் பல்பிறவி
 நுன்னைக்காண்பதோர் ஆசையினால்
ஏற்றேன் இப்பிறப்பே
 இடருற்றனன் எம்பெருமான்!
கோல்தேன் பாய்ந்தொழுகும்
 குளிர்சோலைசூழ் வேங்கடவா!

*ஆற்றேன் வந்தடைந்தேன்;*
*அடியேனை ஆட்கொண்டருளே*
*- பெரி. திரு. 1.9:4,8*

என்ற பாசுரங்களை மிடற்றொலியால் சேவித்து அப்பெருமானையும் வணங்குகின்றோம்.

அடுத்து **தும்பிக்கையான்** சந்திக்கு வருகின்றோம். வள்ளல் பெருமான் நம் நெஞ்சில் எழுந்தருள்கின்றார்.

*உள்ளமும் உயிரும் உணர்ச்சியும் உடம்பும்*
*உறுபொருள் யாவும்நின் தனக்கே*
*கள்ளமும் கரிசும் நினைந்திடா துதவிக்*
*கழல்இணை நினைந்துநின் கருணை*
*வெள்ளம்உண்டு இரவு பகல்அறி யாத*
*வீட்டினுள் இருந்துநின் னோடும்*
*விள்ளல்இல் லாமல் கலப்பனோ சித்தி*
*விநாயக விக்கினேச் சுரனே*

*நாதமும் கடந்து நிறைந்துநின் மயமே*
*நான்என அறிந்துநான் தானாம்*
*பேதமும் கடந்த மௌனராச் சியத்தைப்*
*பேதையேன் பிடிப்பதெந் நாளோ*
*ஏதமும் சமய வாதமும் விடுத்தோர்*
*இதயமும் ஏழையேன் சிரமும்*
*வேதமும் தாங்கும் பாதனே சித்தி*
*விநாயக விக்கினேச் சுரனே*
*- திருவருட்பா மூன்றாம் திருமுறை*
*- சித்தி விநாயகர் பதிகம் 4,5*

என்றப் பாடல்களை ஓதி உளங்கரைந்து வள்ளலார் அடைந்த நிலையை அடைய முயல்கின்றோம்.

அடுத்து சீதேவி (திருமகள்) சந்நிதிக்கு வருகின்றோம்.

*மலரின் மேவு திருவே! - உன்மேல்*
*மையல் பொங்கி நின்றேன்;*
*நிலவு செய்யும் முகமும் - காண்பார்*
*நினைவழிக்கும் விழியும்*

**கலக லென்ற மொழியும் - தெய்வக்**
**களிது லங்கு நகையும்**
**இலகு செல்வ வடிவும் - கண்டுன்**
**இன்பம் வேண்டு கின்றேன்**
**- பாரதியார் கவிதைகள் - தோ.பா. திருவேட்கை.1**

என்ற பாரதியாரின் பாடலைப் பாடி வணங்குகின்றோம். அடுத்து பொறுமைக்கு இலக்கணமாகத் இலங்கும் பூதேவியை வணங்கி மகிழ்கின்றோம்.

பின்னர் சிவபெருமான் சந்நிதிக்கு வருகின்றோம். வள்ளல் பெருமான் கை கொடுத்து உதவுகின்றார்.

*சாகாத வரம்எனக்கே தந்ததனித் தெய்வம்*
*சன்மார்க்க சபையில் எனைத் தனிக்கவைத்த தெய்வம்*
*மாகாத லால்எனக்கு வாய்த்தஒரு தெய்வம்*
*மாதவரா தியர்எல்லாம் வாழ்த்துகின்ற தெய்வம்*
*ஏகாத நிலைஅதன்மேல் எனைஏற்றும் தெய்வம்*
*எண்ணுதொறும் என்னுளத்தே இனிக்கின்ற தெய்வம்*
*தேகாதி உலகமெலாம் செயப்பணித்த தெய்வம்*
*சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்*
**- திருவருட்பா - ஆறாம் திருமுறை - பரசிவ நிலை.7**

என்ற பாடலை ஓதி உளங் கரைகின்றோம்.

அடுத்து முருகன் தெய்வயானை வள்ளி சமேதராக எழுந்தருளியிருக்கும் சந்நிதிக்கு வருகின்றோம். அப்பெருமானை,

*மூவிரு முகங்கள் போற்றி*
*முகம்மொழி கருணை போற்றி*
*ஏவரும் துதிக்க நின்ற*
*ஈராறுதோள் போற்றி காஞ்சி*
*மாவடி வைகுஞ் செவ்வேள்*
*மலரடி போற்றி யன்னான்*
*சேவலும் மயிலும் போற்றி*
*திருக்கைவேல் போற்றி போற்றி*

என்ற கந்தபுராணப் பாடலால் அவனை வாழ்த்தி வணங்குகின்றோம். பின்னர் துர்க்கை சந்நிதிக்கு வருகின்றோம். அச்சக்தி பெருமாட்டியை,

பின்னோர் இரவினிலே-கரும்
 பெண்மை யழகொன்று வந்தது கண்முன்பு;
கன்னி வடிவ மென்றே-களி
 கண்டு சற்றேயரு கிற்சென்று பார்க்கையில்
அன்னை வடிவமடா!-இவள்
 ஆதி பராசக்தி தேவியடா!-இவள்
இன்னருள் வேண்டுமடா!-பின்னர்
 யாவும் உலகில் வசப்பட்டு போமடா!

- பா.க. தோ.பா. மூன்றுகாதல் (மூன்றாவது)

என்ற பாடலால் வாழ்த்தி வணங்குகின்றோம்.

இதனை நிறைவு செய்து கொண்டு இராமர் சந்நிதிக்கு வருகின்றோம். குலசேகரப் பெருமாளின் இராமர் சரிதம் நினைவிற்கு வருகின்றது.

அங்கண்நெடு மதிபுடைசூழ் அயோத்தி என்னும்
 அணிநகரத்து உலகுஅனைத்தும் விளக்கும் சோதி
வெங்கதிரோன் குலத்துக்கு ஓர்விளக்காய்த் தோன்றி
 விண்முழுதும் உயக்கொண்ட வீரன் தன்னைச்
செங்கண்நெடுங் கருமுகிலை இராமன் தன்னைத்
 தில்லைநகர் திருச்சித்திர கூடந் தன்னுள்
எங்கள்தனி முதல்வனை எம்பெருமான் தன்னை
 என்றுகொலோ கண்குளிர காணு நாளே

- பெரு. திரு. 10:1

என்ற பாசுரத்தை மிடற்றொலியால் சேவித்து சக்கரவர்த்தித் திருமகனை வழிபடுகின்றோம்.

அடுத்து இராதாகிருட்டிணன் சந்நிதிக்கு வருகின்றோம். திருக்கண்ணமங்கை திவ்வியதேசம்பற்றிய பாசுரம் ஒன்று நினைவில் எழுகின்றது.

எங்களுக்கு அருள்செய்கின்ற ஈசனை
 வாசலார் குழலாள் மலைமங்கைதன்
பங்கனை பங்கில் வைத்து உகந்தான் தன்னைப்
 பான்மை யைபணி மாமதி யம்தவழ்
மங்கு லைசுட ரைவட மாலை
 உச்சி யைநச்சி நாம்வணங் கப்படும்

*கங்குலை பகலை சென்று நாடிக்*
*கணமங்கையுள் கண்டுகொண் டேனே*
*- பெரி. திரு. 7.10:3*

என்ற பாசுரத்தைச் சேவிக்கின்றோம்.

அடுத்து, இலட்சுமி நாராயணன் சந்நிதிக்கு வருகின்றோம். திருமங்கை மன்னனின் திருஇடஎந்தை திருத்தலத்தின் பாசுரங்கள் நினைவிற்கு வருகின்றன. அவற்றுள்,

***உளங்கனிந்து இருக்கும் உன்னையே பிதற்றும்;***
***உனக்கன்றி எனக்கன்பு ஒன்றுஇலாஎல்***
***'வளங்கனி பொழில்சூழ் மாலிருஞ் சோலை***
***மாயனே!' என்றுவாய் வெருவும்;***
***களங்கனி முறுவல் காரிகை, பெரிது***
***கவலையோ டவலஞ்சேர்ந் திருந்த***
***இளங்கனி இவளுக்கு என்நினைந் திருந்தாய்?***
***இடவெந்தை எந்தை பிரானே!***
***- பெரி-திரு. 2.7:7***

என்ற பாசுரத்தை ஓதி உளங்கரைகின்றோம். இப்பதிகம் **'தாய்ப் பாசுரமாக'**[1] நடைபெறுகின்றது.

அடுத்து அநுமன் சந்நிதிக்கு வருகின்றோம். இந்தச் சிறிய திருவடி ஆற்றிய செயல்கள் அனைத்தும் சிறந்தவை. அவனைப்பற்றி கம்பன் அருளிய

*அஞ்சிலே ஒன்று பெற்றான்*
*அஞ்சிலே ஒன்றைத் தாவி*
*அஞ்சிலே ஒன்றுஆ றாக*
*ஆரியற் காக ஏகி*
*அஞ்சிலே ஒன்று பெற்ற*
*அணங்குகண்டு அயலார் ஊரில்*
*அஞ்சிலே ஒன்றை வைத்தான்*
*அவன்எமை அளித்துக் காப்பான்*
***- கம்பரா. பாலகா. காப்பு அநுமன்துதி***

என்ற பாடலை மிடற்றொலியால் நவிற்றி வழிபடுகின்றோம்.

---

1. தாய்ப்பாசுரம் – தன்மகள் நிலையாத் தாய் எடுத்துக் கூறுவதாக அமைந்து

தொடர்ந்து சத்திய நாராயணன், ஐயப்பன் ஆகியோரின் சந்நிதிக்கு ஏகி அவர்களை வழிபட்டு 'ஒன்பது கோள்கள்' சந்நிதிக்கு வருகின்றோம். சம்பந்தப் பெருமானின் கோளறுதிகத்தின் (2.85)

*என்பொடு கொம்பொ டாமை இவைமார்*
*பிலங்க எருதேறி ஏழையுடனே*
*பொன்பொதி மத்தமாலை புனல்சூடிவந் தெமது*
*உளமே புகுந்த அதனால்*
*ஒன்பதோ டொன்றோ டேழு பதினெட்டொறாறு*
*முடனாய நாள்க ளவைதாம்*
*அன்பொடு நல்ல நல்ல அவைநல்ல*
*அடியா ரவர்க்கு மிகவே (2)*

என்ற இரண்டாவது பாடலை மட்டும் ஓதி கோள்களை வழிபட்டுத் திரும்பும்போது ஓரிடத்தில் 'இலட்சுமி-பார்வதி-சரசுவதி' என்ற மூன்று தேவிமார்களின் ஒன்றுபட்ட காட்சி நம்மை வியக்கவைக்கின்றது. மும்மூர்த்திகளின் தேவிமார்களுக்கு தமிழகத்தில் தனிசந்நிதி இல்லை. **மும்மூர்த்திகள்** என்ற சொல்வழக்கு தமிழகத்தில் உள்ளது. **'மும்மூர்த்திகளின் தேவிமார்கள்'** என்ற வழக்கு அங்கில்லை. இதனை அமெரிக்கவாழ் தமிழ் மக்கள் ஏற்படுத்திச் சிறப்பித்தமைக்கு தமிழ் மக்கள் நன்றியுடன் போற்றக் கடமைப்பட்டுள்ளனர். இத்துடன் இத்திருக்கோயில் பயணம் நிறைவு பெறுகின்றது.

## 2. அட்லாண்டிக் மாநகர்[1] சூதாடுகளன்

ஏப்ரல் 26 அன்று காலை சிற்றுண்டியை முடித்துக்கொண்டு பகலுணவுக்காக புளியோதரை, தயிர்ச்சாதம் பொட்டலங்களுடன் முற்பகல் 11.30 மணிக்குப் புறப்பட்டோம். இது நியுஜெர்சி மாநிலத்தில் (அண்டை மாநிலம்) 120 கல் தொலைவில் உள்ளது. அட்லாண்டிக் மாக்கடல் கரையில் உள்ளது. நியுயார்க்கில் 15 மைல் தொலைவும், நியு ஜெர்சியில் 105 கல் தொலைவும் கடந்து செல்ல வேண்டும். 15 கல் தொலைவு நகருக்குள் செல்ல வேண்டியிருப்பதால் கார் வேகமாகச் செல்ல முடிவதில்லை; இதற்கு ஒரு மணி நேரம் ஆயிற்று. அதற்கு மேலுள்ள பகுதியில் கார் மணிக்கு 65 கல் வீதம் செல்லலாம்; பிற்பகல் 3 மணிக்கு அந்த இடத்தை அடைந்துவிட்டோம். போகும் போது நியுயார்க்கையும் நியுஜெர்ஸியையும் இணைக்கும் சுரங்கப்பாதை வழியாகச் (சுமார் 2 கல் தொலைவு) சென்றோம். (படம் - 34)

1. Atlantic City: இது ஒரு சூதாட்டக்களன். இதனைவிடப் பெரிய மற்றொரு சூதாட்ட ஆடுகளன் லாஸ் வேகாஸ் (Lasvagas) என்ற இடத்தில் நெவேடா (Neveda) மாநிலத்தில் உள்ளது.

25 கல் தொலைவு வழியில் உணவு கொள்ளவும் காருக்கு எண்ணெய் ஊற்றிக் கொள்ளவும் இடங்கள் உள்ளன. பணம் கொடுத்து உண்ணலாம்; ஒப்பனை அறைகளும்[2] உள்ளன. பிற்பகல் 2.00 மணிக்கு இத்தகைய ஓரிடத்தில் தங்கி உணவுகளை கொண்டோம். சாலை வசதிகளைப் பராமரிப்பதற்குக் கட்டணம் வாங்கினர். ஒருகல் தொலைவுக்கு 8 சென்ட் வீதம் கணக்கிடுகின்றனர். நான்கு ஐந்து இடங்களில் ஐந்துடாலர் வீதம் கட்டணம் செலுத்த நேர்ந்தது. அந்த இடங்களுக்கு நடுவேகார் செல்லும்போது காரிலுள்ள மின் அமைப்பு (E.Z Pass) ஒன்றில் கட்டணம் தண்டப்பெற்றதாகக் குறியிட்டுவிடும்[3]

கார் நிறுத்துமிடத்திற்கு ஒருமணி நேரத்திற்கு 2 டாலர். அதைச் செலுத்திக் காரை ஓர் இடத்தில் நிறுத்திவிட்டு பல இடங்களைத் தவிர்த்துக் கொண்டு **தாஜ்மகால்** என்ற பெயரில் அமைந்துள்ள சூதாடுகளத்திற்குச்[4] சென்றோம். இந்த இடங்கள் முழுவதும் சூதாடுகளங்கள் நிறைந்தவை. **ஆறுகல் தொலைவுள்ள** இந்த ஆடுகலன்கள் அமைப்பு 1870 லிலேயே ஏற்படுத்தப் பெற்றது. இரவு பகல் எல்லாம் எல்லா நாட்களிலும் ஆயிரக் கணக்கான ஆடுகளன்களில் பல்லாயிரக்கணக்கானவர்கள் ஆடிய வண்ணம் இருப்பதைக் காண்கின்றோம். குருட்சேத்திரப் போர்க்களம் என்று ஒன்று புராணக்காலத்தில் இருந்தது போல் அட்லாண்டிக் பெருநகர் முழுவதும் ஆடுகளன்கள் நிறைந்தனவாகவே உள்ளது. இதனை **'அட்லாண்டிக் பெருநகர்'** என்று சொல்லுவதைவிட **'மிகப்பெரிய அட்லாண்டிக் பெருநகர்'** என்று வழங்குவது மிகவும் பொருந்தும். (படம் - 35)

வில்லிபாரதத்திலும், பாரதியின் பாஞ்சாலிசபதத்திலும் சூதாடு களத்தைப்பற்றிப் படித்துள்ளோம். அங்கெல்லாம் இருவர் ஆடுவதைப் பற்றிப் பார்க்கின்றோம். சூதாடுவதில் நிபுணனாகச் சகுனியைக் காண்கின்றோம். இங்கு அப்படி இல்லை. ஆனால், பொறி அமைப்புகளை ஆட்களாகக் கருதினால் அவை யாவும் பல்வேறு சகுனி நிலைகளை அடைகின்றன!

இங்குப் பல்வேறுவகை ஆடுகளன்கள் உள்ளன; நாணயங்கள் போட்டு ஆடப்பெறுவன, விளையாட்டுச் சீட்டுகள்[5] வைத்து ஆடப்பெறுவன போன்றவை. நாணயங்கள் போட்டு ஆடப்பெறும் களம் ஒன்றை நோக்குவோம். 25 சென்ட், 50 சென்ட், ஒரு டாலர், ஐந்து டாலர் போட்டு விளையாடும்

---

2. Toilets

3. இஃது ஒரு கம்பெனிக்குச் சொந்தமானது. கம்பெனி நமது Credit Cardக்கு அனுப்பும். Credit Cardலிருந்து நமக்கு Bill வரும். அதற்கு நாம் காசோலை அனுப்ப வேண்டும். E-Z Pass என்பது ஒரு கம்பெனியின் பெயர்.

4. Casino

5. Playing Cards

முறைகள் இருந்தன. 25 சென்ட் போட்டு ஆடும் களத்தை நோக்குவோம். இதன் முன்னிலையில் 2500, 2000, 1500, 1000, 500, 200 ........... என்ற வரிசைகளும்; 1000, 500, 200, 50....... என்ற வரிசைகளும் காட்டப் பெற்றுள்ளன. 25 சென்ட் போட்டு விளையாடும்போது எதுவேனும் விழலாம். சிலர் போட்டு விளையாடும் போது பலமுறைகளில் 2, 5, 20, 40 என்று விழுந்தன. சிலசமயம் ஒன்று கூட விழுவதில்லை. போட்டுக் கொண்டே இருக்க வேண்டியதுதான். 2500 விழும் என்ற ஆசையால் போட்டுக் கொண்டே இருக்க வேண்டியது தான் ஆசை எவரையும்விட்டு வைப்பதில்லை.

> ஆக்கம் கருதி முதல்இழக்கும் செய்வினை
> ஊக்கார் அறிவுடை யார்[6]

என்ற குறள் எச்சரிக்கை செய்த போதிலும் ஆசையே மீதூர்ந்து நிற்கும். சிலர் 20 டாலர்கள் வரை போட்டு 5 டாலர்கள் கிடைத்ததையும், சிலர் ஒன்றும் கிடைக்காததையும் கண்டோம். ஒரு டாலர், 5 டாலர் வைத்து விளையாடுபவர்கட்கு இழப்பு அதிகமாக இருக்கும்; சிலசமயம் வரவும் இருப்பதுண்டு. விளையாடும் சீட்டுகள் வைத்து விளையாடும் முறைகளை நாங்கள் பார்க்கவில்லை. இரண்டுமூன்று நாட்கள் தங்கினால் அனைத்தையும் பார்க்கலாம். சிலவாரங்கள் தங்கிப்பார்த்தால் அனைத்து ஆடுகளன்களையும் பார்க்க வசதியாக இருக்கும். இரவில் விளக்குகள் போடப்பெறுவதால் ஆடுகளக் காட்சிகள் பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கும்.

தங்குவதற்கு ஒவ்வொரு ஆடுகளத்திலும் தங்கும் அறைகள், நாட்டியம் ஆடும் இடங்கள், குடி போன்ற கேளிக்கைகளைக் காணும் வாய்ப்புகள் இருக்கும். அலுவலுக்குப் போகும் இளைஞர்கள் வாரம் ஒரு முறை, இரு முறை சென்று கலந்து கொள்வதைப் பார்க்கலாம். ஓய்வு பெற்ற ஓய்வு ஊதியம் பெற்றுவரும் முதியோர்கள்தாம் (இவர்கட்குக் குடும்பம் என்று ஒன்று இராததால்) அதிகமாக இந்தச் சூதாட்டத்தில் பங்கு பெறுகின்றனர். அட்லாண்டிக் மாக்கடல் கரையோரத்தில் இந்த ஆடுகளன்கள் அமைந்திருப்பதாலும் ஆடுகளன்களில் புறம்பே கடற்கரையையொட்டி பலகைகளான தளம் அமைக்கப் பெற்றிருப்பதால் பலர் நடந்து கொண்டு கடல் அழகையும் ஆடுகளன் அமைக்கப்பெற்ற அழகையும் கண்டுகளிப்பதைக் கண்டு மகிழலாம்.

ஆடுகளன்களினின்றும் திரும்பும்போது வேறு வழியில் திரும்பினோம். திரும்பும்போது பிற்பகல் மணி 5.30. நியுஜெர்சியிலிருந்து ஒரு பாலம் வழியாக[7]

6. குறள் – 463(தெரிந்து செயல்வகை)
7. Outer Bridge.

ஸ்டேட்டன் தீவுக்கு[8] வந்தோம். இந்தத் தீவையும் புரூக்லினையும்[9] இணைப்பது **வெரசோனா** என்ற அழகிய பாலம். இஃது ஓர் தொங்குபாலம் (கொல்கத்தா அருகிலுள்ள தொங்குபாலம் போல). கொல்கத்தா பாலத்தின் கீழே கப்பல்கள் போவது போல இந்த **வெரசோனா** பாலத்தின் கீழும் கப்பல்கள் செல்லுகின்றன. இந்தப் பாலத்தின் கட்டமைப்பு முறை, விளக்கு வசதிகள் அமைக்கப் பெற்றிருக்கும் முறை முதலியவை பார்ப்போர் கண்ணையும் கருத்தையும் கவரவல்லனவாக உள்ளன.

பாலத்தைக் கடந்து புரூக்லின் வரும்போது இரவுநேரம். அன்று சித்திர பௌர்ணமியாதலால் ஒருபுறம் மாலைக்கதிரவன் மறையும் காட்சியும் அதற்கு எதிர்ப்புறம் திங்கள் எழும் அழகிய காட்சியும் கண்ணுக்கு விருந்தாக இருந்தன. அங்கிருந்து குயின்ஸ்பரோ நுழையும்பொழுது மான்காட்டனிலுள்ள எம்பயர் ஸ்டேட் கட்டடம், இடிபாடுகளுடன் இருந்த வர்த்தக மையத்தின் அருகேயுள்ள பல உயர்ந்த கட்டடங்கள் சுதந்திர தேவியின் சிலை முதலியவை நம் கண்ணுக்குப் புலனாயின.

புரூக்லினிருந்து நாம்வதியும் குயின்ஸ்பரோவை அடைந்து இரவு 8.30 மணிக்கு இல்லத்தை அடைந்தோம். இந்த அட்லாண்டிக் மாநகர் பயணம் பல்வேறு வகைகளில் மகிழ்ச்சியை நல்கி மனநிறைவு அளிப்பதாக அமைந்தது.

8. நியுயார்க்கின் ஒருபரோ. 9. நியுயார்க்கின் மற்றொரு பரோ.

# 7. டெக்சாஸ் மாநிலத்தில் உள்ளவை

*என் அமெரிக்கப் பயணத்தில் டெக்ஸாஸ் மாநிலத்தில் உள்ள டாலஸ் பகுதியில் வாழும்* ***என் பேத்தி மிருணாளினி*** *இல்லத்தில் மேமாதம் 14-22 நாட்கள் தங்கி இருந்தோம். அங்கிருந்து பார்த்தனவற்றை ஈண்டுப் பதிவு செய்கின்றேன்.*

## 1. திருக்கோயில்கள்

*இங்கு பார்த்த* ***இரண்டும்*** *வடநாட்டுப் பாணியில் அமைந்தவை.*

***1. ஏக்தா மந்திர்[1]:*** *வடநாட்டுப் பாணியில் அமைந்த திருக்கோயில் ஒன்றிற்கு மே மாதம் 16, வியாழன் முற்பகல் 10.30 மணிக்குப் புறப்பட்டுச் சென்றோம்[2]. இத்திருக்கோவில் எங்கள் இல்லத்திலிருந்து சுமார் 15 கல் தொலைவிலிருந்தது. திருக்கோயிலின் அகப்புறச் சூழ்நிலைகள் அற்புதமாக அமைந்திருந்தன[3]. இங்கு விட்டல்-உருக்குமினி, குழலூதும் கண்ணன்-இராதை, சிரீநாத், விநாயகர், மகாலட்சுமி, பாலாஜி (திருவேங்கடவன்), முருகன்-வள்ளி தெய்வயானையுடன், ஐய்யப்பன், இராமர்-சீதை-இலக்குமணர். அநுமன் இவர்கள் சேர்ந்த நிலை ஆகியவற்றைக் கண்டோம். நல்ல பட்டாடைகளாலும், தங்க ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றிருந்தன.*

*முதலில் விநாயகப் பெருமானின் சந்நிதிக்கு வருகின்றோம். அப்பெருமானை, (படம் - 36, 37, 38)*

*மேன்மைப் படுவாய் மனமே! கேள்*
*விண்ணின் இடிமுன் விழுந்தாலும்,*
*பான்மை தவறி நடுங்காதே;*
*பயத்தால் ஏதும் பயனில்லை;*
*யான்முன் உரைத்தேன் கோடிமுறை;*
*இன்னும் கோடி முறைசொல்வேன்;*
*ஆன்மா வான கணபதியின்*
*அருளுண்டு; அச்சம் இல்லையே*

***- பாரதியார் வி.நா. மாலை.23***

*என்ற பாரதியின் வாக்கால் வணங்குகின்றோம்.*

---

1. Ekta Mandir 2. நான் என்மனைவி, அரவிந்தன், என் இரண்டாவது பேத்தி அனுபமா

3. கோயில் திறந்திருக்கும் நேரங்கள்: திங்கள் முதல் வெள்ளி வரை. முற்பகல் 9.30 முதல் 12.30 வரை. மாலை 5.30 முதல் 8.30 வரை; சனி; ஞாயிறு; காலை 9.30 முதல் இரவு 8.30 வரை.

அடுத்து, குழலூதும் கண்ணன் இராதை சந்நிதிக்கு வருகின்றோம். ஆழ்வார்கள்போல் கண்ணன்மீது ஆராக் காதல் கொண்டுள்ளோம். பாரதியார் **'கண்ணம்மா-என் காதலி'** பாடல்கள் நினைவிற்கு வருகின்றன.

*"நெரித்த திரைக்கடலில் நின்முகம் கண்டேன்;*
*நீல விசும்பினிடை நின்முகம் கண்டேன்*
*திரித்த நுரையினிடை நின்முகம் கண்டேன்;*
*சின்னக் குமிழிகளில் நின்முகம் கண்டேன்;*
*பிரித்துப் பிரித்து நிதம் மேகம் அளந்தே*
*பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன் றில்லை;*
*சிரித்த முகத்திலுன் கைவி லக்கியே*
*திருமித் தழுவியதில் நின்முகம் கண்டேன்.*

**- பாரதியார்-கண்ணம்மா என் காதலி. 2**

என்ற பாடலை ஓதி உளங்கரைகின்றோம்.

இந்த நிலையில் சிரீநாத் சந்நிதிக்கு வருகின்றோம். இவன் பெயரைக் கண்டதும் சிரீநாதன்-இலக்குமி நாதன்-திருவாழ் மார்பன் என்ற பெயர்கள் எல்லாம் நினைவிற்கு வருகின்றன.

*வருவார் செல்வார் வண்பரி*
*சாரத்து இருந்தஎன்*
*திருவாழ் மார்வற்கு என்திறம்*
*சொல்லார்; செய்வதுஎன்?*
*உருவார் சக்கரம் சங்குசுமந்(து)*
*இங்கு உம்மோடு*
*ஒருபாடு உழல்வான் ஓர்அடி*
*யானும் உளன்என்றே?*

*- திருவாய் 8.3:7*

என்ற பாசுரத்தை ஓதி உளங்கரைகின்றோம்.

அடுத்து விட்டல்-உருக்குமினி சந்நிதிக்கு வருகின்றோம். ஏதோ திருமங்கை ஆழ்வார் பாசுரம் ஒன்று நினைவில் எழுகின்றது.

*மௌவல் குழலாச்சி மென்தோள் நயந்து*
*மகரஞ் சுழலச் சுழல்நீர் பயந்த*
*தெய்வத் திருமாமலர் மங்கை தங்கு*
*திருமார் பனைச்சிந்தை யுள்வைத்தும் என்பீர்*

*கௌவைக் களிற்றின் மருப்பும் பொருப்பில்*
*கமழ்சந்தும் உந்தி நிவாவ லங்கொள்*
*செய்வப் புனல்சூழ்ந் தழகாய தில்லைத்*
*திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே*
*- பெரி-திரு. 3.2:7*

என்பது அப்பாசுரம். இதனைச் சேவித்து இதன் மூலம் விட்டலையும் வணங்குகின்றோம்.

இந்த நிலையில் மகாலட்சுமி சந்நிதிக்கு வருகின்றோம். பாரதியார் 'மூன்று காதல்' பாடல்களில்[2] இரண்டாவது இலட்சுமி காதல் பாடல் நினைவில் எழுகின்றது.

*இந்த நிலையினிலே-அங்கோர்*
*இன்பப் பொழிலி னிடையில வேறொரு*
*சுந்தரி வந்து நின்றாள்-அவள்*
*சோதி முகத்தின் அழகினைக் கண்டென்ற*
*சிந்தை திரைகொடுத்தேன்-அவள்*
*செந்திரு என்று பெயர்சொல்லினாள்; மற்றும்*
*அந்தத் தினமுதலா-நெஞ்சம்*
*ஆரத் தழுவிட வேண்டுகின்றேன், அம்மா! (5)*

என்ற பாடலைப் பாடி அப்பெருமாட்டியை-புருஷகாத பூதை எனப்படும் பெரிய பிராட்டியாரை வணங்குகின்றோம்.

அடுத்து என் இதய கமலத்தில் நிரந்தரக் குடியிருப்பைப் பெற்றிருக்கும் பாலாஜி சந்நிதிக்கு வருகின்றோம்.

*நோற்றேன் பல்பிறவி*
*நுன்னைக் காண்பதோர் ஆசையினால்*
*ஏற்றேன் இப்பிறப்பே*
*இடருற்றனன் எம்பெருமான்!*
*கோற்றேன் பாய்ந்தொழுகும்*
*குளிர்சோலைசூழ் வேங்கடவா!*
*ஆற்றேன் வந்தடைந்தேன்;*
*அடியேனையாட் கொண்டருளே*
*- பெரி. திரு. 1.9:8*

என்று மங்கை மன்னனின் பாசுரத்தால் சேவிக்கின்றோம்.

---

1. திருவண் பரிசாரம் – மலை நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று; நாகர்கோயிலுக்கு அருகில் உள்ளது. இவ்வூர் நம்மாழ்வாரின் தாயைப் பெற்றப் பாட்டியார் ஊர்.
2. மா.க.தோ.பா. மூன்று காதல்.

இங்ஙனம் சேவித்த நிலையில் வள்ளி தெய்வயானையுடன் எழுந்தருளியிருக்கும் முருகன் சந்நிதிக்கு வருகின்றோம்.

> தேவர்கள் தேவே யோலம்;
> சிறந்தசிற் பரனே யோலம்;
> மேவலர்க் கிடியே யோலம்;
> வேற்படை விமலா வோலம்
> பாவலர்க் கெளியாய் ஓலம்;
> பன்னிரு புயத்தாய் ஓலம்;
> மூவரு மாகி நின்ற
> மூர்த்தியே ஓலம் ஓலம். **- கந்தபுராணம்**

என்ற பாடலை மிடற்றொலி கொண்டு ஓதி அப்பெருமானைச் சரண்புகுகின்றோம்.

இந்நிலையில் இராமர்-சீதை-இலக்குவன் எழுந்தருளியிருக்கும் சந்நிதிக்கு வருகின்றோம்.

> மண்ணாளா நின்றவர்தம் வாழ்வு வேண்டேன்;
> மற்றவர்போல் பற்றடைந்து மாள வேண்டேன்;
> விண்ணாளா நின்றஒரு மேன்மை வேண்டேன்;
> வித்தகத்தின் திருவருளே வேண்டி நின்றேன்;
> புண்ணாளா நின்றமன முடையேன் செய்த
> பொய்அனைத்தும் திருவுளத்தே பொறுப்பாய் அன்றி
> கண்ணாளா சுடர்க்கமல கண்ணா என்னைக்
> கைவிடில்என் செய்வேனே கடைய னேனே
> **- திருவருட்பா இரண். திருமுறை.**
> **இராம நாமப் பதிகம்**

என்ற பாடலை மனமுருகிப் பாடி வழிபடுகின்றோம்.

அடுத்து இராமதூதன் அநுமன் சந்நிதிக்கு வருகின்றோம். அந்தச் சிறிய திருவடியை,

> அஞ்சிலே ஒன்று பெற்றான்
> அஞ்சிலே ஒன்றைத் தாவி
> அஞ்சிலே ஒன்றுஆ றாக
> ஆரியற் காக ஏகி
> அஞ்சிலே ஒன்று பெற்ற
> அணங்குகண்டு அயலார் ஊரில்

*அஞ்சிலே ஒன்றை வைத்தான்*
*அவன்எமை அளித்துக் காப்பான்*
**- கம்பரா. பாலகா. காப்பு அநுமன்துதி**

என்ற கம்பன் வாக்கால் ஓதி உளம்கரைகின்றோம்.

இறுதியாக ஐயப்பன் சந்நிதிக்கு வருகின்றோம். இவனை 'சாமியே சரணம் ஐயப்பா' என்று மூன்று தரம் சொல்லி வணங்கிவிட்டு வீடு திரும்பும்போது, வெளியில் நவக்கிரக சந்நிதி இருப்பதைக் கண்ணுறுகின்றோம். அவர்களையும் 'கோளாறு பதிகம்' (சம்பந்தர்) நினைவுடன் வணங்கிவிட்டு இல்லம் திரும்புகின்றோம் - பகல் ஒரு மணிக்கு.

**2. சிரீ சுவாமி நாராயண மந்திர்[1]:** மே 17, வெள்ளி முற்பகல் சுமார் 10.30 மணி ஐந்து கல் தொலைவிலுள்ள திருக்கோயிலுக்குப் புறப்பட்டோம்[2]. அரை மணி நேரத்தில் திருக்கோயிலை வந்தடைந்தோம். நுழைவாயில் தெரியாமல் சுற்றிச் சுற்றி வந்தோம். எல்லாப் பக்கங்களிலும் கதவு மூடிய நிலையில் இருந்தது. இறுதியாக மாடிமேல் உள்ள ஒரு நுழைவாயிலை அடைந்து திறக்கவே கதவு திறந்தது. உள்ளே விநாயகர், கண்ணபிரான், நாராயணன், குருமார்கள், அநுமன் ஆகியோர் திருமேனிகள் இருப்பதைக் காண்கின்றோம்[3].

முதலில் விநாயகர் சந்நிதிக்கு வருகின்றோம். அப்பெருமானை,

*பெரும்பொருட் கிடனாம் பிரணவ வடிவில்*
*பிறங்கிய ஒருதனிப் பொருளே*
*அரும்பொருள் ஆகிமறைமுடிக் கண்ணே*
*அமர்ந்தபேர் ஆனந்த நிறைவே*
*தரும்பர போக சித்தியும் சுத்த*
*தருமமும் முத்தியும் சார்ந்து*
*விரும்பினோர்க் களிக்கும் வள்ளலே சித்தி*
*விநாயக விக்கினேச் சுரனே*
**- மூன். திருமுறை. சித்திவிநா. பதிகம்.12**

என்ற வள்ளற் பெருமான் வாக்கால் வணங்குகின்றோம்.

அடுத்து, கண்ணன் சந்நிதிக்கு வருகின்றோம். அப்பெருமானை,

1. Sri Swami Narayana Mandir
2. நான், என் துணைவி, அரவிந்தன், இரண்டாவது பேத்தி, அனுபமா.
3. இத்திருக்கோயிலில் ஞாயிறுதோறும் பசனையும் ஆண்டுதோறும் விழாக்களும் நடைபெறுமாம்.

*எளியனேன் யான்எனலை எப்போது*
*போக்கிடுவாய், இறைவ னே! இவ்*
*வளியிலே பறவையிலே மரத்தினிலே*
*முகிலினிலே, வரம்பில் வான*
*வெளியிலே கடலிடையே மண்ணகத்தே*
*வீதியிலே வீட்டி லெல்லாம்*
*களியிலே, கோவிந்தா! நினைக்கண்டு*
*நின்னொடுநான் கலப்ப தென்றோ?*

**- பா.க.தோ.பா. கோவிந்தன் பாட்டு.2**

என்ற பாரதி வாக்கினால் போற்றுகின்றோம்.

இவனைச் சேவித்தபிறகு நாராயணன் சந்நிதிக்கு வருகின்றோம். அப்பெருமானை,

*நாராயண நாராயண*
*நாராயண நம என்(று)*
*ஆராயினும் இம்மந்திரம்*
*அநு சந்தனம் மறவார்*
*பேராயிரம் உடையான் அருள்*
*பிறவார் பிறவியிலே*
*வாரார்இனி வாரார்என*
*மறைநூலும் விளம்பும்*

**- ஒரு பழம் பாடல்.**

என்ற பாசுரத்தைக் கொண்டு சேவிக்கின்றோம்.

அடுத்து குருமார்களின் சந்நிதிக்கு வந்து அவர்களை வணங்கிய பின் அநுமன் சந்நிதிக்கு வருகின்றோம். அந்த வாயுபுத்திரனை,

*அஞ்சிலே ஒன்று பெற்றான்*
*அஞ்சிலே ஒன்றைத் தாவி*
*அஞ்சிலே ஒன்றுஆ றாக*
*ஆரியற் காக ஏகி*
*அஞ்சிலே ஒன்று பெற்ற*
*அணங்குகண்டு அயலார் ஊரில்*
*அஞ்சிலே ஒன்றை வைத்தான்*
*அவன்எமை அளித்துக் காப்பான்*

**- கம்பரா. பாலகா. காப்பு அநுமன்துதி**

என்ற கம்பன் வாக்கால் சேவிக்கின்றோம்.

இங்ஙனம் வழிபாட்டை முடித்துக் கொண்டு பகல் ஒரு மணிக்கு வீடு திரும்புகின்றோம்.

## 2. பூங்கா

இங்கு ஒரே ஒரு பூங்காவைத்தான் பார்க்க முடிந்தது.

**1. காட்டன்வுட் பூங்கா[1]:** மே 16, வியாழன் மாலை 7.15 மணிக்கு என் பேத்தி மிருணாளினி இல்லத்திலிருந்து சுமார் 5 கல் தொலைவிலுள்ள இந்தப் பூங்காவிற்குப் புறப்பட்டோம். சுமார் 20 ஏக்கர் பரப்புள்ள மேடு பள்ளங்களான இடம். அனைத்திடங்களும் போய்வர சீமைக்காரையாலான நல்ல நடைபாதை அமைப்பு. சில இடங்களில் கூடாரம் போன்ற அமைப்புகள். அவற்றின் கீழ் அமர்வதற்காக பெஞ்சு போன்ற இருக்கை வசதிகள். பகலில் வெயில் காயும்போது பூங்காவிற்கு வருவோர்கள் வெப்பம் பொறுக்காமல் சிறிது நேரம் அமர்வதற்கு இந்த வசதிகள். பிறஇடங்களிலும் ஆங்காங்கு கூடாரம் இல்லாது அமைக்கப்பெற்ற இருக்கை வசதிகள். பூங்காவிற்கு வருவோர்கள் சுற்றி அலையும் போது அயர்ச்சியால் சிறிது நேரம் அமர்ந்து இளைப்பாற இந்த வசதிகள். பூங்காவின் இருபக்க ஓரங்களிலும் சுமார் 50-க்கு மேற்பட்ட கார்கள் வரிசையாக நிறுத்தப்பெற்றிருந்தன. இவை பூங்காவிற்குப் பார்வையாளர்களாக வந்தவர்களின் கார்கள். பெரிய இடமாதலின் மக்களின் கூட்டம் கண்ணுக்குப் புலனாவதில்லை. எங்கோ புல்வெளியில் மர நிழலில் அவர்கள் அமர்ந்திருப்பதைக் காணமுடிகிறது. அவர்களோடு வந்த சிறுவர்சிறுமிகள் மிதிவண்டிகளிலும், குழந்தைகள் தாமாக இயக்கும் மூன்று சக்கர ஊர்திகளில் ஆங்காங்கு நடைபாதைகளில் சுற்றுவதைக் காண்கின்றோம்.

பெரிய இடத்திலமைந்த பூங்காவாதலால் டென்னிஸ்[2], கூடைப்பந்து[3], வாலிபால்[4] ஆகிய விளையாட்டுகள் நடைபெற்றுக் கொண்டிருந்ததைப் பார்க்கின்றோம். குழந்தைகள், சிறுவர்கள் விளையாடுவதற்கு ஒரு தனி இடம். குழந்தைகள் ஆடுவதற்கு விளையாட்டு ஊஞ்சல்கள் (தாய்மார்கள் இவற்றில் தம் குழந்தைகளை அமர்த்தி ஆட்டுவார்கள்); இதில் ஆடும் குழந்தைகட்கும், ஆட்டும் அன்னைமார்களுக்கும் ஆனந்தம் பொங்கும். சிறுவர்கள் தாமாக ஏறி இறங்கும் வசதிகள் அமைந்த அமைப்புகள், சறுக்கி விளையாடும் அமைப்புகள் இவற்றைக் கொண்ட ஏற்பாடு இருந்தது. இவற்றில் சிறுவர்கள் ஏறியும் இறங்கியும் சறுக்கியும் சிறிதும் அச்சமின்றியும் விளையாடுவதைக் காணும்போது தாய்மார்களுக்கும் மகிழ்ச்சி; பார்வையாளர்க்கும் களிப்பு. இந்த இடங்களில் சிறுவர்கள் பல்வேறு வகை ஊர்திகளை இயக்கி விளையாடுவதைக் காணலாம். இந்த வகை விளையாட்டுகளில் ஒருவரோடு ஒருவர் மோதிக் கொள்வதில்லை. அவ்வளவு கவனத்துடன் விளையாடுகின்றனர்.

---

1. Cottonwood Park  2. Tennis  3. Basket Ball
4. Volley Ball

இங்கு எங்களுடன் வந்த அரவிந்தனுடன் வந்த இரு நண்பர்கள் தம் மனைவிமார்களுடனும் குழந்தைகளுடனும் கார்களில் வந்திருந்தனர். இருவரும் தமிழ் நாட்டின் மதுரை மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களில் இளங்கோவன் என்பார் கணிணி துறையில் நல்ல முறையில் பொருளீட்டுபவர். அவர் துணைவியார் வேதியியலில் எம்.எஸ்.சி, பி.எச்.டி பட்டங்கள் பெற்றவர். இவர் இல்லக்கிழத்தி; குடும்பத்தலைவி. மற்றொருவர் கமலக் கண்ணன் என்பவர். இவரும் கணினி துறையில் பணியாற்றி நல்ல முறையில் பொருளீட்டுவர். துணைவியார் பி. எஸ்.சி (விலங்கியல்) பட்டதாரி. பி.எட் பட்டம் பெற்றவர். இவர் **'செட்டிநாடு வித்யோதயா'** என்ற மேனிலைப் பள்ளியில் பணியாற்றிக் கொண்டிருந்தவர். இத் தம்பதியர் சென்னையில் பட்டினப்பாக்கத்தில் குடியிருந்தவர்கள். இவர்கள் மதுரை மாவட்டத்தில் கம்பம் என்ற பகுதியைச் சேர்ந்தவர்கள்.

நாங்கள் தனிமையாகக் காரில் பல இடங்களைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தோம். தமிழகத்தைச் சேர்ந்த இந்த இரு தம்பதியர்களைச் சந்தித்து உரையாடிய போது தமிழகத்தில் இருப்பது போன்ற மனநிலையை அடைந்து மகிழ்ந்தோம். தாய் மொழியாகிய தமிழ் மக்களை எவ்வளவு உறைப்பாக ஆட்கொண்டுள்ளது என்பதை உணரமுடிந்தது. தமிழகத்தில் தமிழ்ச் சூழ்நிலையில் இருந்தபோது இந்த உணர்வு இருப்பது தெரியாமல் இருப்பது இயல்பு. அமெரிக்காவில் இந்த உணர்வு தெரிந்தபோது எல்லையற்ற மகிழ்ச்சியை அடைந்தோம்.

இந்த இரு நண்பர்களும் எங்களை "ஊர் பிடித்திருக்கிறதா ?" என்று வினாவினார்கள். என்ன பதில் சொல்வது? "நாங்கள் இருவரும் வயோதியர்கள். 80 அகவையைக் கடந்தவர்கள். 'காடு வா, வீடு போ' என்ற நிலையிலுள்ளவர்கள். புராண இலக்கியங்களில் பார்க்காத வீட்டுலகத்தை (மோட்சத்தை)ப் பற்றிக் கேள்விப்படும் 'உலகத்தை' இங்குப் பார்த்து அனுபவிக்கின்றோம். நாங்கள் இருவரும் மூன்று மாத காலம் தங்கிப் பார்ப்பதற்காக இங்கு வந்துள்ளோம். எங்கள் இளைய மகன் டாக்டர் இராம கிருட்டிணன் மருத்துவத் துறையில், நியுயார்க்கில் நிரந்தர அமெரிக்கவாசியாகப் பணியாற்றி வருவதாலும் என் பேத்தி இங்கு (டாலஸில்) பணியாற்றி வருவதாலும் அமெரிக்கா வர வாய்ப்புகள் கிடைத்தன; பல இடங்களைச் சுற்றிப்பார்த்து வருகின்றோம். ஜுன் 24-25-இல் தாயகம் (தமிழ் நாடு) திரும்பிவிடுவோம்" என்று கூறினேன்.

தொடர்ந்து, "தமிழ் நாட்டில் இங்கிருப்பது போல் செல்வம் ஈட்டுவதற்கு வாய்ப்புகள் உண்டா ? இங்கு நீங்கள் எளிதாகக் காரில் வந்துள்ளீர்கள். அங்கு இப்படி வரமுடியுமா ? கனவில்கூட இத்தகைய வசதிகள்

காணமுடியுமா? நீங்கள் நன்றாக நேர்மையுடன் பொருளீட்டி நல்வாழ்க்கையை அனுபவியுங்கள். நேர்மையில் வழுவாது வாழுங்கள். தமிழகத்திற்கு நற்பெயர் ஈட்டுங்கள்'' என்று சொல்லி முடித்தேன். பின்னர் மகிழ்ச்சியுடன் பிரிந்தோம் - இரவு 8.30 மணிக்கு இல்லம் வந்தடைந்தோம்.

## 3. அருங்காட்சியகம்

இவற்றிலும் ஒன்றே ஒன்றை மட்டும் பார்க்க வாய்ப்பு கிடைக்கிறது.

**1. டாலஸ் அருங்காட்சியகம் (இயற்கை வரலாறு)[1]:** இந்த அமைப்பைப் பார்க்க (மே மாதம் 20-ஆம் நாள் பிற்பகல் இரண்டரை மணிக்குப் புறப்பட்டோம். சுமார் 15 கல் தொலைவிலுள்ள இதனைப் பார்க்க நான், என் மனைவி, என் பேத்தி அனுபமா, அரவிந்தனும் காரில் சென்றோம். காரை ஓரிடத்தில் நிறுத்திவிட்டு நுழைவாயில் வழியாக உள்ளே சென்று உரிய கட்டணம் செலுத்தினோம்[2]. இந்த அமைப்பு மூன்று தளங்களில் ஏற்படுத்தப் பெற்றுள்ளது. தரைதளம், தரைக்குக் கீழ் தளம், தரைக்கு மேலுள்ள முதல் மாடி. காட்சிப் பொருட்கள் மிக அற்புதமாக அமைக்கப் பெற்றுள்ளன. ஒவ்வொன்றின் அருகிலும் விவரமான குறிப்புகள், விளக்கங்கள் தரப் பெற்றுள்ளன. இவற்றைப் பார்த்த முறைகள் ஈண்டு தரப் பெற்றுள்ளன.

**1. தரை தளம்:** இங்கு (1) டெக்ஸாஸ் பறவைகள் அடங்கிய மண்டபம், (2) பாலூட்டும் பிராணிகள் அடங்கிய மண்டபம்[3], (3) நீர்ப் பகுதிகள் அடங்கிய மண்டபம், (4) காட்டெருமைகள் அடங்கிய மண்டபம் ஆகியவை இருந்தன.

பறவைகள் அடங்கிய மண்டபத்திற்கு வருகின்றோம். இங்கு அனைத்தையும் பார்த்து அனுபவித்து மகிழ்ந்தபோதிலும் முக்கியமான சிலவற்றை மட்டும் ஈண்டு காட்டுவேன்.

**வாத்து, கொக்கு:** இவற்றில் பல வகைகள் உயிருள்ளவை போல் அவை வாழும் சூழ்நிலைகளுடன் காட்டப் பெற்றுள்ளன. இங்கு கரண்டி போன்ற மூக்கு அமைப்புள்ள வாத்துகள் எங்கள் கவனத்தை ஈர்த்து மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்த்தின.

அடுத்துப் பார்த்தவை **மரங்கொத்திப் பறவைகள்[4]:** இவை மரத்தைக் கொத்தும் பாவனையில் அவை வாழும் இயற்கைச் சூழ்நிலைகளுடன் அற்புதமாகக் காட்டப் பெற்றுள்ளன. அடுத்துப் பார்த்தவை பெலிக்கன்[5] என்ற

---

1. Dallus Museum of Natural History. இது Fair Park என்ற இடத்தில் அமைந்துள்ளது. (Post Box 150349, Darrus, Rx 75315 - என்பது முகவரி)
2. பெரியவர்கட்கு 6.50 டாலர்; முதியோர்களுக்கு 5.50 டாலர்.
3. (1) Hall of Texas Birds; (2) Hall of Texas Mammals; (3) Hall of Texas Wetlands; (4) Bison Halt
4. Woodpecker
5. Pelican

கொக்கு வகைகள்; இவை சற்றும் பெரியவை; இவை இறகுகளை விரித்தால் 6½ அடி அகலம் இருக்கும் என்ற குறிப்பு தரப் பெற்றுள்ளது.

அடுத்து தரை தளத்துக்கு முதல் தளத்துக்கு[6] வருகின்றோம். முதலில் **டைனோசரஸ்**[7] பகுதியைப் பார்க்கின்றோம். அனைத்துமே எங்கள் கவனத்தைக் கவர்ந்த போதிலும் முக்கியமான சிலவற்றை மட்டுமே ஈண்டுக் காட்டுவேன்.

**(1) மலைவிசாரஸ்[8] என்ற மிகப் பெரிய பல்லியின்[9] எலும்புக் கூடு:** இப்பிராணி ஆயிரம் இலட்சம் (100 மில்லியன்) ஆண்டுகட்கு முன் ஆஃபிரிக்காவில் இருந்ததாம். இதன் நீளம் 35 அடி. இதன் உணவு தாவர வகைகள்[10]

**(2) மிகப் பெரிய முதலையின்[11] எலும்புக் கூடு:** இந்த முதலை 1100 இலட்சம் (110 மில்லியன்) ஆண்டுகட்கு முன்னர் ஆஃபிரிக்கா - சகாரா பாலைவனத்தில் சதைப் பிடிப்புடன் வாழ்ந்த முதலையாகும்.

**(3) மிகப் பெரிய முதுகெலும்புடன் கூடிய ஒரு இராட்சதப் பல்லியின் எலும்புக் கூடு:** வட அமெரிக்காவில் 115-100 மில்லியன் (1 மில்லியன் = 10 இலட்சம்) ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த பிராணியாகும். இது 37 அடி (11 மீட்டர்) நீளமுள்ளது. இது பல சிறு பிராணிகளைக் கொன்று உண்டதாக சொல்லப் பெறுகின்றது.

**(4) பா. பா நகரும் பிராணி[12]யின் எலும்புக் கூடு:** இது தசையுடன் இருக்கும் போது இதன் நீளம் 6 மீட்டர். இதுவும் வட அமெரிக்காவில் (100-97) மில்லியன் ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்திருந்ததாகச் சொல்லப் பெறுகின்றது.

**(5) கொடுமையான பல்லி[13]யின் எலும்புக் கூடு:** இதுவும் வட அமெரிக்காவில் இருந்து வந்த மிகப் பெரிய பல்லி; தசையுண்ணும் பிராணி. இதன் பொதுப் பெயர் **டி-ரெக்ஸ்**[14] என்பது. 650 இலட்சம் (65 மில்லியன்) ஆண்டுகட்கு முன் வாழ்ந்த மிகப் பெரிய பிராணியாகும். இதன் நீளம் 12 மீட்டர் ஆகும்.

இவற்றைப் பார்த்த நிலையில் சிறிது தூரம் நடந்து வரும் போது பெரிய யானையின் எலும்புக் கூடு நம் கண்ணுக்கு விருந்தாக அமைந்தது. இது இருபதாயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்த யானையின் எலும்புக் கூடு என்பதாகத் தெரிவிக்கப் பெற்றது. அடுத்து ஓர் அறையின் முன் வாயிலின்

---

6. First Floor
7. Dinosaurs section
8. Malaivisaurus
9. Lizard
10. Plants
11. Super Crocodile
12. Paw-Paw-Reptile
13. Pyrout Lizard
14. T-rex

தலைப்பில் "**வரலாற்றுக் காலத்துக்கு முன் டெக்ஸாஸ்**"[15] என்ற பெயர் பொறிக்கப்பெற்றிருந்தது. ஒரு பையன் "ஆஃபிரிக்கன் சபாரி'[16] என்ற படம் இந்த அறையில் போடப் போகிறார்கள் அதைப் பார்க்கலாம்" என்ற தகவல் தந்தான். அதனால் அந்த அறையில் நுழைந்து அந்தப் படத்தைக் காண வாய்ப்பு ஏற்பட்டது. கலைமான்கள் முட்டி மோதிப் போரிட்டுக் கொண்டிருந்த காட்சிகள் விருந்தாக அமைந்தன. படத்தில் கண்ட காட்சிகள் யாவும் இன்று டெக்ஸாஸில் இருக்கும் நிலையைக் காட்டுவதாகும்.

அடுத்து அறையை விட்டு வெளிவந்து சிறிது தூரம் நடந்து போகும் போது பெரிய இராட்சசக் கடல் ஆமையின் எலும்புக் கூடு ஒன்று நம் கண்ணில் பட்டது; அது நமக்கு சிறந்த விருந்தாக அமைந்தது. அடுத்து '**ஹீத் மாஸாஸௌர்**'[17] என்ற பெரிய பிராணியின் எலும்புக் கூடு ஒன்றைக் காண முடிந்தது. தசையுடன் கூடிய இப் பிராணி 32 அடி நீளம் உள்ளது என்பதை அறிந்து வியந்தோம்.

அடுத்து தரை தளத்தில் பாலூட்டும் பிராணி வகைகளின்[18] பண்படுத்தப் பெற்ற[19] உருவங்களைப் பார்த்தோம். அவற்றை ஈண்டுத் தருகின்றோம்.

(1) **கொயோட்டி**[20] என்ற பிராணி. இது பார்ப்பதற்கு நரி போன்றிருந்தது. சிறிய உருவம் கொண்டது. 38 அங்குலம் நீளமுடையது; 15 கிலோ எடை கொண்டது. (2) **வெள்ளை வால் மான்**. இங்கு நாலைந்து உருவங்கள் கண்ணுக்கு விருந்தாக அமைந்தன. (3) **எல்க்**[21] என்ற பிராணி. இது பார்ப்பதற்கு பெரிய கொம்புகளையுடைய கலைமான் உருவம் போல் அமைந்திருந்தது. 6½ அடி நீளமுடையது. (4) **முயூல்**[22] - இது ஒரு வகை மான். கண்ணைக் கவர்ந்தது. (5) **ஒட்டர்**[23] - இப்பிராணி கீரிப் பிள்ளை மாதிரி தென்பட்டது. (6) **நாய் வகைகள்** - காட்டு வகை நாய்கள் இவை; பயங்கரத் தோற்றத்தை அளித்தன. (7) **எலி** - பெட்டிக்குள் பல எலிகள் அடைக்கப் பெற்றிருந்தன. (8) **கபில நிற 5 நாய்கள்** ஓரிடத்தில் இருந்தன. இவை அறிவுள்ள சமூகப் பிராணிகள். கூடி வாழ்வன; சேர்ந்தே வேட்டையாடும். பெரிய உருவமுடைய பிராணியையும் கொன்று விடும்.

**காட்டுப் பிராணிகள்** உள்ள பகுதிக்கு வருகின்றோம். இங்கு பார்த்தவற்றை ஈண்டு தருகின்றேன்.

---

15. Prehistoric Texas
16. African Safari
17. Heath Masasaur
18. Mammals
19. Stuff
20. Coyote
21. Elk
22. Mule
23. otter
24. Wild animals

(1) **புராங்கார்ன்**[25] - ஒரு வகை மான். முன் பக்கமாக நீண்டு வளைந்த கொம்புகளையுடையது. கொம்புகளின் முன்புறமாக இரண்டு வளைந்த சிறு கிளைக் கொம்புகள் கொண்டது. இஃது ஐந்தடி நீளம் உடையது. (2) **மலைவாழ் சிங்கம்** - சற்றுச் சிறிய உருவங் கொண்டது; பிடரி மயிரில்லாதது. இரண்டு மூன்று உருப்படிகளைப் பார்த்தோம். (3) **ஜாகுவார்**[26] - இஃது ஒரு வகை சிறுத்தைப் புலி. புள்ளிகளையுடையது; 6½ அடி நீளமுடையது. இது நீருள்ள பகுதிகளை விரும்புவது. தனிமையாகத் திரிவது. (4) **காட்டெருமை**[27] பெரிய உருவத்தைக் கொண்டது. இதன் நீளம் 11 அடி. பெரிய உருவமுடையதாயினும் மணிக்கு 35 மைல் ஓடக் கூடியது. (5) **கரடி வகை**[28] - கரடியில் ஒரு வகை. பெரிய உருவங் கொண்டது. பொதுவாக மரக்கறி உணவை உண்பது; சில சமயம் இறைச்சி வகைகளையும் உண்பதுண்டு. 9 அடி நீளமுடையது; 1000 கிலோ எடை கொண்டது. (6) **கபில நிற நரி**[29] - நாலைந்து உருப்படிகளை ஓரிடத்தில் பார்த்தோம். இஃது இரண்டிரண்டாகவே (இணையாகவே) காணப் பெறும். ஒன்றன் நீளம் 32 அங்குலம்; எடை 7 கிலோ.

அடுத்து தரைக்குக் கீழுள்ள தளத்திற்கு[30] வருகின்றோம் - மின்விசை ஏற்றம் மூலமாக. இங்கு பழம் பொருள் ஆய்வகம்[31] உள்ளது. இது தவிர பாலுண்ணும் உயிர்களாகிய எலி ஒன்று தனிப் பெட்டியறையிலும், தவளையொன்று[32] தனிப் பெட்டியறையிலும் இருந்தமையைக் கண்டோம். இங்கு ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித் தனியாக ஒப்பனையறைகளும்[33] இருக்கின்றன. காட்சியக அலுவலகமும் இங்கு இருப்பதையும் பார்த்தோம்.

இவற்றையெல்லாம் பார்த்து விட்டு மன நிறைவுடைய மகிழ்ச்சியுடன் திரும்புகின்றோம். பின்புற வாயில் வழியாக வெளியில் உருக்கு இரும்பாலான மூன்று பெரிய உருவங்களைக் காண்கின்றோம். இவை காரில் முன்புறமுள்ள உந்து பொறி வண்டியின் முட்டுத் தாங்கிகளால்[34] ஆக்கப் பெற்றவை. செய்து முடிக்க மூன்று ஆண்டுகள் ஆயினவாம். பெரியவை ஒவ்வொன்றும் 32 அடிகள் நீளமுடையவை; சிறியது 20 அடி நீளம் கொண்டது. மூன்றும் சேர்ந்த எடை 7 டன்கள் ஆகும்.

காரில் ஏறி மாலை ஐந்து மணிக்கு இல்லம் அடைந்தோம்.

## 4. உயிர்க்காட்சி சாலை

இவற்றிலும் ஒன்று தான் பார்க்க சந்தர்ப்பம் கிடைத்தது - தங்கின நாட்கள் குறைவானமையால்

---

25. Pronghorn
26. Jaguvar
27. Bison
28. Grizzly Bear
29. Grey Fox
30. Basement
31. Fossil Laboratory
32. Amphibians - நீரிலும் நிலத்திலும் வாழ்வது
33. Toilets
34. Bumpers

**டாலஸ் உயிர்க்காட்சி சாலை[1]:** மே மாதம் 18-ஆம் நாள் (சனிக்கிழமை) முற்பகல் 10-30 மணிக்கு இக் காட்சி சாலையைப் பார்ப்பதற்காக நான், என் துணைவி, பேத்திமார் இருவர், அரவிந்தன் ஆகியோர் புறப்பட்டோம். காட்சி சாலையிருக்கும் இடத்தையடைந்தோம். 4 டாலர் தந்து கார் ஓர் இடத்தில் நிறுத்தப் பெற்றது. வயது வந்தோருக்கு 7 டாலர்; முதியோருக்கு 4 டாலர்; சக்கர நாற்காலிக்கு 10 டாலர் வீதம் 2 நாற்காலிகள் (என் பேத்தி, அரவிந்தன் இயக்குபவை) வாங்கிக்கொண்டு காட்சி சாலைக்குள் நுழைந்தோம். அங்குப் பார்த்து மகிழ்ச்சியுடன் நுகர்ந்தவற்றை ஈண்டு தருகின்றேன். (படம் - 39)

இந்தக் காட்சி சாலை (1) காட்டு மிருகங்கள் அடங்கிய ஆஃபிரிக்கப் பகுதி[2], (2) காட்சி சாலை - வடக்குப் பகுதி[3], குழந்தைகள் - சாலைப் பகுதி[4] என்று மூன்று பகுதிகளாக அமைந்திருந்தது. என் பேத்தியும், அரவிந்தனும் நாங்கள் அமர்ந்த நிலையில் சக்கர நாற்காலிகளைத் தள்ளிக் கொண்டு வர நாங்கள் **(1) உணவாகப் பயன்படும் பிராணிகள் அடங்கிய பகுதி**க்கு வருகின்றோம். ஆந்தைகள், கழுகுகள், பருந்து போன்ற பறவைகள் அவை வாழும் இயற்கைச் சூழ்நிலைகளிலே வைக்கப் பெற்றிருப்பதைக் கண்டோம்; வியப்புற்று மகிழ்ந்தோம்.

**(2) பூனை இனப் பகுதி:** இங்கு உறங்கிய நிலையில் பிடரியையுடைய ஆண் சிங்கம், அருகில் பெண் சிங்கம் அவை வாழும் பெரிய இடப் பரப்பையுடைய சூழ்நிலைகளில் வைக்கப் பெற்றிருப்பதைக் கண்டு வியப்புடன் மகிழ்ச்சியடைந்தோம்.

**(3) ஒட்டைச் சிவிங்கிகள்[5]:** இப்பகுதியிலும் அவை வாழும் இயற்கைச் சூழ்நிலையிலேயே இரண்டு பிராணிகள் வைக்கப் பெற்றிருந்தன. இவை அங்கும் இங்கும் பார்த்த நிலையில் இருந்தன. (படம் - 40)

**(4) யானைகள்:** இப் பகுதியுள் ஒரே ஒரு பெரிய யானை தான் இருந்தது. அது பெரியதொரு காட்டுச் சூழ்நிலையில் வைக்கப் பெற்றிருந்ததைக் கண்டு வியப்படையாமல் இருக்க முடியவில்லை.

**(5) புலிகள்:** இங்கும் பெரிய காட்டுச் சூழ்நிலை தான். ஒன்று படுத்த நிலையில் எங்களை நோக்கும் பாவனையில் இருந்தது. ஏனைய இரண்டும் அங்குமிங்குமாகத் திரிந்த நிலையில் இருப்பதைக் கண்டோம். இக்காட்சி எங்கள் மனதிற்கு நல்ல விருந்து.

**(6) கங்காரு:** ஓடிக்கொண்டிருந்த நிலையில் மூன்று கங்காருகளைக் கண்டு மகிழ்ந்தோம்.

---

1. Dallus Zoo 2. Wilds of Africa 3. Zoo-North
4. Children's Zoo 5. Giraffe

**(7) காண்டாமிருகம்[6]:** இங்கு இரண்டு காண்டாமிருகங்கள் உறங்கிய நிலையில் காணப் பெற்றன. ஒன்றன் முதுகுப் புறத்தையும், மற்றொன்றின் முகப் பக்கத்தையும் பார்க்க முடிந்தது.

**(8) ஒட்டகங்கள்:** வாழும் சூழ்நிலையில் ஒரே ஓர் ஒட்டகந்தான் எங்கள் கண்ணில் பட்டது. அதுவும் வேறு பக்கத்தில் திரும்பிய நிலையில் இருந்தது.

**(9) சிறுத்தைப் புலிகள்[7]:** அவை வாழும் இயற்கைச் சூழ்நிலையில் மூன்றைக் கண்டோம். புள்ளிகள் நிறைந்த உடலைக் கொண்ட இவை மூன்றும் கம்பீரமாக அலைந்து திரிவதைக் காண முடிந்தது. இக் காட்சி எங்கட்கு மிக்க மகிழ்ச்சியை அளித்தது. (படம் - 41)

**பறவைகள் ஊர்வன பகுதி:** இப்பகுதிக்கு வருகின்றோம். இங்கு வாழும் சூழ்நிலையிலுள்ள பல்வேறு வகை வாத்துகள், பல்வேறு கொக்கு வகைகள் இவை கண்ணுக்கு விருந்தாக அமைந்தன. கரண்டி வடிவில் அமைந்த மூக்குகளைக்[8] கொண்ட கொக்கு வகைகளும் ஆரஞ்சு நிறமுள்ள கொக்கு வகைகளும் எங்கள் கண்ணையும், கருத்தையும் கவர்ந்தன. ஆரஞ்சு வகைக் கொக்குகள் ஒற்றைக் காலில் நின்று கொண்டும், மற்றொரு காலை உடலோடு சுற்றி வைத்துக் கொண்டும் உறங்கும் நிலை எங்களை வியப்பில் ஆழ்த்தியது[9]. வேறு சில பறவைகளும் எங்கள் கண்ணுக்கு விருந்தாக அமைந்து வியப்புக்கடலில் ஆழ்த்தி மகிழ்ச்சிப் பெருக்கை விளைவித்தன.

அடுத்து ஊர்வனவற்றைப் பார்க்கின்றோம். பச்சைப் பாம்புகள், மஞ்சள் நிறப் பாம்புகள், ஊர்ந்த நிலையில் வாழும் சூழ்நிலையில் பல்வேறு வகைச் சிறு சிறு பாம்புகள், சிறு சிறு மலைப் பாம்புகள், கட்டு விரியன்கள், படம் எடுத்தாடும் நல்ல பாம்புகள் எங்கள் உள்ளத்தைக் கவர்ந்து மகிழ்ச்சிப் பெருக்கில் ஆழ்த்தின. ஓரிடத்தில் பெரிய மலைப் பாம்பு ஒன்றைக் கண்டோம். அது சுருண்ட நிலையில் உறங்கிக் கொண்டிருந்தது. நஞ்சு விளைவிக்கக்கூடிய பச்சை, நீல நிறமுள்ள பல்வேறு தவளைகள் எங்கள் கண்ணுக்கு விருந்தாக அமைந்தன. கண்ட வேறு சில காட்சிகள் விரிவஞ்சி விடப் பெற்றன. (படம் - 42, 43)

**மோனோ இருப்பூர்தி செஃபாரி[10]:** இப்படி ஓர் இருப்பூர்தி ஆஃபிரிக்காவின் பிராணிகளைச் சுட்டிக்காட்டும் நிலையில் அப் பகுதியைச் சுற்றி ஓடிக் கொண்டிருந்தது. ஒருவருக்குக் கட்டணம் 2 டாலர்; இங்கு முதியோர்களுக்குச் சலுகை இல்லை. இந்த ஊர்தியில் சக்கர வண்டிகளுடன்

---

6. Rhinoceros 7. Cheetahs 8. Spoon Bill

9. வில்லிபாரதத்தில் படித்த அர்ச்சுனனின் தவ நிலை நினைவிற்கு வந்தது.

10. Mono Rail Safari

ஏறிக் கொண்டோம். அமெரிக்கப் பெண்மணி ஒருத்தி காட்சிகளை விளக்கம் கூறிய நிலையில் ஊர்தி மெதுவாகச் சுற்றி ஓடத் தொடங்கியது.

அம்மையாரின் விளக்கத்துடன் நாங்கள் கண்டு மகிழ்ந்தவை.

**(1) ஒகாபி[11]:** மத்திய ஆஃபிரிக்காவில் வெப்ப மண்டல மலைப் பிரதேசத்தில் வாழ்வது. உணவு இலை வகைகள், மெதுவான தாவர வகைகள், பழ வகைகள் முதலியவை. தன் இனத்தைச் சார்ந்த மற்றொரு பிராணியைக் காணும்போது 'சூப்' என்று ஒலியைக் கிளப்பும். இஃதை ஒட்டைச் சிவிங்கி இனத்தைச் சேர்ந்ததாகச் சொல்வர்.

**(2) ஃபிளாமிங்கோ[12]:** இப் பிராணி நீண்ட கழுத்தையும், காலையும் கொண்டது. நீரில் முகத்தை ஆழ்த்திக்கொண்டு (20 வினாடி) புழு, பூச்சிகள், பாசான்கள் முதலியவற்றைத் தின்னும். குளிர் காலங்களில் வெப்பப் பகுதிகளை அடையும்.

**(3) புஷ்டூய்க்கர்[13]:** மான் வகையைச் சார்ந்தது. அடர்ந்த முடியையும் நீண்ட காதுகளையும் கொண்டது. கபில நிறம் முதல் சிவப்பு-மஞ்சள் நிறமுடைய மேற்புறத்தையும் அடி வயிறு வெள்ளை நிறத்தையும் கொண்டது.

**(4) கொம்புடைய ஒரு வகைப் பிராணி[14]:** பாலைவனங்களில் பாறைப் பகுதிகளிலும் காணப்படுவது. இங்ஙனம் இருப்பதால் தன் உடலிலுள்ள நீரின் அளவைக் காப்பது. பெரும்பாலும் வேர்க்காது. இந்த இனம் இப்போது அருகிக் கொண்டே வருகின்றது.

**(5) நெருப்புக் கோழி[15]:** பறவை இனங்களில் மிகப் பெரியது. நீண்ட கழுத்தையும், சிறிய தலையையும் உடையது. கனத்த உடலையும், நீண்ட சதையுடன் கூடிய கால்களையும் கொண்டது. இறக்கைகள் சிறியவை; அவை தளர்வுடன் அமைந்த சிறகுகள்[16] கொண்டவை. பறவை இனங்களிலேயே இரண்டு பிரிவுகளையுடைய பாதங்களைக் கொண்டிருப்பதால் இது தனித் தன்மையுடையது. பறப்பதற்கு பருத்த உடலைக் கொண்டிருப்பினும் மணிக்கு 70 கிலோ மீட்டர் வேகத்துடன் ஓடக்கூடியது. (படம் - 44)

**(6) வரிக் குதிரை[17]:** இது பெரும் பகுதி புல்லையும், சிறு பகுதி இலைகளையும் பூக்களின் முகைகளையும் உண்ணும். உடலில் கறுப்பு வெள்ளைக் கோடுகள் காணப்பெறும்.

**(7) ஒரு வகை மனிதக் குரங்கு:** இது பகல் நேரமெல்லாம் பழ வகைகள், இலைகள், பூக்கள், விதைகள் முதலியவற்றை உண்ணக்கூடியது. சில சமயம்

---

11. Okapi 12. Flamingo 13. Bush Duiker
14. Scimitar-horned oryx 15. Ostrich 16. Feathers
17. Zebra

இவை கும்பலாக இணைந்து சென்று குரங்குகள், சிறிய பறவைகள் முதலியவற்றையும் கொன்று தின்னும் இயல்புடையவை. வயது வந்த இப் பிராணி தினந்தோறும் தான் தங்குவதற்கேற்ற வலை அமைப்பை உண்டாக்கிக்கொள்ளும். இது பல்வேறு வகைப் பேச்சுகளை உண்டாக்கிக் கொள்ளும் இயல்புடையது.

**(8) மான்டிரில்[18]:** இதுவும் ஒரு வகைக் குரங்காகும். இவை கூட்டமாக அடர்ந்த மலைப் பிரதேசங்களில் வாழும். பகல் நேரத்தின் பெரும் பகுதியை பழங்கள், விதைகள், முட்டைகள், சிறிய பிராணிகள் முதலியவற்றைத் தேடுவதிலே கழிக்கும். இரவு வந்ததும் பாதுகாப்பிற்கு மரத்தின் மேல் ஏறிக் கொள்ளும். ஆண் வகை மிகவும் ஈர்க்கக்கூடிய வண்ண முகத்தையும், மூக்கையும்[19], நீலநிற[20] மஞ்சள் நிறத் தாடியையும் கொண்டது. இது பிற பிராணிகளின் முன்னிலையில் தன் துணிவின் தனித் தன்மையை உணர்த்தக்கூடியது.

இருப்பூர்தி இறங்கும் இடத்தை அடைந்ததும் சக்கர நாற்காலிகளை உரியவரிடம் சேர்ப்பித்து வீடு திரும்புகின்றோம். இப்போது பிற்பகல் மணி மூன்று. இந்திய உணவு விடுதியில் உணவு கொண்டோம். பல்வகை உணவு வகை 9 டாலர்; நேரில் கேட்பது 7 டாலர். மொத்தம் வரியுடன் 50 டாலர் செலுத்தி வீடு வந்து சேரும்போது மாலை 5 மணி.

## 5. தாவரங்கள் வளர்க்கப்பெறும் இடம்

இதிலும் ஒன்று தான் பார்க்க முடிந்தது. பார்த்த வரையிலும் நிதானமாக நன்றாகப் பார்த்து மகிழ்ந்தோம்.

**பல்வேறு நோக்கங்களுக்காக பல்வேறு வகைத் தாவரங்கள் வளர்க்கப்பெறும் இடம்[1]:** மே மாதம் - 15 (புதன்) முற்பகல் 10 மணிக்கு என் பேத்தி மிருணாளியின் இல்லத்திலிருந்து[2] சுமார் 20 கல் தொலைவிலுள்ள மேற்கண்ட இடத்திற்குக் காரில் புறப்பட்டோம். காரை சற்றுத் தொலைவிலுள்ள இடத்தில் நிறுத்திவிட்டு நுழைவுச் சீட்டுகள் வாங்கிக் கொண்டு[3] உள்ளே நுழைந்தோம்.

இந்தத் தோட்டம் பற்றிச் சில சொற்கள். இன்று இருப்பது போன்ற நிலையில் இது 1982-இல் நிறுவப் பெற்றது. இன்று இது உலகோரைக் கவரும் தகுதியைப் பெற்றுள்ளது. இஃது ஆண்டுதோறும் 350,000 எண்ணிக்கைக்குக் குறையாத பேர்களைக் கவர்வதாக உள்ளது. இவர்களில்

---

18. Mandril 19. Scariet 20. Flangas

1. ARBORETUM

2. Dallas Tx 75254. நான், என் துணைவி, என் பேத்தி அனுபமா, அரவிந்தன்

அமெரிக்க நாடுகளில் உள்ளவர்களைத் தவிர வெளி நாட்டிலிருந்து வருவோரும் அடங்குவர். வயது வந்தவர்கட்கு சக்கர நாற்காலிகள் உண்டு; இலவசம். அவர்களுடன் சேர்ந்து வருவோர் அவற்றைத் தள்ளிக்கொண்டு செல்லலாம். இவை தவிர 12 பேர் உட்காரும் Tram வண்டியும் உண்டு; பொறியமைப்பால் இயக்கப் பெறுவது. இதனையும் முதியோர், ஊனமுற்றோர் இவர்கட்காகக் கேட்டால், வண்டியோட்டியால் இந்த வசதி அளிக்கப்படும்.

தோட்டத்தின் அனைத்துப் பகுதிகளையும் பார்ப்பதற்கேற்றவாறு ஒரு குறிப்பிட்ட முறையில் நடைபாதை அமைக்கப் பெற்றுள்ளது. பாதை நல்ல சீமைக் காரையாலும், சில இடங்களில் பலகைக் கற்களாலும் அமைக்கப் பெற்றுள்ளது. ஏற்ற இறக்கமான இடங்களில் படி அமைப்பு வசதிகள் உள்ளன. சுற்றிவரும் பார்வையாளர்கள் அயர்ச்சியால் களைத்துப் போகும்போது அமர்வதற்கு பலவிடங்களில் ஆங்காங்கு மரத்தாலான பெஞ்சுகளும், இரும்புத் தகட்டால் பின்னப்பெற்ற பெஞ்சுகளும் உள்ளன. இவற்றுள் பல நன்கொடையாளர்களால் வழங்கப் பெற்றவை; இவற்றில் வழங்கினவர்கள் பெயர் பொறிக்கப் பெற்றிருக்கும். (படம் - 45)

முதியோர்களான எங்களுக்காக இரண்டு சக்கர நாற்காலிகள் வாங்கப்பெற்றன. ஒன்றை என் பேத்தி அனுபமாவும், மற்றொன்றினை அரவிந்தனும் தள்ளிக்கொண்டு போவார்கள். நாற்காலிகளிலிருந்த வண்ணம் பார்த்துக்கொண்டே பல இடங்களைப் பார்வையிட்டோம்-மகிழ்ந்த வண்ணம். அன்று வெயிலும் சற்று அதிகமாக இருந்தது. எங்களுக்கும் சோர்வு வந்து விட்டது. ஓர் இடத்தில் எங்களை இறக்கி சற்று உயரமான இடத்தில் இருந்த பெஞ்சில் அமரச் செய்துவிட்டு என் பேத்தியும், அரவிந்தனும் சில இடங்களைப் பார்க்கச் சென்றனர்.

சில மணித் துளிகளில் திரும்பி வந்து மேலும் சில இடங்களைக் காட்ட நாற்கலிகளில் தள்ளிக்கொண்டே சென்றனர். பல இடங்களைப் பார்த்துக் கொண்டே சென்றோம். பல்வேறு மர வகைகளும் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தன. ஓரிடத்தில் பூச்செடிகளின் அடர்த்தியான நிலை எங்கள் கண்ணுக்கும், கருத்திற்கும் நல் விருந்தாக இருந்தது. என் பேத்தி அந்தக் காட்சியில் சொக்கி அதன் நடுவே சென்று உட்கார்ந்து விட்டாள். 'இங்கேயே இருந்து விடலாம் போல் உள்ளதே!' என்று சொல்லியவண்ணம் அனுபவித்து மகிழ்ந்தாள். சில மணித் துளிகள் கழித்து எழுந்தாள். வேறு இடங்களுக்குச் சென்றோம். (படம் - 46)

---

3. கட்டண விவரம்: வயது வந்தோர் 6 டாலர்; முதியோர் (65–) 5 டாலர்; சிறுவர் (3–12) 3 டாலர்; (2, 2–க்குக் கீழ் இலவசம்). கார் நிறுத்த 3 டாலர்

பாதையோரங்களில் ஆங்காங்கு பல்வேறு வண்ண மலர்கள் மிளிரும் சிறு சிறு செடி வகைகள் அழகான முறையில் அமைக்கப் பெற்றுள்ளன. பல இடங்களில் பச்சைப் பட்டு விரித்தாற் போன்ற பாங்குகளில் புல் வெளிகள் பார்ப்போர் கட்புலனைக் கவர்வதாக உள்ளன. சிறுவர்களும் குழந்தைகளும் இவ்விடங்களில் குதித்தும் ஓடியாடியும், படுத்தும் களித்தும் விளையாடுவதைக் காண முடிகின்றது. சில இடங்களில் சிறுவர்கள் மெல்லிய இரப்பராலான பந்துகளை தூக்கியெறிந்து களிப்பதையும் காண்கின்றோம். சில இடங்களில் புல்வெளிகளைச் சுற்றியுள்ள மேடைகளில் பல்வேறு வகையான வண்ணப் பூச்சுகள் பூக்கும் சிறு சிறு செடிகள் வளர்க்கப்பெற்று புல்வெளிக்கு பொலிவினைத் தருமாறு அமைந்துள்ளது.

இந்தத் தோட்டத்தில் எங்கள் மனத்தைக் கவர்ந்தது அருகிலுள்ள பெரிய ஏரி[4]. அதிலுள்ள நீர்தான் இத்தோட்டத்திற்குப் பயன்படுத்துகிறார்கள். ஓரிடத்தில் சுமார் அரை ஏக்கர் நிலப்பரப்பில் பள்ளத்தில் அமைந்த தோட்டம்[5]. இதில் சிறு சிறு அழகான புல்வெளிகளும் அவற்றைச் சுற்றிலுமுள்ள விளிம்புகளில் அழகான வரிசைகளில் வண்ணப் பூக்கள் பூக்கும் சிறு சிறு செடிகளும் பார்ப்போர் கண்ணையும் கருத்தையும் கவர்வனவாகவுள்ளன. கலை மெருகு அமைந்த இச் சிறு தோட்டத்தைக் காண்போர் எவரும் இதனை மறக்க முடியாது. என் பேத்தி அப்படியே நின்று விட்டாள். (படம் - 47)

ஓரிடத்திற்கு வருகின்றோம். அங்கு மாபெரும் மரங்கள். நெருக்கமான இடங்களில் அவற்றின் உச்சிகளே கண்ணுக்கு எட்டா. பளபளப்பான கனத்த அடிமரங்களினிடையே புகுந்து சென்று உலவினோம். ஓரிடத்தில் பேத்தி அப்படியே நின்று விட்டாள். அரவிந்தன் அந்நிலையில் ஓர் ஒளிப்படம் எடுத்தான். மரங்களிடையே புகுந்து வெளிவந்தோம். (படம் - 48)

அற்புதமான மர வகைகள் கண்ணையும், கருத்தையும் கவர்வனவாகத் திகழ்கின்றன. ஒரு பெரிய மரம்; நம்மூரில் காணும் புன்னை மரத் தோற்றம். அதில் நாரத்தை அளவு பெரிய வெள்ளை மலர்கள்; சில பூக்காமலும், சில சிறிதளவு மலர்ந்தும், சில நன்றாக மலர்ந்தும் காணப் பெறுகின்றன. இந் நிலையில் மரக் காட்சிகளும் உள்ளத்தைக் கவர்கின்றன. அடுத்து இன்னொரு பெரிய மரம். மரம் முழுவதும் சிறிய இலைகள், தட்டைப் பயறு அளவுள்ள ஆனால், மிகச் செந்நிறம் கொண்ட பொருள்கள் நிறைந்து காணப் பெறுகின்றது. மரத்திலும் இலைகள் நடுவே இப்பொருள் நிறைந்து காணப் பெறுகின்றது. மரத்தின் கீழும் இவை ஏராளமாக உதிர்ந்து காணப் பெறுகின்றன. இன்னும் பல வகை மரங்கள். அவற்றையெல்லாம் எடுத்துக் காட்ட இடம் போதாது. அதனால் அவை தவிர்க்கப் பெறுகின்றன.

---

4. White Rock Lake 5. Sunken Garden

நாங்கள் சென்ற அன்று சிறுவர்கள், சிறுமியர்கள் கூட்டம் இரண்டு மூன்று பள்ளிகளிலிருந்து சுற்றுலா வந்திருந்தார்கள் போலும். எங்களைப் பல சிறுவர்கள், சிறுமிகள் 'ஹெல்லோ' என்று இன்முகத்துடன் வரவேற்கும் பாவனை எங்களை மகிழ்வித்தது. அவர்களே திரும்பும் நிலையில் இல்லம் நோக்கித் திரும்பிக்கொண்டிருக்கும்போது எங்களை நோக்கி 'பை-பை' என்று கூறி மகிழும் பாவனை எங்களைக் களிப்புக் கடலில் ஆழ்த்தியது. அனைத்தையும் அலைந்து பார்ப்பதற்கு ஆசைதான். ஆனாலும் காலம் இடந்தரவில்லை; கால்களிலும் வலிவு இல்லை! சக்கர நாற்காலிகளில் சென்றாலும் சில இடங்களில் இறங்கி உள்ளே சென்று பார்க்க வேண்டிய இடங்களும் இருந்தன. ஏதோ பார்த்தவரை மகிழ்ச்சி அடைந்தோம்.

அடுத்து தாழ்ந்த நிலையிலுள்ள ஒரு சிறு தோட்டத்தைப் பார்க்க விழைகின்றோம். அதன் சிறு நுழைவாயில் கண்ணில் படுகின்றது. அத்தோட்டம் ஒரு தனியான இடத்தில் அமைக்கப்பட்டிருந்தது. நுழைவாயிலைக் கடந்து தோட்டத்திற்கு வருகின்றோம். சக்கர நாற்காலிகளை வெளியே நிறுத்திவிட்டுத் தோட்டத்திற்குள் புகுகின்றோம்.

இந்தத் தாழ்ந்த நிலையிலுள்ள தோட்டம் கண்ணுக்கும், கருத்திற்கும் சிறந்த விருந்தாக அமைகின்றது. நாங்கள் தனித்தனியாகப் பிரிந்து சுற்றிப் பார்க்கின்றோம். அங்குள்ள பச்சைப் பட்டு விரித்தாற் போன்ற புல் தரை எவரையும் ஈர்க்கும் தன்மை பெற்றது. அடியேன் தனியே சென்று காட்சிகளைக் கண்டு களிக்கின்றேன். துணைவியாரும் அவர்போக்கில் நோட்டம் விடுகின்றார். சுமார் இருபது மணித்துளிகள் இங்கு கழிகின்றன.

தோட்டத்தை விட்டு வெளியேறி சக்கர நாற்காலிகளில் அமர்ந்தவண்ணம் பல இடங்களைச் சுற்றிப் பார்க்கின்றோம். அடர்த்தியாக மரங்கள் உள்ள இடம். அங்கு ஓரிடத்திற்கு சிறுசிறு அருவிகள் கொட்டுகின்றன. அற்புதமான காட்சிகள். அரவிந்தன் இக்காட்சிகளை ஒளிப்படங்களில் அமைக்கின்றான். (படம் - 49)

அவ்விடத்தைவிட்டு நீங்கி சக்கர நாற்காலிகளில் சுற்றி வரும்போது ஒரு மலர்வனத்திற்கு வர நேரிடுகின்றது. அடர்த்தியான மரத்தோப்பிற்கு முன்பாக இத்தோட்டம் அமைந்திருந்தது. எங்கிருந்தோ பூக்களை வாரிக் கொண்டு வந்து தரையில் கொட்டிய மாதிரி பூக்கள் அடர்த்தியாக நெருங்கிப் பூத்திருந்த காட்சி. என் பேத்தி மீண்டும் அதில் சொக்கி விட்டாள்; உட்கார்ந்து விட்டாள்; எழுந்திருக்க மனம் இல்லை. (படம் - 50)

ஒரு வழியாக எழுந்து சுற்றி வரும்போது மீண்டும் தலை சுற்றும்படியான அற்புதக் காட்சி. சுற்றுப்புறம் அடர்த்தியான மரங்கள். முன்புறம் சுற்றிலும் நெருங்கிய அழகான மலர்ச் சோலைகள். இக்காட்சியை நோக்குபவர்கள்

திரும்பி மீண்டும் வர நினைப்பர். இக்காட்சியைக் கண்டுகளித்த வண்ணம் திரும்புகின்றோம். (படம் - 51, 52, 53, 54, 55)

ஓரிடத்தில் கறுப்பர்[6] இனத்தைச் சேர்ந்த ஒரு மூதாட்டியைக் காண்கின்றோம். வேட்டி கட்டியுள்ள நானும் சேலையணிந்துள்ள என் மனைவியும் அப் பெருமாட்டிக்கு விநோத மனிதர்களாகக் காணப் பெற்றோம் போலும்! அவர் என்னிடம் பேச்சுக் கொடுக்கிறார்.

**வினா:** 'நீங்கள் எந்த ஊரைச் சேர்ந்தவர்கள் ?'

**விடை:** 'எங்கள் ஊர் மதராஸ், தமிழ்நாடு, இந்தியா'

**வினா:** 'உங்களுக்கு அமெரிக்கா பிடித்திருக்கிறதா ?

**விடை:** 'பிடித்திருக்கிறது. சுற்றிப் பார்த்து மகிழ்ச்சி அடைகின்றோம்'

**வினா:** 'நீங்கள் இங்கேயே தங்கி விடுவதற்கு விரும்புகிறீர்களா ?'

இந்நிலையில் நான் வினா விடுக்கின்றேன். அவர் மறுமொழி யளிக்கின்றார்.

**வினா:** 'உங்கட்குத் தாயார் இருக்கிறார்களா ?'

**விடை:** 'ஆம், இருக்கிறார்கள்'

**வினா:** 'நீங்கள் அவர்களை மறக்க முடியுமா ?'

**விடை:** 'முடியாது; அவர் என்னைப் பெற்றவர்'

நான் "இந்தியா எங்களைப் பெற்ற நாடு. அது தாய் நாடு. ஆகவே அதனை மறக்க முடியாது. எங்கள் மகன், மருமகள், பேரர்கள், பேத்திமார் இங்குப் பிழைப்பின் நிமித்தம் அலுவல்கள் பார்க்கிறார்கள். எங்கள் மகன் குடும்பம் '**பச்சை அட்டை**'[7] பெற்று நிரந்தரக் குடிமக்களாகி விட்டார்கள். நாங்கள் அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி மூன்று மாத காலம் தற்காலிகமாக வந்துள்ளோம். ஜூன் 24-25 திரும்புகிறோம்" என்று சொன்னேன்.

இருவரும் 'கை குலுக்கி'ப் பிரிந்தோம். பார்த்துக்கொண்டே திரும்புகிறோம். கார் விட்ட இடத்திற்கு வந்து காரில் ஏறி இல்லம் ஏகுகின்றோம். பகல் 1 மணிக்கு இல்லம் வந்தடைந்தோம்.

## 5. தமிழ்ச் சங்கம்

இங்கு என் பேத்தி மிருணாளினி அரும் பாடுபட்டு தமிழ்ச் சங்கக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தாள். சிறு வயது முதல் அறிவுக் கூர்மையுடையவள். எடுத்த காரியத்தை மிக்க திறமையுடன் செய்பவள் என்பதை நான் அறிந்தவன்.

---

6. Nigro 7. Green card

*இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து*
*அதனை அவன்கண் விடல்* - குறள் 517

என்பதற்கிணங்க தமிழார்வம் மிக்க திரு. பாலா. சுவாமிநாதனிடம் பொறுப்பைத் தந்து ஏற்பாடு செய்தமையால் கூட்டம் சிறப்பாக அமைந்தது. அவள் இல்லத்திலிருந்து 15 கல் தொலைவிலுள்ள **பிளானோ** என்ற நகரில் கூட்டம் நடைபெற ஏற்பாடு செய்தாள்.

**மெட்ரோ பிலெக்ஸ் தமிழ்ச் சங்கம்**[1]: இந்தத் தமிழ்ச் சங்கம் பிளோனோ[2] என்ற நகரில் உள்ளது. டாலஸிலுள்ள என் பேத்தி மிருணாளினி இல்லத்திலிருந்து சுமார் 15 கல் தொலைவிலுள்ளது. இச் சங்கக் கூட்டம் 2002-ஆம் ஆண்டு மே 2-ந் தேதி நடைபெற்றது. தனிப்பட்ட முறையில் 1½ மணி நேரத்திற்கு மட்டிலும் தான் இசைவு வழங்கப் பெற்றிருந்தது. அந்த நேரத்திற்கும் கூட்டத்தை முடித்துக்கொள்ள வேண்டிய கட்டாயமும் இருந்தது. நான் என் மனைவி, பேத்திமார் இருவர், அரவிந்தன் ஆகிய ஐவரும் பிற்பகல் 2.30 மணிக்குப் புறப்பட்டு சரியாக 3.30 மணிக்கு கூட்டம் நடைபெறும் இடத்தை அடைந்தோம். (படம் - 56)

சுமார் 30 பேர் கூடியிருந்தனர். கூட்டம் சரியாக 3.30 மணிக்கே தொடங்கப் பெற்றது. வரவேற்புரை நிகழ்த்திய திரு. கமலக் கண்ணன்[3] என்பவர் மூன்று மணித் துளிகளில் தம் உரையை முடித்துக் கொண்டார். அடுத்து "**வைணவ உரைகளில் கண்ட உளம் உகக்கும் நிகழ்ச்சிகள்**" என்ற தலைப்பில் 24 நிகழ்ச்சிகள் மிக்க சுவையாக வழங்கப் பெற்றன.

'அமெரிக்காவில் வாழும் தமிழ்ப் பெருமக்களே' என்று விளித்துப் பேசிய பேச்சின் விவரம்:

88 அகவையை எட்டும் நான், மேலுலகத்திற்குப் போகும் நிலையில் உள்ள நான், இப்பொழுது மேல் நாட்டிற்கு வந்து உங்கள் முன் நிற்கின்றேன்.

*நீர்வழிப் படூஉம் புணைபோல்*
*முறைவழிப் படூஉம் ஆருயிர்*[4]

என்பது சங்கப் புலவனின் வாக்கு. நீர்ப் பிரவாகத்தில் செல்லும் மிதவைக்கு யாதொரு தன்னாற்றலும் இல்லை; பிரவாகம் அதனைத் தன் வழியே இழுத்துச் செல்கிறது. அது செல்லும் வழி மிதவை செல்ல வேண்டியது தான். அது போலவே நாமும் (முறைவழிப் படூஉம் ஆருயிர்; முறை - வினை) நம்

---

1. Metroplex Tamil Sangam 2. Plano
3. இவரும் இவர் துணைவியார் பிரியாவும் 16-05-2002 மாலை 7.15-க்கு சலிட்டன் வுட் பூங்காவிற்குச் சென்றபோது அறிமுகமானவர்கள்; பட்டினப்பாக்கத்தில் வாழ்ந்தவர்கள்.
4. புறம் -192 'யாதும் ஊரே' என்று தொடங்கும் பாட்டில் வருவது; கணியன் பூங்குன்றனார் பாடியது.

வினைவழி சென்று கொண்டுள்ளோம். அந்த வினையே - **பிராரப்தம்**[5] எனப்படும் நுகர் வினையே - என்னை உங்கள் முன் கொண்டு வந்து நிறுத்தியுள்ளது. இனி இந்த நுகர்வினை என்னென்ன செய்யும் என்பதை இப்போது உறுதி செய்ய முடியாது. நடக்க நடக்கத் தான் அது தெரியும். இனி, பேச்சுக்கு வருகின்றேன்.

உலக மக்கள் அனுட்டித்து வரும் சமயங்கள் பலவற்றில் வைணவமும் ஒன்று. திருமால் வழிபாடு நினைப்பிற்கெட்டாத நெடுங்காலமாக நடைபெற்று வரினும் வைணவத்தை சமயமாக தத்துவ நெறி அடங்கிய சமயமாகச் செய்தது. **இராமாநுஜர்** என்னும் மகான் 120 ஆண்டுகள் இப்பூவுலகில் வாழ்ந்தவர். **ஸ்ரீ பெரும்புதூர்** என்ற சிற்றூரில் பிறந்து பிறகு காஞ்சியில் வாழ்ந்து **யாதவப் பிரகாசர்** என்ற அத்வைதியிடம் கல்வி கற்று வந்தவர். தம் வாழ் நாளின் பெரும் பகுதியை திருவரங்கத்தில் (திருச்சி மாவட்டம், திருச்சிக்கு அருகில் உள்ளது; 'கோயில்'[6] என்று வழங்கப் பெறுவது) கழித்தவர். திருவரங்கக் கோயில் வழிபாட்டு முறைகளை 'கோயில் ஒழுகு' என்ற நூலிலும், திருமலை வேங்கடவன் வழிபாட்டு முறைகளை 'திருமலையொழுகு' என்ற நூலிலும் நெறிப்படுத்தி வழங்கியவர். நம்மாழ்வார் அருளிச் செயலாகிய திருவாய்மொழி கலவாத வழிபாடு இல்லை என்று அனுதாபப்பட்ட பெருமை இவருக்கு உண்டு. இவரே தமிழ் வழிபாட்டிற்கு வித்திட்டவர் என்றும் சொல்லி வைக்கலாம்.

(1) இவர் திருக்கோட்டியூர்[7] நம்பி என்ற ஆசாரியப் பெருமகனாரிடம் திருமந்திர உபதேசம் பெற்றது வரலாற்றுப் புகழ் பெற்றது. திருமந்திரம் என்பது **'ஓம் நமோ நாராயணாய'** என்னும் வைணவ மந்திரம். திருவரங்கத்திலிருந்து 60 கல் தொலைவிலுள்ள திருக்கோட்டியூர் சென்று பெற்றது இது. 17 தடவை நடக்க வைத்து இழுத்தடித்து 18-வது தடவையில் உபதேசம் பெற்றது. இம்முறை நம்பி தனியாக வருமாறு பணித்தார். அதற்கு இராமாநுசர், "நான் துறவி; கூரத்தாழ்வான் கமண்டலம்; முதலியாண்டான் திரிதண்டம். நாங்கள் மூவரும் வருவோம்" என்று விநயமாக வேண்டினார். நம்பியும் அதனை ஒப்புக்கொண்டு சொன்னது. "இம்மந்திரத்தை ஒருமுறை சொன்னாலே வீடுபேற்றை அளிக்கும். நம்பிக்கை இல்லாத பிறருக்குச் சொல்லக் கூடாது. அப்படிச் சொன்னால் உங்கட்கு நரகம்தான் கிடைக்கும்" என்ற எச்சரிக்கையுடன் உபதேசித்தார். கருணையே வடிவாகவுள்ள இராமாநுசர்

---

5. வினை. **சஞ்சிதம்** – பழவினை, **பிராரப்தம்** – நுகர் வினை, **ஆகாமியம்** – எதிர் வினை என்று மூவகைப்படும்.
6. சைவப் பெருமக்கள் 'சிதம்பரம்' (தென் ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்தது.) என்னும் திருத்தலத்தைக் 'கோயில்' என்று வழங்குவது ஈண்டு நினைவுகூரத் தக்கது.
7. காரைக்குடிக்கு 13 கி.மீ. தொலைவில் உள்ளது. இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்தது.

சும்மா இருப்பாரா ? மறுநாளே திருக்கோட்டியூர் திருக்கோவில் கோபுரத்தின் மீது ஏறி ஊர்ப் பெருமக்கள் அனைவரையும் ஒருங்கே திரண்டு வருமாறு கூவினார். அனைவரும் வந்து திரண்ட பிறகு தாம் "ஓம் நமோ நாராயணாய" என்று சொல்லியதை அனைவரையும் ஒரே குரலாக திருப்பிச் சொல்லுமாறு பணித்தார். இங்ஙனம் பல முறை சொல்லப் பெற்றது.

இதனைச் செவி மடுத்த நம்பி, சீடன் இராமாநுசர் மீது சினங்கொண்டு தம்மிடம் வருமாறு பணித்தார். "சீடனே, நான் எச்சரித்தும் ஏன் இம்மந்திரத்தை அனைவருக்கும் சொன்னாய்? இதனால் விளையும் பலன் தெரியுமா ?" என்று சினத்துடன் வினவினார். கருணைக் கடலாகிய இராமாநுசர், "அடியேன் அறிவேன். தாங்கள் தான் இம்மந்திரத்தை ஒரு தரம் சொன்னாலும் வீடுபேறு கிடைக்கும் என்றீர்கள். பிறருக்குச் சொன்னால் நரகம்தான் அடியேனுக்குக் கிடைக்கும் என்று சொன்னதும் நினைவிலுள்ளது. மந்திரத்தைச் சொன்னவர்கள் அனைவரும் வீடுபேற்றை அடைகின்றார்கள் என்பது பற்றி அடியேனுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. அடியேன் ஒருவன் மட்டும் நரகத்திற்குப் போவதில் கவலை இல்லை. தவிர, இந்தப் பலன்கள் யாவும் கீதை வரியின் நல்லுபதேசத்தால் பெற்றவை"[8] என்று மகிழ்ச்சியுடன் தெரிவிக்கவே ஆசாரியனின் குறுகிய மனத்தில் புத்தொளி வீசி அது விரிவடைந்தது. மகிழ்ச்சிப் பெருக்கால் இராமாநுசரை நோக்கி, "அருமைச் சீடனே, நீயே பாக்கியவான். உனக்கிருக்கும் விரிந்த கருணையுள்ளத்தைப் பாராட்டுகின்றேன். இதுகாறும் வழங்கி வந்த வைணவத்துவம் இன்று முதல் '**எம்பெருமானார் தரிசனம்**' (எம்பெருமானார் - இராமாநுசர்) என்று வழங்குவதாகும்" என்று வாழ்த்தி அமைத்தார்.

(2) இராமாநுசர், யாதவப் பிரகாசர் என்ற அத்வைதியிடம் கல்வி பயின்ற பொழுது ஆசாரியர் சீடர்களுடன் கங்கைக்கு யாத்திரையாகச் சென்றார். உடையவருக்கும் (இராமாநுசருக்கும்) ஆசிரியருக்கும் கருத்து வேறுபாடு தோன்றி வளர்ந்து வரும் நிலையில் ஆசாரியர் சீடனைக் கொல்லச் சதித் திட்டம் வகுத்தார். அது இராமாநுசரின் ஒன்றுவிட்ட சகோதரர் எம்பாருக்குத் தெரியவே அவர் அதனின்றும் தம் சகோதரரைக் காப்பாற்றினார்.

(3) இராமாநுசர் துறவி, திருப்பாவை ஓதிக்கொண்டு இல்லம் தோறும் சென்று பிச்சை எடுப்பது வழக்கம்; அன்றன்றைக்குத் தேவையான அளவு வரை எடுத்து அத்துடன் நிறுத்திக் கொள்வார். அதை ஓர் இல்லறத்தில்

---

8. இரண்டாண்டுகட்கு முன் **வைணவமும், தமிழும்** என்ற பெயரில் வெளியிட்ட அரிய நூலை இப்பெருமகனாருக்கு பக்திப் படையலாக்கி ஒரு படியை அவர் திருவடியில் சமர்ப்பித்து தேவஸ்தானத்துக்கு ஒருபடி வழங்கியதை நினைவு கூர்கின்றேன்.

ஒழுகும் ஒரு வைணவர் வீட்டில் தந்து உணவாகச் செய்வித்து உண்பது வழக்கம். இவர் திருவரங்கத்திலிருந்தபோது தமக்கு நன்றாகத் தெரிந்து பழகின காஞ்சியைச் சேர்ந்தவர்களையே கோயில் ஊழியர்களாக நியமிப்பது வழக்கம். இதில் எந்த வித தீய எண்ணமும் இல்லை. இதனால் திருவரங்கத்தைச் சார்ந்த சிலர் இராமாநுசர்மீது காழ்ப்பும், வெறுப்பும் கொண்டிருந்தனர். இவர்களில் ஒருவர் இவருக்கு அமுது படைக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட வைணவர். இவர் இராமாநுசரைத் தீர்த்துக்கட்ட நினைக்கின்றார். ஒரு நாள் நஞ்சு கலந்த அமுதைத் தயாரிக்குமாறு தன் மனைவியிடம் சொல்கிறார். கணவன் சொல்லை மீறினால் தனக்கு நரகம் தான் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடைய உத்தமி அவள்; ஆசாரியப் பெருமகனுக்கு இதனைப் படைத்தால் அதனை விடக்கொடிய நரகம் உண்டு என்று நம்புபவள்.

இப்பெருமாட்டி உடையவரை அமுதுக்கு அழைத்துச் செல்வதற்கு முன் ஒருவித மரியாதையையும், அமுது உண்டபின் அனுப்பும்போது ஒருவித மரியாதையையும் செய்வது வழக்கம். ஆனால் விடங்கலந்த அமுதை உண்ண வந்த நாளன்று உண்டபின் செய்து அனுப்பும் மரியாதையை முதலில் செய்து விட்டார். இராமாநுசரும் உண்ணாமல் திரும்பி விட்டார். இன்னும் இவருடைய கைங்கரியத்தை ஏற்க வேண்டும் என்று எண்ணிய அரங்கநாதப் பெருமானே இவரைக் காப்பாற்றிவிட்டான் என்று நினைக்கத் தோன்றுகின்றது. 18 நாட்களாகத் தமது சீடன் உணவு கொள்ளவில்லை என்று கேள்வியுற்ற திருக்கோட்டியூர் நம்பி தம் சீடர்களுடன் திருவரங்கத்துக்கு வருகின்றார். தமது ஆசாரியப் பெருமகனார் திருவரங்கத்திற்கு எழுந்தருள்கின்றார் என்ற செய்தியைக் கேள்வியுற்ற இராமாநுசரும் தம் சீடர் குழாத்துடன் அவரை வரவேற்கத் தயாராகின்றார்.

இரண்டு "கோஷ்டிகளும்" மே மாதம் கோடை வெப்பம் உச்ச கட்டத்தில் இருக்கும் நிலையில் காவிரி சுடு மணலில் சந்திக்கின்றனர். இராமாநுசர் 'அடியேன் தாசன்' என்று ஆசாரியர் முன் நிலத்தில் (சுடு மணலில்) வீழ்ந்து வணங்குகின்றார். ஆசாரியர் விழித்த கண் இமைகள் மூடாமல் ஒன்றும் பேசாமல் பார்த்தவண்ணம் உள்ளார். 18 நாட்கள் உணவின்றி வதங்கியிருக்கும் உடையவரின் உடல் சுடுமணலில் துடிக்கும் நிலையைக் காணும் சீடர் குழாம் கண்களில் நீர்த்துளிகள் சொட்டுகின்றன. மனதிற்குள் கோட்டியூர் நம்பியைக் கடிகின்றனர். இராமாநுசரின் சீடர்களில் ஒருவரான 'கிடாம்பி ஆச்சான்' என்பவர் சுடு மணலில் வீழ்ந்து உடையவர் பெருமானை தம் உடலின்மீது தூக்கிக் கிடத்திக்கொள்ளுகின்றார். உடனே நம்பி "எழுந்திருங்கள் இருவரும்" என்று பணிக்கின்றார். தொடர்ந்து "கிடாம்பி,

இன்று முதல் நீ மடப் பள்ளி ஆச்சான். உடையவருக்கு அமுது படைப்பது நின் பொறுப்பு'' என்று ஆணையிட்டார். சுடு மணலில் தவித்து நிற்கும் சீடர்களின் உள்ளம் குளிர்ந்தது.

**(4) அத்துழாய் செயல்:** திருப்பாவையை ஓதிக்கொண்டு பிச்சை ஏற்பதாலும் ஆண்டாள் பெருமாட்டியின் மீது ஒப்பற்ற மதிப்பும், பக்தியும் திருப்பாவை மீது மிக்க ஈடுபாடும் கொண்டிருப்பதாலும், உடையவர் **'திருப்பாவை ஜீயர்'** என்று அக்கால மக்களால் வழங்கப் பெற்றார். மடாதிபதியாக இருந்தபோது கூட ஒரு நாள் இவ்வாறு திருப்பாவையை ஓதிக்கொண்டு வரும்போது தம் ஆசாரியப் பெருமான் திருமாளிகை முன் வர நேர்ந்தது. **'உந்துமதகளிற்றன்'** (திருப். 18) என்ற பாசுரமும் அவர் தம் திருவாயினின்றும் புறப்பட்டுக் கொண்டிருந்தது. திருப்பாவையில் ஆண்டாள் தன் தோழியர் நப்பின்னைப் பிராட்டியாரை எழுப்புவதாக அமைந்த பாசுரம் கற்பனையில் கண்ணன் வாழ்ந்த காலத்தில் கோலச் சிறுமியர் உருக்குமிணிப் பிராட்டியாரை எழுப்புவதாக அமைந்த நிகழ்ச்சி ஆண்டாள் தம்மைக் கண்ணன் காலத்தில் வாழ்ந்த ஆயச் சிறுமியர்களில் ஒருத்தியாகக் கருதிக்கொண்டு பாடும் பாசுரம் ஆண்டாள் கற்பனையில் கோகுலச் சிறுமியின் அநுபவத்தைப் பெற்றது போல் இராமாநுசரும் கற்பனையில் கண்களை மூடிக்கொண்டு ஆண்டாள் பெற்ற அநுபவத்தைப்பெற்ற நிலையை மானசீகமாகக் கண்டு மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கின்றார். நம்பிகளின் திருவாசலை நெருங்கி வருவதற்கு முன் பாசுரத்தில் பாதிக்கு மேல் ஓதி முடிந்தது.

> பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர்பாடச்
> செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப
> வந்து திறவாய்

என்ற பகுதி இவர் திருவாயினின்றும் மிடற்றொலியாக வந்து கொண்டிருந்தபோது இவர் நம்பிகளின் திருவாசலை அடைந்து விட்டார்.

இச்சமயத்தில் திருமாளிகையினுள்ளே பந்தும் கையுமாக விளையாடிக் கொண்டிருந்தாள் திருமணமாகாத **அத்துழாய்** என்ற பெரிய நம்பிகளின் திருமகள். கதவு தாளிடப் பெற்றிருந்தது. **'பந்தார் விரலி ....... வந்து திறவாய்'** என்ற பாசுர அடிகள் காதில் விழும் நிலையில் பந்தும் கையுமாக இருந்த அப் பெண்மணி பளிச்சென்று கதவைத் திறந்தாள். 'பந்தார் விரலி' என்று பாசுரம் அதே கோலத்தோடு கையில் பாத்திரத்தில் அரிசியும் கொண்டு மணிக் கதவம் தாள் திறந்த பெண்மணி இராமாநுசரின் மானசீகமான திருக் கண்களுக்கு நப்பின்னைப் பிராட்டியாகவே இலக்காயினாள்.

பெண்மணியின் வளையொலி பின்னைப் பிராட்டியின் வளையொலியாகவே கேட்டது.

இந்த மானசீகமான ஆனந்தக் காட்சிக்கு இராமாநுசரின் உள்ளம் திறை கொடுத்தது. அப்பெண்மணியை பின்னைப் பிராட்டியாகவே கருதி தம் பொன்னொத்த மேனி புழுதி படியத் தரையில் வீழ்ந்து தெண்டனிட்டார். இந்நிலையில் 'அத்துழாய்' பரபரப்புடன் ஓடி, தன் தந்தையாரிடம் "ஜீயர் என்னைக் கண்டதும் மூர்ச்சித்து விழுந்தார்" என்று தெரிவித்தாள். உடனே நம்பிகள் " '**உந்துமதகளிறு**' அநுசந்தமாயிருக்கும்" என்றார். பிறகு வாசலுக்கு வந்து எம்பெருமானாரைக் கண்டு "வாரும் ஜீயரே, நானும் இப்பாசுரத்தை ஓதி உணர்ந்திருக்கின்றேன். ஆனால் உம்மைப் போல் அநுபவித்ததே இல்லை" என்று இவர் தம் பக்தியையும் பாசுரத்தில் கொண்டிருந்த ஈடுபாட்டையும் பாராட்டிப் பேசி மகிழ்ந்தார்.

ஆண்டாளும் இராமாநுசரும் பெற்ற அநுபவத்தை உளவியலார் 'ஒட்ட உணர்தல்' (Empathetic feeling) என்று கூறுவர். இங்கு ஆண்டாளும், இராமாநுசரும் கோபியருள் ஒருத்தியாகவே ஆய்விடுகின்றனர். இருவருமே கோபியின் உணர்ச்சியைப் பெரிதும் பெற்று அநுபவிக்கின்றனர்.

**மேலும் சில நிகழ்ச்சிகள்:** அன்பர்களே, இந்த நான்கு நிகழ்ச்சிகளும் வியாக்கியானத்தில் கண்டவையே. மேலும் சிலவற்றைக் காட்டுவேன்.

**5. சாந்தீபினி வரலாறு:** புராணங்களிலும், இதிகாசங்களிலும் காணப் பெறாத ஒன்றிரண்டு நிகழ்ச்சிகள்பற்றிய குறிப்புகள்பற்றி ஆழ்வார் பாசுரங்களில் காணப் பெறுகின்றன. அவற்றை உரையாசிரியர்கள் நன்கு விளக்கியுள்ளனர். அத்தகையனவற்றுள் ஒன்று ஈண்டு குறிப்பிடுவது -

மாதவத்தோன் புத்திரன்போய்
  மறிகடல்வாய் மாண்டானை
ஓதுவித்த தக்கணையா
  உருவுருவே கொடுத்தானூர்

– பெரியாழ். திரு. 4 : 8 : 1

என்ற பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்தில் வருவதாகும்.

கண்ணன் வாழ்ந்த காலத்தில் **சாந்தீபினி** என்னும் ஓர் அந்தணர் வாழ்ந்தார். அவரிடம் கண்ணன் சகல சாத்திரங்களையும் கற்றான். அக்காலத்தில் கட்டணம் செலுத்தி யாரும் கல்வி கற்பதில்லை. சமூகம் பொருள்களை இலவசமாக வழங்கி ஆசிரியர் குடும்பத்தைப் பார்த்துக்கொள்ளும். சீடர்கள் ஆசிரியருக்கும், குடும்பத்திற்கும் பல்வேறு பணிவிடைகள் செய்வர்; இலவசமாகக் கல்வி பெறுவர். பல்லாண்டுகள்

முயன்று கற்க வேண்டிய சகல சாத்திரங்களையும் கண்ணன் ஒரு சில மாதங்களில் கற்றுத் தெளிந்தான். ஆசிரியருக்கு ஒரே வியப்பு. அவன் ஓர் அவதார புருஷன் என்றே கருதினார். குரு தட்சிணை வழங்க வந்தபோது "கடலில் பன்னிரண்டு ஆண்டுகட்கு முன்னர் மேற்குக் கடலில் பிரபாச தீர்த்தத்தில் துறையில் நீராடும்போது மூழ்கி இறந்த தம் மகனைக் கொண்டுவந்துதர வேண்டும்" என்று தம் விருப்பத்தைத் தெரிவித்தார். கண்ணனும் அங்ஙனமே கொண்டு வந்து தருவதாக ஒப்புக் கொண்டான்.

கண்ணபெருமான் வருணனால் விவரம் அறிகிறான். சங்கு வடிவமுள்ள **பாஞ்சசன்னியம்** என்ற ஓர் அசுரன் அவனைக் கைப்பற்றிச் சென்றதாக அறிகின்றான். கடலில் குதித்துச் செல்லும்போது ஒரு சங்குக் கூட்டத்தைக் காண்கின்றான். சங்குகளின் கூட்டத்தைச் 'சங்கம்' என்று வழங்குவது மரபு. பிற்காலத்தில் இச்சொல் மக்கட் கூட்டத்திற்கும் வழங்கும் மரபு உண்டாயிற்று என்பதை நாம் அறிகின்றோம். முதலில் பார்த்த சங்குக் கூட்டத்தில் **'வலம்புரிச் சங்கு'** ஒன்று நடுவில் இருக்க ஆயிரக்கணக்கான இடம்புரிச் சங்குகள் சுற்றி வந்துகொண்டிருந்தன. இவை யாவும் இவ்வடிவத்திலுள்ள அரக்கர்கள். இங்கு 'மகன்' காணப் பெறவில்லை. சற்றுத் தொலைவு சென்றவுடன் மற்றோர் சங்குக் கூட்டம் அவன் கண்ணில் படுகின்றது. இங்கு **'சலஞ்சலம்'** என்ற சங்கு நடுவிலிருக்க ஆயிரக்கணக்கான வலம்புரிச் சங்குகள் சுற்றி வந்துகொண்டிருந்தன. இங்கும் 'மகன்' காணப் பெறவில்லை. மேலும் சற்றுத் தொலைவு கடந்தவுடன் பிறிதொரு சங்குக் கூட்டம் காணப் பெறுகின்றது. இங்கு வருணன் குறிப்பிட்ட **'பாஞ்சசன்னியம்'** என்ற சங்கைச் சுற்றி ஆயிரக்கணக்கான சலஞ்சலம் என்ற சங்குகள் வலம் வந்து கொண்டிருந்தன. கண்ணன் அக் கூட்டத்தினுள் புகுந்து அவ்வசுரனைக் கொன்று அவன் உடலாகிய பாஞ்சசன்னியத்தை எடுத்து வாயில் வைத்து ஊதிக்கொண்டு யமபுரிக்கு எழுந்தருளி அங்கு 'யாதனை'யிற்கிடந்த சிறுவனை அவன் இறந்தபோது கொண்டிருந்த உருவம் மாறாதபடி கொண்டு வந்து தன் ஆசாரியப் பெருமகனாரிடம் தட்சிணையாகக் கொடுத்தான். இன்று திருமால் இடத் திருக்கரத்தில் சங்காகத் திகழ்வது இப்பாஞ்சசன்னிய அசுரனின் உடலே என்பதை நாம் அறிகின்றோம்.

**(6) வைதிகன் பிள்ளைகள்:** இதுவும் ஆழ்வார் பாசுரத்தில் மட்டிலும் அறியப்பெறும் கதையாகும். **"துப்புடையார்கள் தம்"** (பெரியாழ். திரு. **1. 6 : 7**) என்ற பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்தில்,

> தப்பின பிள்ளைகளைத் தனமிகு சோதிபுகத்
> தனியொரு தேர்கடவித் தாயொடு கூட்டிய என்
> அப்ப!

என்ற அடிகளில் காணப்பெறும் குறிப்பால் அறியப்பெறுவது. உரையாசிரியர்கள் இக்குறிப்பிற்கு நல்ல விளக்கம் தந்துள்ளனர்.

கதை இது: ஒரு வைதிக அந்தணனுக்கு நான்கு பிள்ளைகள். முதல் பிள்ளை பிறந்து பூமியில் விழுந்ததும் காணப்பெறவில்லை. இரண்டாவது, மூன்றாவது பிள்ளைகளின் நிலைமையும் அப்படியே. பெற்றவளும் கூட முகத்தில் விழிக்கப்படாதபடி இன்னவிடத்தில் போயுள்ளது என்பது தெரியாமல் காணவொண்ணாது மூன்று பிள்ளைகளும் போனதனாலே நான்காம் பிள்ளையைக் கருவுயிர்க்கப்போகும் தருணத்தில் வந்து "இந்த ஒரு பிள்ளையையாயினும் பாதுகாத்துத் தந்தருள வேண்டும்" என்று கண்ணபிரானை வேண்டிக்கொண்டான் அந்த வைதிகன்.

கண்ணபிரானும் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டான்; வாக்கும் தந்தான். கருவுயிர்க்கும் நிலை வரும்போது தன்னிடத்தில் வந்து தெரிவிக்குமாறு பணித்தான். இந்த நிலையில் ஒருநாள் வந்தான். ஆனால், அன்று ஒரு வேள்வியில் தான் தீட்சிதனாக இருக்க வேண்டியவனாக இருந்தான். அருகிலிருந்த பார்த்தன் தான் போய் இரட்சிப்பதாக வாக்கும் தந்து அந்தணனையும் கூட்டிக்கொண்டு கருவுயிர்க்கும், இடத்திற்கு வந்தான். அந்த இடத்தைச் சுற்றி ஈ, எறும்பு கூட நுழைய முடியாதபடி 'சரக்கூடம்' அமைத்தான். தானும் அதன் வெளிப்புறத்தில் காத்துக் கொண்டு நின்றான். அன்று பிறந்த பிள்ளையும் வழக்கப்படி மாயமாய் மறைந்தது. அதனால் மிக்க சோகமடைந்த அந்தணன், அர்ச்சுனனை நோக்கி, "அதமனே, உன்னாலன்றோ இப்பிள்ளையையும் இழக்கும்படி நேரிட்டது. வற்புறுத்தியிருந்தால் கண்ணனே வந்து காத்திருப்பான். நீயன்றோ அதனைத் தடுத்தாய்" என்று நிந்தித்து அவனைக் கண்ணபிரானிடம் இழுத்துக்கொண்டு வந்தான்.

கண்ணபிரான் அவர்களைக் கண்டு முறுவலிக்கின்றான். மாயக் கண்ணனல்லவா ? அந்த முறுவலில் ஆயிரம் பொருள் இருக்கும். "பார்த்தனை விடு; உனக்குப் பிள்ளை தானே வேண்டும். நானே கொண்டு வந்து தருகின்றேன்" என்று அருளிச் செய்கின்றான். அந்தணரையும் தேரில் ஏற்றிக்கொண்டு தானும் தேரேறி, பார்த்தனைத் தேரோட்டப் பணித்து பிள்ளையைத் தேடப் புறப்படுகின்றான். தேருக்கும், இருவருக்கும் தன் சங்கற்பத்தால் திவ்விய ஆற்றலை அருளுகின்றான். அகில உலகமும் தேடுகின்றனர். இறுதியில் தனது நிலமான பரமபதத்திற்கு வருகின்றான். விரஜை நதிக்கு இப்பால் தேரை நிறுத்தி அவர்களிருவரையும் அதிலே இருக்கச் செய்து விட்டு தான் மட்டும் உள்ளே புகுகின்றான். அங்கு தன் மூன்று தேவிமார்களையும் நான்கு பிள்ளைகளையும் காண்கின்றான். தமது

திவ்விய சுதந்திரத்தைக் காட்டுவதற்காகவும் கண்ணபிரானின் அவதார திருமேனியைப் பரமபதத்தில் பார்ப்பதற்காகவும் தாங்களே இத் தந்திரத்தைக் கையாண்டதாகவும் செப்புகின்றனர். பிள்ளைகள் நால்வரையும் ஆதி உருவத்தில் ஒன்றும் குறையாமல் கொண்டு வந்து அந்தணன் மனைவியிடம் கொடுத்தருளினான். பரமபதம் காலம் நடையாடாத தேசமாகையால் குழந்தைகள் நால்வரும் பிறந்தமேனியாக இருந்தனர் என்றும், காலம் நடையாடும் இப்பூவுலகிற்கு வந்ததும் குழந்தைகள் 3, 2, 1 வயது உருவத்துடன் இருந்ததாகவும் நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

**(7) பக்த விலோசனம்:** இதுபற்றிய குறிப்பு "**கார்த்தண் முகிலும் கருவிளையும்**" (நாச். திரு. 12 : 6) என்ற நாச்சியார் திருமொழிப் பாசுரத்தில் வருகின்றது.

வேர்த்துப் பசித்து வயிறசைந்து
வேண்டடிசில் உண்ணும்போது ஈதென்று
பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும்
பக்தவிலோசநத்து உய்த்திடுமின்

என்ற பாசுர அடிகளில் உள்ளது இக்குறிப்பு. இதனைப்பற்றிய உரையாசிரியர்கள் தரும் விளக்கத்தை ஈண்டு தருகின்றேன்.

'**பக்த விலோசனம்**' யமுனையாற்றங்கரையில் உள்ள ஓர் இடம். 'பக்தி' என்ற வடசொல்லிற்கு 'அன்னம்' என்பது பொருள்; 'விலோசனம்' என்பதற்குப் 'பார்வை' என்பது பொருள். இக்கூட்டுச் சொல் 'சோறு பார்த்திருக்கும் இடம்' என்று பொருள் தருகின்றது.

கண்ணனும், பலராமனும் இடைச் சிறுவர்களுடன் யமுனை யாற்றங்கரையில் ஆநிரைகளை மேய்த்துக் களைத்து ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தனர். இடைச் சிறுவர்களால் பசி தாங்க முடியவில்லை. அவர்கள் கண்ணனையும் பலராமனையும் தங்கட்கு உணவு ஏற்பாடு செய்யுமாறு வேண்டுகின்றனர். கண்ணன், அண்மையில் சில அந்தணர்கள் 'ஆங்கிரஸ்' என்ற வேள்வி இயற்றி வருகின்றனர் என்றும், அவர்களிடம் சென்று தங்கள் (கண்ணன், பலராமன்) பெயர்களைச் சொல்லி 'நாங்கள் இன்னாரால் அனுப்பப்பட்டவர்கள் என்று கூறி உணவு கேளுங்கள்; உண்டு பசி தீருங்கள்' என்றும் கட்டளையிட்டு அனுப்பினான். அவர்களும் அங்ஙனமே அந்தணர்கள் இருந்த இடம் சென்று தாங்கள் கண்ணன், பலராமன் ஆகியோர்களால் அனுப்பப்பெற்றவர்கள் என்று தங்களை அறிமுகப்படுத்திக்கொண்டு விநயத்துடன் விண்ணப்பம் செய்து உணவு வேண்டுகின்றனர். ஆயினும், அந்த அந்தணர்கள் இடைச் சிறுவர்களின்

பேச்சைக் கேளாது ஒழியவே, ஏமாற்றத்துடன் திரும்புகின்றனர். செய்தியைச் செப்புகின்றனர்.

கண்ணன் அவர்களிடம் "மீண்டும் செல்லுங்கள். என் பெயரையும் என் அண்ணன் பெயரையும் கூறி அந்தணர்களின் மனைவிமார்களை வேண்டுங்கள்" என்று சொல்லியனுப்பினான். அங்ஙனமே இடைச் சிறுவர்கள் சென்று தம்மைக் கிருட்டிணன், பலராமன் ஆகியோரால் அனுப்பப் பெற்றவர்கள் என்று அறிமுகம் செய்துகொண்டு தங்கட்குப் பசி தீரும்படி அமுது படைக்க வேண்டும் என்று வேண்டினர். அப்பெண்டிர்களும் கண்ணன் பெயரைக் கேட்டதற்கு மகிழ்ந்து உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்ற நால்வகை உணவுகளையும் நல்ல பாத்திரங்களில் எடுத்துக்கொண்டு கண்ணன், நம்பி மூத்தபிரான் ஆகியோர் இருக்கும் இடம் நோக்கிப் புறப்பட்டனர்; தாய்மார், தந்தைமார், மக்கள், உடன் பிறந்தோர், கணவன்மார் இவர்கள் எவ்வளவு தடுத்துச் சொல்லியும் அதனைப் புறக்கணித்து விரைந்து வந்து யமுனையாற்றங்கரைக் கண்ணனையும் நம்பி மூத்தபிரானையும் சேவித்து தாங்கள் கொணர்ந்த அமுது வகைகளைச் சமர்ப்பித்து பரமானந்தபரர்களாய் மீண்டு சென்றனர். கண்ணபிரான் அமுது வகைகளை ஆயச் சிறுவர்கட்குத் தந்து தானும் அமுது செய்து மகிழ்ந்தான்.

**(8) வெண்ணெய் உண்ட வாயன்:** இவன்பற்றிய குறிப்பு '**கொண்டல்வண்ணனை**' (அமலனாதி -10) என்று தொடங்கும் ஆழ்வார் பாடலில் '**வெண்ணெய் உண்ட வாயன் என் உள்ளம் கவர்ந்தானை**' என்று வருவது. இங்கு உரையாசிரியர்களின் விளக்கம் மிக அற்புதமாக அமைந்துள்ளது.

விளக்கம் இது: கூரத்தாழ்வான் தம் **சுந்தர பாஹுஸ்வத்தில்** பண்டு யசோதைப் பிராட்டி கண்ணனுக்கு முத்தம் கொடுத்த சுவடு இன்றும் அழகர் (திருமாலிருஞ்சோலை எம்பெருமான்) திவ்விய கன்னங்களில் திகழா நிற்கும் என்று கூறி மகிழ்ந்து அனுபவித்தாற் போல, இந்த ஆழ்வாரும் பண்டு கண்ணன் வெண்ணெய் உண்ட முடை நாற்றம் இன்னும் பெரிய பெருமாள் (அரங்க நாதன்) திருப்பவளத்தில் கமழா நிற்கும் என்று சொல்லி அனுபவிக்கின்றார். தசரத சக்கரவர்த்தி நோன்பு நோற்றுப் பெருமாளை (இராமனை) மகனாகப் பெற்றதைப் போல நந்தகோபரும் "கானாயன் கடிமனையில் தயிருண்டு நெய் பருக நந்தன் பெற்ற ஆனாயன்" என்றவாறு திருவாய்ப்பாடியில் பால் முதலிய செல்வம் அமுது செய்கைக்காக நோன்பு நோற்றுப் பெற்ற பிள்ளை கண்ணன். பெரிய பெருமாள் கொறுட்டை (உதட்டை) முகர்ந்து பார்த்தால் இப்போதும் வெண்ணெய் கமழா நிற்குமாம்.

**(9) 'ஓதிலும் உன்பேர் அன்றி மற்று ஓதாள்':** இந்த அடியால் தொடங்குவது திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழிப் பாசுரம் (பெரி. திரு. 2.7 : 5). இது தாய் பாசுரமாக அமைவது. இதற்கு உரையாசிரியர்கள் தரும் விளக்கம் இன்சுவை மிக்கது. கண்ணன் பிறந்து வளர்ந்த காலத்தில் ஓர் ஆயமங்கை இடைவிடாமல் கண்ணனையே சிந்தித்துக்கொண்டு காதலில் மூழ்கி இருந்தாள். அது கண்ட அவள் மாமி அந்தச் சிந்தனையை மாற்றி விடக் கருதி ஒரு செயல் செய்தாள். 'தயிர், நெய், பால்' முதலியவற்றை அவளிடம் தந்து விற்று வருமாறு ஏவினாள். அம்மங்கை கண்ணபிரானையன்றி வேறொன்றையும் அறியாதவளாகையால் மாமியின் நிர்பந்தத்திற்காக அப்பொருட்கள் அடங்கிய கூடையைத் தலையில் வைத்துக் கொண்டு தெருவழியே நடந்து செல்லும்போது 'தயிர்! நெய்! பால்!' என்று பேர் சொல்லி விற்பதைத் தவிர்த்து "கோவிந்தன் வாங்கலையோ கோவிந்தன்! தாமோதரன் வாங்கலையோ தாமோதரன்! மாதவன் வாங்கலையோ மாதவன்!" என்று கண்ணன் திருநாமங்களையே கூவிக் கொண்டு சென்றாளாம். அதுபோலவே இப் பரகால நாயகியும் 'ஓதிலும் உன் பேரன்றி மற்றோதாள்' என்றவளாக உள்ளாள் என்று திருத்தாயார் பேசுகின்றாள்.

**(10) அம்மங்கி அம்மாள்:** இவர் ஆண். **வரதாச்சாரி** என்பது இவர் இயற்பெயர். ஒரு நாள் இவர் இறைவனுக்குப் பாலமுதம் சமர்ப்பிக்கையில் பால் சற்றுச் சூடாக இருந்தமையால் ஊதினார். பெருமாள் 'அம்மாளோ ?' என்றாராம். அதிலிருந்து இவருக்கு "**அம்மங்கி அம்மாள்**" என்ற பெயர் ஏற்பட்டதாக வரலாறு. இவர் பற்றிய குறிப்பு "**நிலையாளா நின் வணங்க**" என்ற திருமங்கையாழ்வார் திருப்பாசுரத்தில் (பெரி. திரு. 3.6 : 9) வருவது.

'நீயாள, வளையாள மாட்டோமே'

என்ற இறுதியடியில் உள்ளது இக் குறிப்பு. **மகள் பாசுரமாக** நடைபெறுவது இது. விளக்கம் இது: அம்மங்கி அம்மாள் என்ற ஆசிரியர் நோயால் வருந்தி இருந்தபோது **நஞ்சீயரும், நம்பிள்ளையும்** அவரைக் கண்டு நலம் விசாரிக்க எழுந்தருள்கின்றனர். அப்போது அவர் மிகவும் கிலேசப்படுவதைக் கண்டு நஞ்சீயர் "தேவரீர், சாதாரண - சாமானிய - மனிதரல்லவே; எவ்வளவோ பகவத் பாகவத கைங்கரியங்கள் பண்ணியுள்ளீர்; எம்பெருமான் திருக்குணங்களைச் சொல்லி அநுபவித்தே பொழுதுபோக்கியுள்ளீர்; இப்படியிருக்க தேவரீரையும், மற்றவர்களையும் போலவே எம்பெருமான் கஷ்டப்படுத்துகிறானே!" என்கின்றார். அதற்கு அவர் "நீயாள வளையாள மாட்டோமே" என்பதல்லவா கலியன் (திருமங்கையாழ்வார்) பாசுரம்!

"எம்பெருமானுக்கு வாழ்க்கைப்பட்டால் கிலேசப்பட்டுத்தானே இருக்க வேண்டும்" என்றாராம். பிறகு வெளியில் எழுந்தருளியபின் நஞ்சீயர் நம் பிள்ளையை நோக்கி "பார்த்தீரா, இவர் எண்ணத்தை; என்ன பாசுரம் எடுத்துக் காட்டினார்" என்று அருளிச் செய்து மகிழ்ந்தனராம்.

**(11) புள்ளம்பூதங்குடியின் இயற்கை வளம்:** இது பற்றிய குறிப்பு திருமங்கையாழ்வார் பாசுரம் ஒன்றில் (பெரி. திரு. 5.6 : 2) வருவது.

*பள்ளச் செறுவில் கயலுகளப்*
*பழனக் கழனி யதனுள்போய்*
*புள்ளுப் பிள்ளைக்கு இரைதேடும்*
*புள்ளம் பூதங் குடிதானே*

என்பன இப்பாசுரத்தின் இறுதியடிகள். இக்குறிப்பு இதில் உள்ளது. இது **பட்டரின் நிர்வாகமாக** வருவது. முற்காலத்தில் **ஆலவாயுடையான்** என்ற தமிழன் ஒருவன் பட்டரிடம் வந்து ஒரு வினா விடுத்தான். "பள்ளச் செருவில் கயல்கள்" என்றபோதே அவ்விடத்து வயல்களில் மீன்வளம் வெளிவந்து விட்டது; அப்படி இருக்க "புள்ளுப் பிள்ளைக்கு இரை தேடும்" என்று சொல்லுவது எதற்கு ? மீன் அரிதாக இருந்தாலல்லவா இரை தேட வேண்டும் ? மீன்கள் குறைவற்றுக் கிடக்கும்போது தேடிப் பிடிப்பதாகக் கூறுவது பொருந்தாதல்லவா ? என்று வினவினான். இதற்குப் பட்டர் அருளிச் செய்தது. "பிள்ளாய், நீ நன்கு கற்றவனாயினும் சொற்போக்கு அறியவில்லை; "பிள்ளைக்கு இரை தேடும்" என்று உள்ளதைக் காண்பாயாக; அங்குள்ள மீன்கள் நிலவளத்தாலே தூணும் துலாமும் போலே தடித்திருக்கும்; அவை பறவைக் குஞ்சுகளின் வாய்க்குப் பிடிக்கமாட்டாவாகையால் உரிய சிறிய மீன்களைத் தேடிப்பிடிக்க வேண்டுமல்லவா ?" என்பதாகும்.

இங்கு பட்டரைப்பற்றிச் சில சொற்கள்: இவர் கூரத்தாழ்வானின் திருமகன்; சகோதரர் சீராமப் பிள்ளை. இருவரும் இரட்டையர். நம்பெருமாள் வரப்பிரசாதத்தாலே திருவவதரித்த இவருக்குப் பராசரபட்டர், வேத வியாசபட்டர் என்று திருநாமம் சாத்தினார் எம்பெருமானார். கூர்மையான அறிவுடைய இவரைப் பற்றிய உரையில் ஏராளமான குறிப்புகள் உள்ளன. அவை 'பட்டர் நிர்வாகங்கள்' என்ற சிறப்புப் பெயரால் தெரிவிக்கப் பெறுவனவாயின. இவர் தம் கூரிய அறிவுக்கு ஓர் எடுத்துக்காட்டு தருவேன். **'உடம்புருவில் மூன்று ஒன்றாய்'** (பெரி. திரு. 2.5:2) என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தில் **'வரை மீகானில் தடம் பருகும் கருமுகிலை'** என்ற சிறப்புச் சொற்றொடருக்கு நஞ்சீயர் பொருள் சொல்லும் போது வேறுவிதமாகச் சொல்லிக்கொண்டிருக்க அதைக் கேட்டுக் கொண்டிருந்த **பிள்ளையழகிய**

**மணவாளப் பெருமாளரையர்** பட்டர் நிர்வாகம் இப்படியல்லவா ? என்று நினைப்பித்தாராம். அது இது: மலை மீதுள்ள காடுகளில் சிறுவனாகிய கண்ணன் கன்றுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்போது இளங்கன்றுகள் அங்குள்ள பெரிய தடாகங்களில் நீர் அருந்தப் போகும்போது நீரில் முன்னே இறங்கிக் குடிக்க அஞ்சுமாம். அப்போது அக்கன்றுகட்கு நீர் அருந்தும் விதத்தைப் பழகுவிப்பதற்காகக் கண்ணன் தன் முதுகில் கைகளைக் கட்டிக் கொண்டு கவிழ்ந்து நின்று தண்ணீரமுது செய்து காட்ட எல்லாக் கன்றுகளும் நீர் பருகுமாம். இச்சொற்றொடரில் வரும் 'கருமுகில்' என்பது கண்ணன். இது கண்ணன் செயலைக் குறிப்பிடுவதாகக் கூறுவாராம் பட்டர்.

**(12) வாழையிலையில் நடுத்தண்டு:** இது பற்றிய குறிப்பு **'வாதமாமகன் மர்க்கடம்'** (பெரி. திரு. 5.8 : 2) எனும் திருமங்கையாழ்வார் திருவரங்கம் பற்றி அருளிய பாசுரத்தில் வருவது.

> வாத/மாமகன் மர்க்கடம் விலங்கு
> மற்றோர் சாதியென் றொழிந்திலை, உகந்து
> காதல் ஆதரம் கடலினும் பெருகச்
> செய்த கவினுக் கில்லைகைம் மாறென்று
> 'கோதில் வாய்மையி னானொடும் உடனே
> உண்பன் நான்' என்ற ஒண்பொருள் எனக்கும்
> ஆதல் வேண்டும்.

(வாதம் - வாயு தேவன்; மர்க்கடம் - குரங்கு; ஆதரம் - ஆசை; தகவு - உபகாரம்; கோது - குற்றம்; உடனே உண்பன் - உடனிருந்து உண்பேன்; ஒண் பொருள் - சிறந்த பொருள்)

என்ற அடிகளில் உள்ளது இக் குறிப்பு. இராமபிரான் அநுமனுடன் ஒக்க உண்ட வரலாறு இதில் உள்ளது. (வாஸிஷ்ட இராமாயணம்). முன்பெல்லாம் வாழை இலையில் தாமரை இலையிலுள்ளது போல் இடை நரம்பு இல்லை. இப்பொழுது இராமன் அநுமனை தன் எதிரில் அமரச் செய்து தனது இலையில் ஒரு பாதியிலேயே அவன் உண்ணுமாறு அவ்விலை நடுவில் தன் கையினால் ஒருவரையறை கீறினாராம். அதுவே இன்றைய வாழை இலைகளில் நரம்பாக அமைந்து விட்டதாம். விலங்கையும் அதன் இழிவு பாராமல் ஆட்கொண்டு அதன் பக்கல் சிறப்பான கருணை செய்த பாங்கு இப்பாசுரத்தில் வருகிறது. அங்ஙனமே இழிவு பாராமல் தம்மையும் ஆட்கொள்ளப் பேரருள் புரிய வேண்டும் என வேண்டுகின்றார் ஆழ்வார்.

**(13) 'திருநறையூர்த் தேனே'** (பெரி. திரு. 6.3 : 3) இத் தொடர் திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் சந்நிதி) மானேய்நோக்கு நல்லார்' என்ற

முதற் குறிப்பையுடைய பாசுரத்தில் வருவது. ஒப்பிலியப்பன் சந்நிதியைச் சேவித்து முடித்துக்கொண்டு 'திருநறையூர்' என்ற திவ்விய தேசத்தை நோக்கி வருகிறார் திருமங்கையாழ்வார். இந்த இரண்டு திவ்விய தேசங்களும் தஞ்சை மாவட்டத்தில் சில கல் தொலைவில் இருப்பவை. சாரநாதப் பெருமாள் எழுந்தருளியிருக்கும் **திருநறையூர்** பற்றி ஆழ்வார் (பெரி. திரு. 6.4 முதல் 7.3 முடிய) 100 பாசுரங்கள் பாடப் போகின்றார் என்ற குறிப்பு இத் தொடரில் இருப்பதாகக் கூறுவர் **பட்டர்.** 'திருநறையூர் பெருக்கிற்கு சினையாறு படுகிறது கிடாய்' என்பது அவருடைய குறிப்பு.

**விளக்கம்:** நீரற்றுக் காய்ந்து கிடக்கும் காவிரியில் மேட்டூர் அணை திறந்துவிட்டபின் வெள்ளப் பெருக்கு வந்து கொண்டிருக்கும்போது நீர் வருவதற்கு முன்னே சில அடித் தொலைவில் நீர் பொசிந்து காட்டும்; நீரின் வெள்ளம் வருவதை ஈரத்தால் காட்டும். அது போல திருவிண்ணகரிலிருந்து மங்கை மன்னனின் பாசுரப் பெருக்கு (100 பாசுரங்கள்) வருவதை இத்தொடர் 'பொசிந்து' காட்டுகின்றது என்பதாகும். பட்டரின் கூரிய அறிவு இங்ஙனம் பொசிந்து காட்டுவதைப் போல் வேறு எவர் அறிவு காட்ட முடியும் ?

**(14) நள்ளி யூடும் வயல் சூழ்ந்த நறையூர் :** இது நறையூரைப் பற்றிய திருமங்கையாழ்வார் பாசுரத்தின் **'வள்ளிகொழு நன்முதலாய'** (பெரி. திரு. 6.7 : 6) என்று தொடங்கும் பாசுரத்தின் இறுதியடியாகும். இதன் விளக்கம் 'பட்டர் நிர்வாகம்' என்பதன்பாற்பட்டது. திருநறையூரின் வயல் வளத்தை விளக்குவது. தாமரைப் பூவில் பாயல் கொண்டிருந்த ஆண் நண்டின் (அலவன்) முகத்தைப் பார்த்துப் பெண் நண்டு (நள்ளி) பிணங்கும் என்பது இதன் பொருள். பட்டர் தரும் விளக்கம்: ஓர் ஆம்பல் மலரில் நண்டுத் தம்பதிகள் இனிது வாழ்கின்றன. ஒரு நாள் ஆண் நண்டுக்கு கருக்கொண்டுள்ள தன் பேடைக்கு இனிய பொருள்களைக் கொண்டு வந்து தர வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. ஆம்பல் குவியும் அதிகாலையில் தாமரைப் பூ மலரும் நேரத்தில் அதனை நோக்கிச் சென்றது. அதிலுள்ள மகரந்தத்தைத் திரட்டிக் கொண்டிருந்தது. மாலை முடிந்து பகலவன் மறையவே. தாமரைப் பூ மூடிக் கொண்டது. நண்டு அதனுள்ளே அகப்பட்டுக்கொண்டு வெளிவர முடியவில்லை. தாமரையை மலர்த்தி எப்படியாவது வெளிக்கிளம்ப முயன்றும் முடியவில்லை. அடுத்த நாள் கதிரவன் தோன்றும் வரை காத்திருக்க வேண்டியதாயிற்று. இரவெல்லாம் மலரினுள் புரண்டு பொழுது புலர்ந்ததும் வெளிப் போந்தது. தாதும் சுண்ணமும் உடலெங்கும் ஒட்டியவண்ணம் தன் மனைக்கு (ஆம்பல்) விரைந்து வந்து சேர்ந்தது. பகற்பொழுதில் ஆம்பல் மூடிக் கொள்ளுமாதலால் ஆண் நண்டு அங்கு வந்து சேரும் நேரமும் பெண்நண்டு கிடக்கும் ஆம்பல் மலர் மூடிக்கொள்ளும் சமயமும் ஒன்றாக இருந்தது. இதனைப் பார்த்தால் ஆண் நண்டு இரவில் வேறிடத்தில் தங்கி வந்த

படியாலும் உடலில் சுவடு இருந்தபடியாலும், ஊடல் கொண்டு கதவை அடைத்துக்கொள்ளும்படியாக இருந்தது. ஒரு புறத்தில் மலர்ந்த தாமரை மலர்களும் மற்றொரு புறத்தில் கூம்பியிருக்கும் ஆம்பல் மலர்களும் விளங்கப் பெற்ற வயல் வளத்தைச் சொன்னவாறு இது.

இவ்வாறு பட்டர் விளக்கம் தந்தவுடனே **பிள்ளை நறையூர் அரையர்** "ஆராய்ந்து குற்றம் இருப்பதை உறுதி செய்த பிறகு தானே தண்டிக்க வேண்டும் ?" என்று கூற, "என் செய்வோம் ? கேள்வி இல்லாத பெண்ணரசு நாடாயிற்றே!" என்று அருளிச் செய்தாராம் பட்டர்.

இதனால் **'நாச்சியார் கோயில்'** என்ற பெயரைக் குறிப்பிட்டாராம். இவ்வூரில் எல்லாவற்றிற்கும் பிராட்டிக்கே முதலிடம். திருவீதிப் புறப்பாடுகளில் நாச்சியார் முன்னே எழுந்தருள்வதும், பின்னே பெருமான் எழுந்தருள்வதுமாக இருக்கும். ஆணரசு நாடென்றால் கேட்பாருண்டு. பெண்ணரசு நாடென்றால் கேட்பாரில்லை என்று சுவைபடக் கூறியதாகும் இது. இதனை அறிந்த நாமும் சுவையை அநுபவிக்கின்றோம். இல்லையா ?

**(15) 'தேரும் போயிற்று; திசைகளும் மறைந்தன; செய்வதொன் றறியேனே': 'மாரிமாக்கடல்'** (பெரி. திரு. 8.5:2) என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தின் இறுதியடியாகும் இது. **மகள் பாசுரமாக** நடைபெறுவது இது. இங்கு பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் கண்ட விளக்கத்தைத் தருகின்றேன்.

உறையூரில் அரசனுக்கு உடம்பு பிடிக்கும் தொழிலில் **வில்லி** என்ற மல்லன். அவன் மனைவி **பொன்னாச்சி.** பின்னர் இருவரும் பிள்ளை உறங்கா வில்லிதாசர், பொன்னாச்சியார் என்ற பெயர்களில் இராமாநுசரின் அடிமையானார்கள். வில்லிதாசர் திருநாடு அலங்கரிக்கும் நிலை வருகிறது. இராமாநுசர் திருவடிகளில் தமது தலையையும் தம் கால்களைப் பொன்னாச்சியார் மடிமீதும் வைத்துக்கொண்டும் தன் மனைவியிடம் பேசுகிறார்: "நாம் உடையவரின் அடிமையாகக் கைங்கரியம் செய்து வாழ்ந்தோம். நமக்கு வீடுபேறு உறுதி. நான் முதலில் செல்லுகிறேன். உனக்காக திருநாட்டில் காத்திருப்பேன்" என்று சொல்லியவண்ணம் அவர் ஆவி பிரிகின்றது.

இராமாநுசர் வில்லிதாசனைத் தம் அபிமான புத்திரனாகக் கருதியதால் (தாசருக்கு இரு புத்திரர்கள் இருப்பினும்)[9] மாறனேர் நம்பியைக் கொண்டு ஈமச் சடங்கு செய்ய ஏற்பாடு செய்திருந்தார்[10].

---

9. வண்டலங்கார தாசர், செண்டலங்கார தாசர் என்ற இருவர்.
10. தலைவியொருத்தி மாலைக் காலத்தில் தன் காதலனின் பிரிவாற்றாமையைப் பொறுக்க முடியாமல் பாடுவதாக அமைந்த 10 பாசுரங்களைக் கொண்டது.

வில்லிதாசரின் திருமேனியைப் பிரம்மரதத்தில் எழுந்தருளப் பண்ணி அதனைத் தூக்கிக்கொண்டு செல்கின்றனர். பொன்னாச்சியார் இத்திருமொழியை அநுசந்திக்கத் தொடங்குகின்றார். முதற்பாசுரத்தை அநுசந்தித்து இரண்டாம் பாசுரம் அநுசந்திக்கும்போது முன்னே பிரம்ம ரதத்தைத் தூக்கிச் செல்பவர்கள் விரைந்து சென்றார்களாதலால் திருத்தேர் பொன்னாச்சாரியார் கட்புலனுக்கு மறைகின்றது. அதற்குத் தகுதியாக அவருடைய அநுசந்தானம்.

**தேரும் போயிற்று; திசைகளும் மறைந்தன;**
**செய்வதொன் றறியேனே**

என்று நிறைவு பெறுகின்றது. 'செய்வதொன்றறியேனே' என்ற தொடர் மெல்லிய குரலில் திரும்பத் திரும்ப வெளிவந்து இறுதியில் நின்று விடுகின்றது. அப்போதே பொன்னாச்சாரியாரின் ஆவியும் போய் விடுகின்றது. இராமாநுசர் இருவர் திருமேனிகட்கும் ஈமச் சடங்கு செய்ய ஏற்பாடு செய்து விடுகின்றார். இச் செய்தியை அறியும் நம் உள்ளமும் துடிதுடித்து அடங்குகின்றது.

**(16) திருக்கோட்டியூர் தெற்காழ்வான் - கோளரியாழ்வான்** இவர்கள் பற்றிய விளக்கம் **'என் செய்ய தாமரைக்கண்'** (திருவாய் 1.4 : 2) என்ற திருவாய் மொழிப் பாசுரத்தில் அமைகின்றது. இப்பாசுரத்தில் மூன்றாம் அடியில் வரும் **'முழு வினையால்'** என்பதற்கு **நம் பிள்ளை** காட்டும் ஐதிகத்தைக் கூறுவேன். முழுவினை - பெரும்பாவம். பராசரபட்டர் ஒரு சமயம் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருந்தார். அந்த ஊரில் **தெற்காழ்வான், கோளரியாழ்வான்** என்ற இருவர் வாழ்கின்றனர்.

இவர்களுள் கோளரியாழ்வான் தவறாமல் திருமண் தரித்த கோலமாய் வைதிகச் சடங்குகளை தவறாமல் செய்து வருபவன். தெற்காழ்வான் சாதாரணமாகக் காணப்பெறும் சாதாரண மனிதன். இருவரும் ஒரு சிறப்பான நன்னாளன்று ஒரு புண்ணிய தீர்த்தக் கரையில் சந்திக்க நேரிடுகின்றது. கோளரியாழ்வான் தெற்காழ்வானை நோக்கி "அப்பா தெற்கு, இன்று புண்ணிய தினம் ஆயிற்றே. இன்றாகிலும் ஒரு முழுக்கு போடலாகாதா?" என்கின்றான். அதற்கு அவன், "கோளரி, முழுக்கிட வேண்டுமென்று சொல்லும் உன் அபிப்பிராயம் என்னுடைய பாவங்கள் இந்த முழுக்கினால் சில தொலையக்கூடும் என்பது தானே. இது நிறைவேறக்கூடிய காரியமா? என்ன? என்னுடைய பாவம் திருக்கோட்டியூரில் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் தெற்காழ்வார் "திருக்கரத்தில் உள்ள திருவாழியால் போக்கினால் போகுமேயன்றி ஒன்றிரண்டு முழுக்குகளால் போகக் கூடியவையல்லவே" என்கின்றான்.

எப்படியோ இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருந்த செய்தி பராசர பட்டருடைய திருச் செவியை எட்டுகின்றது. "ஆகா..... எவ்வளவு ஆத்திகனாயிருந்தால் இந்த வார்த்தை சொல்ல முடியும்? இவனை மேலெழுந்தவாரியாகப் பார்த்து நாத்திகன் என்றிருந்தோமே. இவ்வளவு பேசும் பரிபாகமுடையவனா இவன்?" என்று மிகவும் ஈடுபட்டாராம். இன்று பல்வேறு ஆசாரபூதிகளைப் பார்க்கும் நமக்கு இவ்வரலாறு வியப்பினை விளைவிக்கின்றது அல்லவா?

**(17) 'போம்பழி யெல்லாம் அமணன் தலையோடே': மானேய் நோக்கி மடவாளை** (திருவாய் 1.5 : 5) என்ற திருவாய்மொழிப் பாசுரத்திற்கு விளக்கம் கூறும்போது **நம்பிள்ளை** வாக்காக வருவது. இந்தப் பாசுரத்தில்,

'கூனே சிதைய உண்டையில்
திறத்தில் தெறித்தாய் கோவிந்தா

என்ற இரண்டாம் அடிக்குப் பொருள் கூறும்போது இராமாவதாரத்தில் ஒன்றும் கிருட்டிணாவதாரத்தில் ஒன்றுமாக இரண்டு வரலாறுகளை ஏறிட்டுக் கூறுவர் வியாக்கியாதாக்கள். இரண்டாவதைக் குறிப்பிடும்போது **நம்பிள்ளை:** "அன்றிக்கே தீம்பு சேருவது கண்ணனுக்கே யாகையாலே 'போம்பழியெல்லாம் அமணன் தலையோடே' என்னுமாப்போலே அவன் தலையிலே ஏறிட்டுச் சொல்லுதல்" என்று குறிப்பிடுவர். 'போம்பழியெல்லாம் அமணன் தலையோடே' என்ற நம்பிள்ளை சூக்தியில் அடங்கிய வரலாறு நகைச்சுவை அடங்கியது. அதனை மட்டும் ஈண்டு கூறுவேன்.

"கள்ளன் ஒருவன் ஓரந்தணன் இல்லத்தில் கன்னம் போட்டான். அந்தச் சுவர் அன்றைக்குத்தான் வைக்கப்பெற்ற ஈரச் சுவர். ஆதலால் சுவரால் அமுக்கப்பெற்றுக் கள்ளன் மாண்டு போனான். இந்நிலையில் கள்ளனின் உறவினர்கள் அந்தணனிடம் பழி தர வேண்டும் என்று நிர்ப்பந்திக்கின்றனர். பின்னர் இரு திறத்தாரும் நியாயம் கோரி அரசன் பக்கம் வருகின்றனர். அரசனோ அறிவற்றவன்; மூர்க்கன். அவன் அந்தணனை நோக்கி, "அந்தணா, நீ ஈரச் சுவர் வைத்ததனாலன்றோ கள்ளன் மாண்டான். ஆதலால் நீதான் பழிதர வேண்டும்" என்கின்றான். அந்தணன், "ஐயோ, இவ்வாறு ஈரச்சுவர் வைத்தது எனக்குத் தெரியாது. சுவர் வைத்த பணியாளைக் கேட்க வேண்டும்" என்று தன் பொறுப்பைக் கழற்றி விட்டான். பின்னர் பணியாளனை வரவழைத்து "நீ தானே ஈரச் சுவர் வைத்தாய்; நீ தான் பழி தர வேண்டும்" என்று கட்டளை இடுகின்றான். அந்தப் பணியாள் "தண்ணீர் விடுகின்றவன் அதிகமாக விட்டுவிட்டான்; நான் இதற்குப் பொறுப்பல்லேன்" என்று கூறித் தட்டிக் கழித்தான். பின்னர் தண்ணீர் விட்டவனைத் தருவித்து

விசாரித்தபோது அவன், "குயவன் பெரிதாகச் செய்த அளவு பானையைத் தந்தான்; அதனால் நீர் அதிகமாயிற்று; நான் என்ன செய்வேன் ?" என்று கூறி நழுவினான். குயவன் அழைக்கப்பட்டு விசாரிக்கப் பெறுகின்றான். அவனும், "என்னால் வந்ததன்று; நான் பானையை அளவாகச் செய்து கொண்டிருந்தேன்; அதனைச் செய்துகொண்டிருந்தபோது தாசியொருத்தி போகவரத் திரிந்தாள்; என் கவனம் கலைந்தது. அவளைப் பார்க்கிற பராக்கில் நான் அறியாமல் பானை பெருத்து விட்டது போலும். நானென்ன செய்வேன் ?" என்று கையை விரித்தான். பின்னர் தாசி வரவழைக்கப்பட்டு விசாரிக்கப் பெறுகின்றாள். அவளும் "இஃது என் பிழையன்று. துணி வெளுப்பவன் தன் சேலையை விரைவில் தராததால் நான் அவன் வீட்டிற்குப் போக வரத் திரிந்தேன்" என்று தன் பொறுப்பைத் தட்டிக் கழித்து விட்டாள். பிறகு துணி வெளுப்பவனை அழைத்து விசாரிக்கின்றான் வேந்தன். அவனும், "அரசர் பெருமானே, நான் இதற்குப் பொறுப்பல்லேன்; துணி துவைக்கும் துறையில் உள்ள கல்லின் மீது ஓர் அமணன் (திகம்பரன்) உட்கார்ந்திருந்தான். எவ்வளவு உசுப்பியும் அவன் எழுந்து செல்லவில்லை; பிறகு அவனாகவே எழுந்து சென்ற பிறகு சேலையைத் துவைத்துத் தர வேண்டியதாயிற்று. நான் என்ன செய்வேன். அந்த அமணனே தாமதத்திற்குக் காரணன் ஆவான்" என்று பதிலிறுத்துத் தன் பொறுப்பைக் கழற்றி விடுகின்றான். பின் அமணனைத் தேடிப்பிடித்துக் கொணர்ந்து விசாரித்தான் அரசன். "நீயன்றோ இத்தனையும் செய்யக் காரணன் ஆனாய். நீ தான் பழி கொடுக்க வேண்டும்" என்று அரசன் ஆணையிட்டான். அவன் மௌனியாகையால் ஒன்றும் பேசாமல் வாளா இருந்தான். மூட அரசன் "உண்மையில் பழி தன்னிடத்தில் உள்ளதனால்தான் இவன் வாய் திறக்காமல் வாளா இருக்கின்றான்; இவனே குற்றவாளி" என்று தீர்மானித்து அவன் தலையை அரியக் கட்டளை இட்டான்.

அமணன் குற்றம் செய்யாதிருக்கவும் பழி அவன் தலையில் ஏறினாப் போலே கண்ணபிரான் தீம்பு செய்யாதிருந்தாலும் பிறருடைய தீம்பு அவன் தலையில் ஏறும் என்று விநோதமாகக் காட்டப் பெற்றது.

*பல்லா யிரவர்இவ் வூரில்*
*பிள்ளைகள் தீமைகள் செய்வார்*
*எல்லாம் உன்மேலன்றிப் போகாது*

**– பெரியாழ். திரு. 2.8 : 5**

என்று யசோதைப் பிராட்டி வாக்கில் வைத்து பெரியாழ்வார் பேசுவது போல் ஊரில் நடைபெறும் தீம்புகளையெல்லாம் தனக்கே கொள்ளப் பிறந்த கண்ணபிரான் மேலே இத் தீம்பையும் ஏறிட்டு விடலாம் என்று ஆழ்வார்

திருவுள்ளம் பற்றுகிறார் போலும்; இதனால் தான் 'கோவிந்தா' என்று கிருஷ்ணனை நினைந்து பேசுகின்றார் என்று உரையாசிரியர் கருதுவது அற்புதம். இது நமக்கு எல்லையற்ற மகிழ்ச்சியைத் தருகின்றது.

**(18) கீதை-திருவாய்மொழி கற்றவர்க்கு மரியாதை: 'நண்ணா அசுரர் நலிவு எய்த'** (திருவாய். 10.7 : 5) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் **'பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி'** என்பதிலும், **'என் சொல்லி'** (திருவாய். 7.9 : 2) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில்

> என்சொல்லால் யான்சொன்ன
> இன்கவி என்பித்துத்
> தன்சொல்லால் தான்தன்னைக்
> கீர்த்தித்த மாயன்

என்பதிலும் இது வருகிறது. தான் பாடாமல் இவரையிட்டுப் பாடுகிறது ஏன் ? என்னில்: தான் பாடினானாகில் 'கீதையொடு ஒத்துப்போம். கீதையைக் காட்டிலும் இது உயர்ந்தது' என்பதற்கு உரையாசிரியர்கள் தரும் விளக்கம்: **கீதையைக் கற்றான் ஒருவன்** காலை நேரத்தில் ஒரு சபைக்குச் சென்றால் பலரும் ஒன்று கூடி நாழி அரிசியைத் தருவார்கள். அவனை நம்ப மாட்டாமையால் 'புறத்திண்ணையில் கிட' என்பார்கள். **திருவாய் மொழியைக் கற்ற ஒரு விண்ணப்பம் செய்வான்** சென்றால் எல்லோரும் புறப்பட்டுச் சென்று எதிர்கொண்டு அழைத்து வந்து வீட்டில் ஒரு பகுதியை ஒழித்துத் தந்து அமுதுபடியும் சமர்ப்பித்து உபசரிப்பார்கள் என்று **நம்பி திருவழுதி நாடுதாசர்** எடுத்துக் காட்டுவார். ஆனால் கீதைக்குச் சிறப்பு இல்லையே என்று வினாவினால் 'உண்டு' என்பதே விடை. நம்மாழ்வாரும் 'பண்டே பணித்த' (திருவாய். 10.4 : 9) என்ற பாசுரத்தில் அங்கீகரித்துள்ள படியால் கீதை தானும் வீறுபெற்றது என்பதையும் அறிகின்றோம்.

**(19) பரமபதத்தில் வித்தினேன் காண்:** இது பற்றிய குறிப்பு **'நல்ல கோட்பாட்டுலகங்கள்'** (திருவாய். 8.10 : 11) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் வருவது. எம்பெருமானார் திருவனந்தபுரத்துப் பயணத்தைப் பெரும் பாகவதக் கூட்டத்தோடு மேற்கொண்டபோது திருக்கோட்டியூரில் **செல்வநம்பி** (பாண்டிய அரசனின் அமைச்சர்)யின் திருமாளிகைக்கு எழுந்தருளினார். அமுது படைக்க அரிசி இல்லை. செல்வ நம்பியும் ஊரில் இல்லை. மழை பெய்தால் விளைவிப்பதற்கு விதை நெல் இருந்தது. வருந்தியழைத்தாலும் வரமாட்டாத மகாபாகவதோத்தமர்கள் தாமாக வந்தருளினார்களே என்று குதூகலம் கொண்டார் செல்வ நம்பியின் தேவி

**நங்கையார்.** அவ்வளவு நெல்லையும் குத்தித் ததியாராதனை செய்தார். மறுநாள் கணவர் வந்து விதைத் தானியம் ஒன்றுமில்லாமையைக் காண்கின்றார். "நெல் எங்கே?" என்று வினவுகின்றார். நங்கையார் "பரமபதத்தில் விளைவதாக வித்தினேன்" என்கின்றார். இப்படிப்பட்ட குடும்ப வாழ்க்கை ஆழ்வாருடைய மங்களாசாசன பலத்தினால் அமைந்தது என்று நினைந்து மகிழ்கின்றோம்.

**(20) மலர்களின் உயர்வு தாழ்வுகளை நோக்காது அன்பினையே நோக்கும் இறைவன்: 'கள்ளவிழும் மலர்இட்டு'** (திருவாய். 9.10 : 2) என்ற திருவாய்மொழி பாசுரத்தில் வருவது. இதற்கு ஈட்டாசிரியர் காட்டும் ஐதிகம் இன்சுவை மிக்கது.

**ஸ்ரீபுருசோத்தமம்** என்பது ஒரு வட நாட்டு திவ்விய தேசம். அங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்குச் செண்பகப்பூ ஆரத்தைச் சாத்துவது வழக்கம். இறைவனுக்கு பூக்கள் இனத்தைச் சார்ந்த அனைத்தும் அமையும் என்ற உண்மை ஒரு புறம் இருக்க மக்கள் ஏனோ இப் பெருமானுக்கு அந்தப் பூ சிறந்தது என்று நினைத்துக்கொண்டார்கள்.

ஒரு நாள் சில அரச குமாரர்கள் அப்பூவைத் தேடிப் பூக்கடைக்கு வருகிறார்கள். மிகவும் தாமதித்து வந்ததனால் பூக்கள் யாவும் விற்றுத் தீர்ந்தன. எப்படியோ ஒரு பூ இருக்கக் கண்டார்கள். செல்வச் செருக்கால் அவர்கள் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக்கொண்டு நினைக்க வொண்ணாதவாறு பொருளை மிகக் கொடுத்து ஒருவன் அதனை வாங்கிக் கொண்டு வந்து சாத்தினான். அன்று இரவில் அவன் கனவில் "நீ இட்ட பூ எனக்குக் கனத்துச் சுமக்கவில்லை" என்று அருளிச் செய்தான் என்பது வரலாறு. அன்பினால் சாத்தும் பூ மட்டிலுமே அவனுக்குக் கனக்கும் என்பதைக் காட்டவந்த வரலாறு இது.

**(21) கடியுண்ட பாம்பு வலிதாகியதாகில் கோனேரியில் தீர்த்தமாடி நின்னைச் சேவிக்கிறேன்:** இந்த வரலாறு **"ஒழிவில் காலமெல்லாம் உடனாய்"** (திருவாய் 3.3 :1) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் வருவது. 'வழுஇலா அடிமை செய்ய வேண்டும். நாம் தெழில்குரல் அருவித் திருவேங்கடத்து எழில் கொள் சோதி தந்தைக்கே' என்ற தொடர்களில் இந்த வரலாறு அடங்கியுள்ளது.

முதலில் **'வேங்கடத்து எழில் கொள் சோதி'** என்பதற்கு ஒரு நயம் காட்டுவேன். நீலாழிச்சோதி வானார் சோதியையும் (பரமபதநாதன்), நீலாழிச்சோதியையும் (பாற்கடல் நாதன்) வேறுபடுத்திக் காட்டவே இவ்வாறு கூறினார். வானார் சோதி பகல் விளக்குப் பட்டிருக்கும்; நீலாழிச் சோதி கடல் கொண்டு கிடக்கும்; வேங்கடத்து எழில் கொள் சோதி குன்றத்திட்ட

விளக்காக இருக்கும். 'வேங்கடமேய விளக்கு' (பெரி. திரு. 4.7 : 5) என்பது மங்கை மன்னன் வாக்கு அல்லவா ?

வரலாற்றைக் கூறுவேன். எம்பெருமானார் இத் திருவாய்மொழியை அருளிச் செய்யும்போது அந்தக் காலட்சேபக் கூட்டத்தில் நூற்றுக்கணக்கான சீடர்கள் எழுந்தருளியிருந்தனர். அவர்களை நோக்கி "ஆழ்வார் பாரித்த குறை தீரத் திருவேங்கடமுடையான் எழுந்தருளியிருக்கும் இடத்திலே தங்கி நித்திய கைங்கரியம் பண்ண விருப்பமுடையார் ஆரேனும் உண்டா ?" என்று வினவுகின்றார். குளிர் அருவி வேங்கடமாக இருப்பதனால் எல்லோரும் ஏதேனும் ஒரு காரணம் சொல்லித் தங்கள் இயலாமையைத் தெரிவிக்கின்றனர். **அனந்தாழ்வான்** எழுந்து "அடியேனுக்கு அப்பணி நியமித்தருள வேண்டும்" என்று வேண்டினார். இதனைக் கேட்டு உகந்த எம்பெருமானார் "நீர் ஒருவரே ஆண் பிள்ளை" என்று மிகவும் கொண்டாடித் தழுவிக் கொண்டார். அது முதலாக அப்பெருமகன் **அனந்தாண் பிள்ளை** என்று வழங்கப் பெற்றார்.

இராமாநுசருடைய சீடரான இவர் 74 சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். இவர் திருமலைக்குச் சென்று அங்கு ஓர் ஏரியை வெட்டி அதற்கு **இராமாநுசர் புத்தேரி** என்ற பெயரை அமைத்தவர். அருகில் ஒரு நந்தவனத்தை உண்டாக்கி அதிலிருந்து மலர்களைப் பறித்து திருவேங்கடமுடையானுக்கு மலர்க் கைங்கரியம் செய்து கொண்டு வந்தவர். ஒரு நாள் மலர் கொய்கையில் நல்ல பாம்பு ஒன்று இவர் கையிலே தீண்டியது. அதனைப் பொருட்படுத்தாது, பரிகாரம் ஒன்றும் செய்யாமல் மீண்டு தீர்த்தமாடி பின்னர் சென்றும் மலர்கொய்து மாலைதொடுத்து திருவேங்கடமுடையானைச் சேவிக்கச் சென்றார். இந்நிலையில் இறைவன் அர்ச்சகர்மீது ஆவேசித்து "நஞ்சு தீர்க்காமல் இருந்ததற்குக் காரணம் என்ன ?" என்று வினவியருள இவரும் "கடியுண்ட பாம்பு வலிதாகி இருந்ததனால் திருக்கோனேரியில் தீர்த்தமாடித் திருவேங்கடமுடையானைச் சேவிக்கின்றேன். கடித்த பாம்பு வலிதாகில் விரஜையிலே தீர்த்தமாடி வைகுண்ட நாதனைச் சேவிப்பேன் என்றிருந்தேன்" என்று மறுமொழி பகர்ந்த பரமயோகி. திருவாய்மொழிக்கு **"ஏய்ந்த பெருங் கீர்த்தி"** என்ற தனியனை அருளிச் செய்தவர்.

இன்று ஏரியின் அருகில் நூற்றுக்கணக்கான அடியார்கள் தங்கும் விடுதிகள் கட்டப் பெற்றுள்ளன. பெரும்பாலும் இவை இரட்டை விடுதிகள். திருக்கோயிலுக்கு அருகிலிருப்பதனால் முதியோர் இவற்றை விரும்புகின்றார்கள். அந்த விடுதிகள் Anantazhvan Tank Cottages (A.T.C) என்று வழங்கி வருகின்றன. பெரும்பாலும் நாங்கள் திருமலைக்குச் செல்லும்போது இங்கு தான் ஒதுக்கீடு செய்து கொள்வோம்.

***(22) வங்கிபுரத்து நம்பி பெருமாளைச் சேவித்தல்:*** இது பற்றிய குறிப்பு **'எங்கள் கண்முகப் பே'** (திருவாய் 9.2 : 8) என்ற திருவாய்மொழியில்,

**"தங்களன்பாரத் தமது சொல்வலத்தால் தலைத்தலைச் சிறந்து பூசிப்ப"** என்ற இரண்டாம் அடியையொட்டி வருவது. **வங்கிபுரத்து நம்பி** என்ற அடியார் பெருமாளைச் சேவிக்க எழுந்தருளினபோது ஒரு பக்கத்தில் சிரீ வைணவர்களும் மற்றொரு பக்கத்தில் ஆய்ச்சிகளும் நின்று கொண்டு பெருமாளைச் சேவித்துக் கொண்டிருந்தார்கள். நம்பி சிரீ வைணவர்கள் நிற்கிற பக்கத்தில் நில்லாமல் ஆய்ச்சிகள் நிற்கின்ற பக்கமாக நிற்கின்றார். இதனை **முதலியாண்டான்** கண்டு, "அன்பரே, சிரீ வைணவர்கள் திரளில் சேராமல் ஆய்ச்சிகள் நிற்கின்ற பக்கமாக நிற்பது ஏன்?" என்று கேட்டார். அதற்கு நம்பி சொன்னது: "எந்த வகையிலும் நாம் பல வகை அபிமானம் கொண்டு அகங்கார மககாரம் கொண்டவர்களாக இருப்போம்; நம்மேல் பகவத்கடாட்சம் பாய்வது மேட்டு மடையாக இருக்கும். அறிவொன்றும் இல்லாத ஆய்ச்சியர்களாகையால் உண்மையில் தாழ்ச்சியுடையவர்களாயும் தாழ்ச்சி தோற்றப் பேசுபவர்களாயும் இருப்பவர்கள். ஆதலால் பகவத் கடாட்சம் பாய்வது பள்ளமடையாக இருக்கும்; அதனால் தான் அவர்கள் பக்கமாக நின்றேன்" என்றார்.

எம்பெருமானை நோக்கி ஆய்ச்சிகள் போற்றும் படியையும் நம்பி போற்றும் படியையும் ஆண்டான் நன்கு கண்டவர். ஆதலால் இருவர் பக்கமும் உள்ள வேற்றுமையை எடுத்துக்காட்ட வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டார். நம்பியை நோக்கி அவர் கேட்டது: "ஆய்ச்சிகள் என்ன சொல்லி எம்பெருமானைப் போற்றினார்கள்? தேவரீர் எங்ஙனம் போற்றினீர்கள்?" என்பதாக. அதற்கு நம்பி சொன்னது: "பொன்னாலே பூணூரலிடுவீர், நூறு பிராயம் புகுவீர், பால் உண்பீர், பழம் உண்பீர் என்பன போன்று ஆய்ச்சிகள் சொல்லி வணங்கினார்கள்; அடியேன் விஜயஸ்வ, விஜயீபவ என்பன போன்று சொல்லிப் போற்றினேன்" என்று. இவற்றைக் கேட்ட ஆண்டான் "அங்குப் போயும் முரட்டு சமஸ்கிருதத்தை நீவீர் விட்டபாடில்லையே; எங்கிருந்தாலும் நாம் நாமே; அவர்கள் அவர்களே. இப்பக்கமாகவே எழுந்தருள்வீர்" என்று அருளிச் செய்தார்.

இங்ஙனம் பல சுவையான நிகழ்ச்சிகள் வைணவ உரைகளில் காணப் பெறுகின்றன. அன்பர்களே, இன்னும் இரண்டு நிகழ்ச்சிகளைக் கூறி என் பேச்சை முடிக்கிறேன்.

**(23) மிளகாழ்வான்:** இராமாநுசரின் சீடன் ஒருவன் பரிசாரகன். அவன் தயாரிக்கும் பொங்கல் அமுதில் மிளகை உடைக்காமல் அப்படியே போட்டுக் கொண்டு வந்தான். ஒரு நாள் உடையவர் 'மிளகை உடைத்துப் போட்டால் சுவையாக இருக்கும்; அங்ஙனம் செய்க' என்று சொல்ல அதற்கு அவன் "தேவதாந்திரத்தைத் தொடாமல் இருக்கவே இங்ஙனம் செய்து

வருகின்றேன்'' என்றான். உரலும், குழவியும் அவன் கண்ணுக்கு சிவலிங்கத்தை நினைப்பிக்கிறபடியால் அதை அவன் தவிர்த்ததாகச் சொன்னான். இராமாநுசர் அதைக் கேட்டு அவனுடைய உண்மையான வைணவ ஈடுபாட்டைக் கண்டு மெச்சி அவனைப் பாராட்டினார்.

**(24) 'தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே'** என்ற பொய்கையாழ்வாரின் பாசுரத்தின் (44) விளக்கம் பற்றி வருவது இந்தப் பாசுரம். இராமாநுசரின் வாழ்க்கையில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியுடன் பொருந்தி அமைகின்றது. அவர் திருவரங்கத்தில் வாழ்ந்தபோது ஒரு சமயம் மாதுகரத்திற்கு (பிச்சைக்கு) திருவரங்கம் திருவீதியில் சென்று கொண்டிருந்தார். அப்போது அவர் உள்ளம் முதலாழ்வார்கள் என்று வைணவர்கள் குறிப்பிடும் பொய்கையாழ்வார் அருளிய மேற்குறிப்பிட்ட பாசுரத்தின் பொருள் குறித்துச் சிந்தித்துக் கொண்டிருந்தது. இறைவன் தன் உருவில் மனிதனைப் படைத்தான் என்கின்றது கிறித்தவர்களின் சத்திய வேதம் என்பதை நாம் அறிவோம். இதனை மறுத்து மனிதன் தன் உருவில் இறைவனைப் படைத்து விடுகின்றான் என்று அறிவியல் மனப்பான்மை தெரிவிக்கின்றது என்பதும் நமக்குத் தெரியும். இந்த இருவகை மனப்பான்மைகளையும் சமரசப் படுத்துவது போல் அமைந்துள்ளது பொய்கையாழ்வாரின் அருள் வாக்கு.

இவ்வாறு சிந்தித்துக்கொண்டே இராமாநுசர் வீதி வழியே போய்க் கொண்டிருந்தார். அப்போது தெருப் புழுதியில் சில பிள்ளைகள் விளையாடிக் கொண்டிருந்தனர். திருவரங்கத்துச் செல்வர்கள் அல்லவா ? திருக்கோயிலில் தாங்கள் கண்டவற்றையே தங்கள் விளையாட்டிலும் பிரதிபலிக்கச் செய்தனர். பாவனை சிறுவர்களின் விளையாட்டின் ஒரு முக்கிய கூறு என்பதை உளவியல் அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். ஆண் பிள்ளைகள் 'அப்பா விளையாட்டும்', பெண் பிள்ளைகள் 'அம்மா விளையாட்டும்' இருவரும் 'ஆசிரியர் விளையாட்டும்' விளையாடுவதை நாம் காணத் தான் செய்கின்றோம். கற்பனையாற்றலால் ஊஞ்சல் கப்பலாக மாறி விடுகின்றது ! மரக்கட்டை குதிரையாகி விடுகின்றது ! உயிரில்லாதவை உயிருள்ளவையாகி விடுகின்றன; பேசுகின்றன ! கடை வைப்பதிலும் பள்ளிக் கூடம் வைப்பதிலும் பாலர்கட்கு அதிக ஆசை என்பதை நாம் அடிக்கடி காணத்தான் செய்கின்றோம்.

இராமாநுசர் தெரு வழியே போய்க்கொண்டிருந்தபோது சிறுவன் ஒருவன் மண்ணில் சில கோடுகளை வரைகின்றான்; 'இதோ திருக்கோயில்' என்கின்றான். இன்னொரு சிறுவன் வேறு இரண்டொரு கோடுகளைக் கீறி 'இதோ பெரிய திருமண்டபம்' என்கின்றான். அந்த இடத்தை நெருங்கி வந்து

கொண்டிருந்த இராமாநுசரைக் கண்டதும் பிறிதொரு பையன் மேலும் இரண்டொரு கோடுகளைக் கிழித்து 'ஜீயரே, 'இதோ உம்முடைய பெருமாள்!' என்று காட்டுகிறான். இராமாநுசரும் அருகில் வந்து பார்க்கிறார். மற்றொரு சிறுவன் 'அதோ பெருமாளின் திருவாழி, திருச்சங்கு!' என்று சுட்டிக் காட்டுகிறான். உடனே இராமாநுசர்,

**தமர் உகந்தது எவ்வுருவம்**
**அவ்வுருவம் தானே**

என்று சொல்லிக்கொண்டே அச்சிறுவனின் கீறல்களை நோக்கித் தண்டனிடுகிறார். அவரது திருவுள்ளம் அந்தக் கீறல்களை உண்மையாகவே எம்பெருமானின் திருமேனியாகவே கருதி பிரபத்தி பண்ணி விடுகின்றது.

**தமருகந்தது எப்பேர்**
**மற்று அப்பேர்**

அருகிலிருந்த இன்னொரு சிறுவன் ஒரு 'கொட்டாங்குச்சி'யில் மண்ணை வாரி வைத்துக்கொண்டு சந்நிதியில் அருளிப்பாடுகள் சொல்கின்ற மாதிரியே சொல்லிக்கொண்டு வரும்போது 'ஜீயரே!' என்று அருளிப்பாடு சொல்லிக் கூவுகிறான். இராமாநுசரும் 'நாயிந்தே!' என்று கோயிலில் சொல்லுவதுபோல் சொல்லிக்கொண்டே நீட்டித் தம் மேலாடையில் அந்த மண்ணைப் பிரசாதமாக ஏற்றுக் கொள்ளுகின்றார். சிறுவர்களுக்கு ஒரே குதூகுலம்; இராமாநுசருக்கோ பொய்கையாழ்வாரின் இதயத்தையே பார்த்து விட்டது போன்ற பரவசம்!

*******

அமெரிக்க வாழ் தமிழ் மக்களே, எங்கள் மகன், பேரன்மார், பேத்திமார் கேட்டுக்கொண்டதற்கிணங்க அமெரிக்கா வந்தோம். மேலுலகம் செய்ய வேண்டிய வயதில் மேல் நாடு வந்திருக்கிறோம். இங்குள்ள பேத்திமார் இருவரின் முயற்சியால் இக்கூட்டம் நடைபெற்றது. பொறுமையுடன் என் சொற்களைக் கேட்டு மகிழ்ந்தமைக்கு உங்கட்கு என் நன்றி என்றும் உரியது.

இக்கூட்டத்தை மிக்க அன்புடன் கூட்டி எங்களையும், உங்களையும் பார்த்து மகிழச் செய்த **திரு. பாலா சுவாமிநாதன்** அவர்களின் நன்றியுரை:

"இரண்டு திங்களுக்கு முன் தமிழ்ச் சங்கத்தில் 'Adult Talent Show' நிகழ்ச்சி நடைபெற்றது. நம்மில் பலர் கலந்து கொண்டோம். அதில் நமக்கெல்லாம் மிகவும் பெருமை தான். இன்று 'அருங்கலைக்கோன்' 'தமிழ்ச் செம்மல்' பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் நம்முன் உரையாற்றியது நமது தமிழ்ச் சங்கத்திற்கே பெருமை சேர்த்திருக்கிறது.

11. திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கும் இறைவனின் திருநாமம்.

*மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்*
*ஞாலம் முழுதும் நடந்தளந்தான்; - வாலறிவன்*
*வள்ளுவரும் தன்குறள்வெண் பாவடியால் வையத்தார்*
*உள்ளுவவெல் லாம் அளந்தார் ஓர்ந்து -(6)*

என்று பரணர் திருவள்ளுவ மாலையில் வைணவம் வழியாய் வள்ளுவத்தைப் புகழ்ந்தார் அன்று. இன்று **'வைணவ உரைகளில் கண்ட உளம் உகக்கும் நிகழ்ச்சிகள்'** என்ற தலைப்பில் பேசி நம்மை மகிழ்வித்தார் டாக்டர் ரெட்டியார் அவர்கள். **'வைணவமும் தமிழும்'**, **'திருக்குறள் தெளிவு'** என்ற நூல்களும் மேலும் 131 நூல்களும் எழுதியுள்ள பேராசிரியர் 'வைணவ இலக்கியமாமணி' வைணவ உரைகளில் கண்ட சுவையான நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டி நம்மை மகிழ்வித்தது மிகவும் பொருத்தமாகும்.

'தமிழர்' என்றால் 'தமிழுக்குத் தொண்டாற்றியவர்; 'தமிழருக்குத் தொண்டாற்றியவர்'; 'தமிழ் மேல் காதல் கொண்டவர்'; 'தமிழின்பால் அன்பு கொண்டவர்' என்று தான் கொள்ள வேண்டும். தாய்மொழி தமிழாய் இருக்க வேண்டியதில்லை. கன்னடத்தைத் தாய் மொழியாகக் கொண்ட தந்தை பெரியாரும், தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டவரும் இன்று நம்மிடையே தமிழில் வைணவ இலக்கியத்தைப் பகிர்ந்து கொண்ட ஸ்ரீசடகோபன் பொன்னடி பேராசிரியர் சுப்பு ரெட்டியாரும், வீரமாமுனிவரும், வள்ளுவம் மொழி பெயர்த்த ஜி.யு. போப் அவர்களும் தமிழர் தானே. இவர்களில் டாக்டர் ரெட்டியார் இன்றும் தமிழுக்கும், தமிழில் வைணவத்திற்கும், அறிவியலுக்கும் சேவை புரிந்து கொண்டிருக்கின்றார். தொடர்ந்து வாழும் நாள் வரை சேவை புரிய இருக்கின்ற தமிழர் தான் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை.

இன்று தமிழகத்தில் தொண்டர்களும், குண்டர்களும் கட்சித் தலைவர்களுக்கும், திரை நடிகர்களுக்கும் தங்களுக்குத் தோன்றிய பட்டங்களைக் கொடுத்து பட்டங்களை அவமானப்படுத்தி வருகிறார்கள். ஆனால் முற்காலத்திலிருந்து தற்காலம் வரை 'அருங்கலைக்கோன்', 'தமிழ்ச் செம்மல்', 'ஸ்ரீசடகோபன் பொன்னடி', 'வைணவ இலக்கிய மாமணி', 'ஆய்வுத் தமிழரசு' டி.லிட் (மதிப்பியல்), 'கலைமாமணி' போன்ற பற்பல விருதுகளையும், பட்டங்களையும் தமது அயராத உழைப்பினாலும், தமிழ்-சமயச் சேவையின் மூலமும் சம்பாதித்துள்ளார் இன்றைய நமது சிறப்புச் சொற்பொழிவாளர் அவர்கள். இவர் தமிழர். இவருக்குத் **தமிழர்** என்ற பட்டமே சாலப் பொருத்தமாகும்[12].

---

12. நன்றி சொன்னவர்: திரு. பால சுவாமிநாதன். மதுரை மாவட்டத்தைச் சேர்ந்தவர். 13 ஆண்டுகளாக டாலஸ்ஸில் கணிதத் துறையில் பணியாற்றி வருபவர். தமிழைத் தனது மூச்சாகக் கொண்டு பணியாற்றி வருபவர். தொலைபேசி 972-479-6175 (w); 972-479-6543 (Fax)

# 8. ஃபிலடெல்ஃபியா மாநிலத்தில் உள்ளது

*நயாகரா அருவிகளைப் பார்க்கும் திட்டம் மிகக் கடினமானது. 430 கல் தொலைவு கடந்துவர வேண்டும். பயண நேரத்தைக் குறைக்கவும் சிரமத்தைக் குறைக்கவும் இம்மாநிலத்தில் உள்ள திருவேங்கடவன் திருக்கோவில் சேவையை நிறைவு செய்துகொள்ளத் திட்டமிட்டோம். எங்களை இரண்டு நாட்கள் தம் வீட்டில் வசதிகளுடன் தங்கச் செய்து அன்புடன் விருந்தோம்பி உபசரித்த டாக்டர் குடும்பத்தினரிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு புறப்படுகிறோம். (படம் - 57)*

## திருவேங்கடவன் (மலைத்) திருக்கோயில்![1]

*கோவிலைச் சேவிப்பதற்கு எங்கள் நண்பர் டாக்டர் தனஞ்செயன் இல்லத்திலிருந்து (பஃபலோநகர்) அக்டோபர் 2 ஞாயிறு அன்று காலை 6.45க்குப் புறப்பட்டோம் எங்கள் காரில். எங்கள் நண்பர் தம் உறவினர் ஐவருடன் தனிச்சிற்றுந்தில்[2] பின் தொடர்ந்தார். வழியில் ஓரிடத்தில் (பயணிகள் நிறுத்தித் தங்கும் இடம்) காரை நிறுத்தி நானும் என் துணைவியும் சிற்றுண்டி கொண்டோம். 250 கல் தொலைவு கடந்து திருக்கோயில் உள்ள இடத்தை அடைந்தோம். ஏதோ கூட்டம் சற்றுக் குறைவாக இருந்தமையால் கோயில் அருகிலேயே கார் செல்ல வாய்ப்பாக இருந்தது. காரை உரிய இடத்தில் நிறுத்திவிட்டு அடியார்கள் ஒய்வாக உள்ள இடத்தில் நடையன்களையும் காலணிகளையும்[3] வைத்துவிட்டு[4] திருக்கோயிலில் இறைவன் சந்நிதியை அடைகின்றோம். அப்போது இறைவனுக்கு அபிஷேகம் (திருமுழுக்கு) நடைபெற்றுக் கொண்டிருந்தது. மந்திர சுலோகங்கள் ஒலித்ததைக் கேட்டவண்ணம் சிலநேரம் அங்கு அமர்ந்து அவற்றைச் செவிமடுத்து நுகர்ந்தோம் (12-30 மணிவரை).*

*என் மகன் இரண்டு கல்யாண உற்சவங்களுக்கு ஏற்பாடு செய்திருந்தான்[5]. திருக்கல்யாண உற்சவங்கள் திருக்கோயிலின் திருச்சுற்றில் (பிராகாரம்) ஓரிடத்தில் நடைபெற்றது. இறைவன் பக்கத்திற்கு ஒரு தேவிகள்*

---

1. Sri Venkateswara Temple Post Box 17280 Pittsburg P.A.15235. இது பென்சில்வேனியா மாநிலத்தில் உள்ளது. இத்திருக்கோயில் பிட்ஸ்பர்க் நகரில் இல்லை. Penn Hill என்ற இடத்தில் மலைப் பகுதியில் அமைந்துள்ளது.
2. Van
3. Sandals and Shoes.
4. இந்த இடத்தில் ஒப்பனை வசதிகளும் (Toilets) உள்ளன.
5. கட்டணம் ஒன்றுக்கு 35 டாலர்.

இருந்தபடி ஊஞ்சலில் எழுந்தருளியிருக்க அவர் திருமுன் திருக்கல்யாண உற்சவங்கள் நடைபெற்றன. அன்று எங்கள் உற்சவங்களுடன் வேறு ஐந்து உற்சவங்கள் நடைபெற்றன. ஐதரபாத்தைச் சார்ந்த தெலுங்கு அர்ச்சகர் (இளைஞர்) ஒருவர் நல்ல முறையில் நடத்தி வைத்தார். இறைவியர் இருவருக்கும் திருப்பூட்டு (மங்கள சூத்திரம்) சூட்டப்பெற்ற பிறகு வழிபாடு நடைபெற்றது. பிறகு தீர்த்தம் திருத்துழாய் வழங்கப்பெற்று சடகோபம் சாதிக்கப் பெற்றது.

எங்களுடன் பப்பலோவிலிருந்து வந்த அன்பர்கள் அனைவரும் உற்சவத்தில் பங்கேற்றனர். பிட்ஸ்பர்க் நகர் பல்கலைக்கழகத்தில் மனோமருத்துவத்துறையில் பணியாற்றி வரும் **டாக்டர் மாதவன்** குடும்பத்துடன் வந்திருந்தார். இவர் திருப்பதியில் என் மகன் டாக்டர் இராமகிருஷ்ணனின் ஒருசாலை மாணாக்கர். திருக்கல்யாண உற்சவம் செய்வித்தவர்கட்கு தலா ஒரு லட்டு வீதம் வழங்கப்பெற்றது. அதைத் திருக்கோயிலில் அது வழங்கும் இடத்தில் பெற்றுக் கொள்ளவேண்டும். இதனைப் பெற்றுக்கொண்டு அபிஷேகம் முடிந்து அலங்காரம் செய்யப்பெற்றிருக்கும் திருவேங்கடவனைச் சேவிக்கின்றோம். மனதிற்குள்,

> ***அகல கில்லேன் இறையும் என்று***
> ***அலர்மேல் மங்கை உறைமார்பா!***
> ***நிகரில் புகலாய் உலகம்மூன்று***
> ***உடையாய்! என்னை ஆள்வானே!***
> ***நிகரில் அமரர் முனிக் கணங்கள்***
> ***விரும்பும் திருவேங் கடத்தானே!***
> ***புகல்ஒன்று இல்லா அடியேன் உன்***
> ***அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே***
> ***- திருவாய். 10:10:10***

என்ற பாசுரத்தை சேவிக்கின்றோம். வேங்கடம் மேய விளங்கினைச் சேவித்த அநுபவத்தைப் பெறுகின்றோம். 'அவனும் இவனும்' ஒருவர்தானே.

அடுத்து பிரசாதங்கள் விற்கப்பெறும் இடத்திற்கு வருகின்றோம். சாம்பார் சாதம், ததியோதனம், கலவை எதை வாங்கினாலும் 1½ டாலர். இவற்றை வாங்கிக்கொண்டு உண்ணும் இடத்திற்கு வருகின்றோம். யாரோ ஒருவர் அருகில் உள்ள மண்டபத்தில் திருக்கல்யாணம் செய்துள்ளார். அவர் திரு. சீனிவாசலு செட்டிக்கு (தனஞ்செயனின் அண்ணன்) அன்புடன் வழங்கின ரவாகேசரி, பால் பாயசம், தயிர்வடை இவையும் வந்து சேர்ந்தன. இவற்றையெல்லாம் உட்கொண்ட பிறகு ஊருக்குத் திரும்பத் தயாராகின்றோம். (படம் - 58)

டாக்டர் மாதவன் தாம் அதிகவிலையில் புதிய இல்லம் ஒன்று வாங்கியுள்ளதாகவும் அதனைப் பார்வையிட வருமாறும் அழைக்க அவர் விருப்பப்படி பிட்ஸ்பர்க் நகரில் திருக்கோயிலிலிருந்து 10 கல் தொலைவிலுள்ள அவர் இல்லத்திற்கு வருகின்றோம். சுமார் 50 ஆண்டுகட்கு முன்னர் கட்டப் பெற்ற வீடாக இருந்தாலும் புதியது போன்ற பொலிவுடன் இருந்தது. அனைவருக்கும் அன்புடன் காஃபி வழங்கினார். அய்யங்கார் காஃபி அல்லவா ? அருமையாக இருந்தது. சுவை நிலையில் அவர் சில கல் தொலைவு வந்து நியுயார்க் வரும் பெருஞ்சாலையை அடைகின்றோம். பெருந்தொலைவு கடந்து ஓரிடத்தில் அரைமணிநேரம் ஓய்வு கொள்கின்றோம். அன்று மட்டிலும் 250 + 20 + 350 = 620 கல் தொலைவு கார் ஓட்டிவந்த களைப்பு இருக்குமல்லவா ? ஓய்விற்குப் பிறகு எங்கள் பயணம் தொடங்கியது. இரவு 12 மணிக்கு இல்லம் வந்தடைந்தோம்.

**இத்திட்டத்தில் கார் சென்ற தொலைவு:** நியுயார்க்கிலிருந்து பஃபலோ நகர் வரை 430 கல்; முதல்நாள் இரவு அருவிகளைப் பார்த்துவர 50 கல்; அடுத்த நாள் பகலில் செல்ல 20கல்; கோட் தீவிலிருந்து சுழல் குட்டை, மின்சார உற்பத்தி இடம் முதலானவை பார்த்து வீடு திரும்ப 30 கல்; பஃபலோ நகரிலிருந்து திருவேங்கடவன் கோயில் வரை 250 கல்; அங்கிருந்து டாக்டர் மாதவன் இல்லம் வரை 10 கல்; அங்கிருந்து பெருஞ்சாலை வரை 10 கல்; அங்கிருந்து வீடு வரை 400 கல். ஆக மொத்தம் 430 + 50 + 20 + 30 + 250 + 10 + 10 + 400 = 1200. இவ்வளவு தூரப் பயணத்தில் செலவும் அதிகம்; உடல் தளர்ச்சியும் அதிகம். அன்புடன் இவ்வளவு தொலைவு காரை ஓட்டி வந்த என் மகனின் களைப்பு மிக அதிகம்.

திருவேங்கடவனின் சேவை அனைத்தையும் மறக்கச் செய்துவிட்டது. நாம் அவனால் இயக்கப்பெறும் கருவிதானே !

# 9. அமெரிக்கத் தலைநகரில் உள்ளவை

அமெரிக்க ஐக்கிய நாடுகட்கு வந்து அவற்றின் தலைநகரையும் அங்கு அமைந்துள்ள முக்கிய இடங்களையும் பார்க்காமல் செல்வது உசிதம் அல்ல என்று என் மகன் கருதி எங்களை ஒருநாள் வாஷிங்க்டன் (டி.சி) என்ற தலைநகருக்குச் செல்லத் திட்டமிட்டான். அதன்படி புறப்படுகின்றோம்.

**வாஷிங்க்டன் (டி. சி)**[1]: நியுயார்க் எங்கள் இருப்பிடத்திலிருந்து 280 கல் தொலைவிலுள்ளது. **மாரிலாந்தில்** (20வது மாநிலம்) அமைந்துள்ளது. நமது டில்லி மாநகரைப் போல **தனி ஆட்சி அமைப்பில்** உள்ளது. 1800 லிருந்து காங்க்ரெசின் இருப்பிடமாக இருந்து வருகின்றது. என் மகனுக்கு அடுத்த நாள் பணி இருப்பதனால், காலையில் சென்று மாலை அல்லது இரவே திரும்ப வேண்டிய நிலை. கடுமையான பயணம்.

8. 10. 02 (சனிக்கிழமை) காலை 6.30 மணிக்குப் புறப்பட்டோம். எங்கள் விருப்பப் பழக்கமான உணவு எங்கும் கிடைக்காத நிலையில் சிற்றுண்டி, பகலுணவு, தேவையான குடிநீருடன் சென்றோம். நடுவழியில் சிற்றுண்டி உண்டு பயணமானோம். 11-30 மணியளவில் ஊரைச் சென்றடைந்தோம்.

வாஷிங்க்டன் அமெரிக்க ஐக்கியநாடுகளின் தலைநகரம். நமக்கு டில்லி தலைநகரமாக இருப்பதுபோல. இங்கு அரசுக்குரிய பல்வேறு கட்டடங்கள், அருங்காட்சியகங்கள், பல்வேறு வகைப்பட்ட நினைவுச் சின்னங்கள் முதலியவை நிறைந்துள்ளன. சுமார் ஆறு இலட்ச எண்ணிக்கைக்கு மேற்பட்ட மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இங்கு அமெரிக்க நாகரிகம் தொடக்கம் முதல் இன்றுவரை பல்வேறு வகையாக விரிந்த நிலையில் பன்னிறங்காட்டியில்[2] உள்ளவைபோல் பிரதிபலிக்கின்றது. இவற்றையெல்லாம் பார்த்துவிட்டு போகவர 560 கல் (280 + 280) பயணம் செய்து அன்றே திரும்ப வேண்டுமென்றால் நினைத்துப் பாருங்கள். காரை ஓட்டிவரும் என் மகன் படும் சிரமத்தை நினைத்துப் பார்க்கவே அச்சமாக உள்ளது. அவன் படும்பாட்டைப் பார்த்துக்கொண்டே தான் அன்றிரவு 12 மணியளவில் பயணமும் இனிதாக( !) முடிந்தது.

சுறுசுறுப்பாக மக்கள் கார்களில் பயணம் செய்யும் இக்காலத்தில் தலைநகரில் காரை நிறுத்துவது, அதுவும் நாம் விரும்பும் இடத்தில்

---

1. Washington (D.C); D.C - District of Columbia 2. Kaleidoscope

நிறுத்துவதென்பது பெரிய பிரச்சினை. அரை மணிநேரம் சுற்றியலைந்தும் இடம் கிடைக்கவில்லை. எங்களை (நான், என் மனைவி மருமகள் **ஜார்ஜ் வாஷிங்டன் நினைவுச் சின்னம்** இருக்கும் இடத்தில் இறக்கிவிட்டு சுமார் **2 கல் தொலைவில்** காரை கட்டணம் தந்து நிறுத்திவிட்டு **நடந்தேவந்து** எங்களையடைந்தான் என் மகன்.

கம்பீரமாக 555 அடி உயரமுள்ள நினைவுச் சின்னத்திற்குச் சற்றுத் தொலைவில் மரநிழல்களில் பெற்றோர்களுடன் குழந்தைகளும் சிறுவர்களும் தின்பன தின்றும், கொரிப்பன கொரித்தும், குளிர்பானங்கள் பருகியும் உள்ள கூட்டங்கள் ஒரு பக்கம். ஆசிரியர்கள் நடத்திவரும் மாணாக்கர்களின் பெருங்கூட்டங்கள் மற்றொருபுறம்; சுற்றிப் பார்க்க பல்வேறு இடங்களிலிருந்து பயணிகளின் கட்டுக்கடங்காத கூட்டங்கள் எல்லாப் புறங்களிலும் எள்போட்டால் எள் விழாதவாறு நினைவுச் சின்னத்தைச் சுற்றி பல்வேறுவகைக் கூட்டங்கள் ஏராளம்; ஏராளம். அன்று வெயிலும் கடுமை; அதைப் பொருட்படுத்தாது கும்மாளம் போடும் கூட்டங்கள். இவற்றைப் பார்த்து மருட்சியுடன் மகிழ்ந்திருக்கும் எங்களை என் மகன் வந்தடைந்ததும் சுற்றிப் பார்க்கும் திட்டத்தை எண்ணினோம். (படம் - 59, 60)

எங்கும் சுற்றிப் பார்க்கும் மக்களை ஏற்றிக்கொண்டு இயங்கிவரும் பயண ஊர்திகளைக் கண்டோம். நாங்கள் இருந்த இடத்திற்கு அருகிலேயே பயணச் சீட்டுகள் வழங்கும் அமைப்பும் இருந்தது. பயணச்சீட்டு 18 டாலர்; 72 டாலர் செலுத்தி 4 சீட்டுகள் வாங்கிக்கொண்டு ஊர்தியில் ஏறிக்கொண்டோம். இந்த ஊர்தி பார்க்கவேண்டிய இடங்கள்தோறும் நிற்கும். இறங்கிப் பார்க்க விரும்புபவர்கள் இறங்கிப் பார்க்கலாம். இவர்கள் பார்த்த பிறகு அடுத்து வரும் வண்டிகளில் ஏறிக்கொள்ளலாம். இப்படி ஒவ்வொரு இடத்தையும் இறங்கிப் பார்க்க விரும்பினால் அனைத்தையும் பார்த்து முடிக்க ஒரு வார காலம் ஆகும். நாங்கள் அன்றே திரும்ப வேண்டியிருப்பதால் வண்டியிலிருந்து பார்த்த வண்ணமே மனநிறைவு கொள்ளவேண்டிய நிலை. நாங்கள் பார்த்தவை அடியில் தரப்பெறுகின்றன.

**(1) பணத்தாள்கள் அச்சிடும் இடம்:** மும்பையில் நாசிக் அச்சகத்தில் நம்மூரில் வழங்கும் ரூபாய்த்தாள்கள் அச்சிடுவது போன்ற இடம் இது. இங்குதான் பல்வேறு மதிப்புள்ள டாலர் நாணயத்தாள்கள் அச்சிடப் பெறுகின்றன. உலோக வகை நாணயங்கள் பிறிதோர் இடத்தில் தயாரிக்கப் பெறலாம். என்று நினைக்கத் தோன்றுகின்றது.

இவ்விடத்தையடுத்து விவசாய சம்பந்தமான துறைகள் இயங்கும் கட்டடங்கள் இருந்தன. கம்பீரமானவை. அவற்றையும் பார்த்தோம்.

**(2) காற்று மண்டல் - விண்வெளி அருங்காட்சியகம்:** மிகப்பெரிய ஸ்மித்தோனியன்[1] அருங்காட்சியகத்தில் நாட்டின் காற்று மண்டல இயக்கம்[2] பற்றிய அனைத்துத் தகவல்களும் அடங்கியுள்ளன. ரைட் சகோதரர்களின் (Wright Brothers) 1903-ன் பட்டம் (Fly), லிண்ட் பெர்கின் (Lindbergh) புனித லூயியின் ஆவி (The Spirit of St. Louis) போன்றவை; கோள்கள் பற்றிய ஆய்வு முறை, காற்று மண்டலத்தில் பறக்கும் வரலாறு, விண்வெளிப் பயணம் முதலியவை பற்றிய நிரந்தரக் காட்சிப் பொருள்கள் அவற்றுள் சில. பார்வையாளர்கள் வான ஆய்வகத்தில் புகலாம். அம்புலிப் பாறையைத் தொடலாம், அருங்காட்சியகக் கடையில் விண்வெளிவீரர் பனிப்பாலாடை வாங்கலாம்.

**பொருள்கள் எப்படிப் பறக்கின்றன ?** என்ற காட்சிப் பொருள் காற்று மண்டல இயக்கம் பற்றிய விதிகளை ஆய்கிறது; **விண்வெளிப் பந்தயம்** என்ற காட்சிப் பொருள் அரை நூற்றாண்டுக் காலம் அமெரிக்க ஐக்கிய நாடுகள் - இரஷ்யா இடையே நடைபெற்று வந்த விண்வெளிப்போட்டியைச் சுட்டிக் காட்டுகிறது; **வான் பயணம் நமது கதிரவ மண்டலவழிப் பயணம்** என்ற காட்சிப் பொருள் அருங்காட்சியகத்தின் வெளியே யெபார்சன் தெருவில் கதிரவ மண்டலப் பயணத்தை நடந்துகொண்டே பார்ப்பதாக அமைந்தது என்பன போன்றவற்றைக் கண்டு மகிழலாம்.

**சிறப்பு நிகழ்ச்சிகள்: 'விண்வெளி நாள்'** என்பது ஜான் கிளென் (John Glenn) என்ற விண்வெளி வீரர் நாள் முழுவதும் சிறப்பு நடவடிக்கைகளைக் கொண்டாடிக் கொண்டிருப்பார். மே-2; முற்பகல் 10 மணி முதல் பிற்பகல் 3 மணி வரை. **'சார்லஸ் ஏ லிண்ட்பர்க் நினைவுச் சொற்பொழிவு'** என்பது. ரீவ் லிண்ட்பெர்க் (பெண்) என்பார் மிகு புகழ்பெற்ற தமது தந்தையார் அட்லாண்டிக் மாக்கடலின் குறுக்கே தனிமையாகப் பறந்து சென்ற நிகழ்ச்சியை 75-வது ஆண்டு விழாவாகக் கொண்டாடுவதாகப் பேசுவது. மே-23: இரவு 8 மணி. இவற்றையெல்லாம் கட்டணம் இன்றி இலவசமாகக் கண்டு மகிழலாம்.

**லாக்ஹீட் மார்ட்டின் ஐமாக்ஸ்** (Lockheed Martin IMAX Theatre) என்ற விண்வெளி நிலையத்தில் **டாம் குரூய்ஸ்** (Tom Cruise) என்பார்

---

1 1846 இல் 500,000 டாலர் செலவில் ஏற்படுத்தப்பெற்ற ஸ்மித்தோனியன் நிறுவனம் உலகிலேயே மிகப்பெரிய அருங்காட்சியக complex ஆகும். இது ஜேம்ஸ் ஸ்மித்சன் (James Smithsan) என்ற பிரிட்டிஷ் அறிவியலறிஞரால் விருப்பார்வ ஆவணத்தின் மூலம் வழங்கப் பெற்றது. இதில் 16 அருங்காட்சியகங்கள் அடங்கியுள்ளன. இதில் தேசிய உயிர்க் காட்சிச் சாலையும் (zoo) அடங்கும். இவை மில்லியன் செய்திகளை (artefacts), மாதிரிப் பொருள்கள் உயிர்ப்பிராணிகளையும் கொண்டுள்ளன.

2. Flerodynamics 3. Exhibit 4. Space race

சொல்லிய முறையில் அமைந்த ஒரு புதிய 3டி படச்சுருள் (film) தினந்தோறும் பறப்பதற்கு! (To fly!) என்பதுடன் போட்டுக் காட்டப்பெறும். ஆல்பெர்ட் ஐன்ஸ்டைன் விண்வெளி ஆய்வு நிலையத்தில் (Albert Einstein Planetorium) ஒரு புதிய காட்சியில் (Show), **இன்ஃபினிட்டி எக்ஸ்பிரஸ்** (Infinity Express), ***எ வார்ப் ஸ்பீட் டூர் ஆஃப் தி யூனிவர்ஸ்*** (A warp speed Tour of the Universe) என்ற படங்கள் தினந்தோறும் முற்பகல் 10 மணி முதல் பிற்பகல் 5 மணி வரை 70 அடி குறுக்களவுள்ள ஒரு பெரிய கூண்டில் (dome) அமைத்துக் காட்டப்பெறும். கட்டணம் பெரியவர்கட்கு 7.50 டாலர்; சிறுவர்க்கு 6 டாலர்.

**(3) நாடாளுமன்றக் கட்டடம்:** இது காட்டப் பெற்றதை ஊர்தியிலிருந்தபடியே அனைவரும் பார்த்தனர். (படம் - 61)

**(4) இருப்பூர்தி நிலையம்:** கார்களும் வானூர்திகளும் உள்ள இக்காலத்தில் இருப்பூர்திகளுக்கு அதிகம் பயன் இல்லை. ஒன்றிரண்டு ஊர்திகளே ஓடுகின்றன. ஒருசில பயணிகள் இங்குமங்குமாய் மூட்டை முடிச்சுகளுடன் சிறுவர்களுடனும் நடமாடுவதை வண்டியிலிருந்தபடியே கண்டு களித்தோம்.

**(5) மேல்நிலை நீதிமன்றம்[5]:** நாட்டின் மிக உயர்ந்த நீதிமன்றம் இயங்கும் மிகவும் கம்பீரமான கட்டடம் இது. நீதியரசர்கள் ஆண்டில் அக்டோபர் முதல் ஜூன் வரை கூடுகின்றனர். விசாரணையைப் பொதுமக்கள் பார்க்கலாம். மன்றம் கூடாத நாட்களில் அரைமணி நேரம் இலவசப் பொழிவுகள் நடைபெறுகின்றன.

**(6) காங்கிரஸ் நூலகம்[6];** உலகிலேயே மிகப்பெரிய நூலகம் இது. காங்கிரஸுக்குப் பயன்படுவதற்காக 1800-ல் நிறுவப் பெற்றது. இது மூன்று கட்டடங்களில் 113 மிலியன் நூல்களையும் பொருள்களையும் கொண்டது. இதன் காட்சிப்பொருள் மண்டபங்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகள் வரலாற்றின் கருவூலமாகவுள்ள பொருள்களையும் விலைமதிப்பற்ற பண்டைய அச்சு வகைகளையும் கொண்டவை. நூலகம் பொருள்களை வெளியில் எடுத்துச் செல்ல எவருக்கும் வழங்குவதில்லை. ஆய்வாளர்கள் மட்டிலும் புரட்டிப் பார்க்கலாம். அரை மணிக்கு ஒருமுறை (மதியம் தவிர) விளக்கத்துடன் அனுமதிக்கப் பெறும். திங்கள் முதல் வெள்ளி வரை: முற்பகல் 10-30 மணி முதல் (மதியம் தவிர) பிற்பகல் 3-30 மணி வரை; சனியன்று முற்பகல் 10-30 முதல் பிற்பகல் 2-30 மணி வரை.

---

5. High Court  6. The Library of Congress

**(7) இயற்கை வரலாற்று அருங்காட்சியகம்[7]:** வரலாற்றுக்கு முற்பட்ட காலம் முதல் இன்றுவரை எல்லாவகையிலும் முறையிலமைந்த காட்சிப் பொருட்கள் பழங்கால மனித வரலாறு முதல் கடல்வாழ் பிராணிகள் துறை வரையில் உள்ள பொருள்களை எடுத்துக்கொண்டு விளங்குகின்றது. **டினாசுர் மண்டபம்** மிகப்பெரிய எலும்புக் கூட்டையும்[9] மற்றொரு எலும்புக்கூட்டையும்[10] கொண்டுள்ளது. பக்குவப்படுத்தப்பெற்ற பொருள் ஆய்வகம் பல்வேறு பக்குவப்படுத்தப்பெற்ற பொருள்களை ஒளிப்படங்கள் போன்றவற்றை விளக்கிக் காட்டுவதுபோல் அமைந்துள்ளது. ஆர்க்கின் பூச்சிக் காட்சிச்சாலை[11] உயிருள்ள பூச்சிகள் உணவு உண்ணும் முறைகளை விளக்குவதாக உள்ளது. இந்த அகம் இன்னும் பல்வேறுவகை விளக்கங்களைத் தரும் பகுதிகளும் அடங்கியுள்ளதாக உள்ளது.

**(8) அமெரிக்கன் வரலாற்று அருங்காட்சியகம்:** இங்குள்ள காட்சிப் பொருள்கள் தேசத்தின் வழிவழிச் சொத்தில்[12] அறிவியல், செயல் நுணுக்கத் துறை[13] பண்பாடு ஆகியவற்றைப் பதிவு செய்துள்ளன. எடுத்துக்காட்டு: 'இந்த சுவர்களுக்குள்ளே' என்பது ஒரு காட்சிப்பொருள். இது சாதாரண ஓர் அமெரிக்கன் எவ்வாறு வரலாறு படைத்தான், 18-ஆம் நூற்றாண்டின் ஒரு வீட்டைப் பற்றிய வரலாறு என்பவற்றை விளக்குவன. 'அமெரிக்கத் தலைவர்கள்' என்பது மற்றொரு காட்சிப்பொருள். இது வரலாற்றுப் புகழ்படைத்த கேட்கும் பார்க்கும் கருவி. இதன் மூலம் அமெரிக்கத் தலைவர்கள் பயன்படுத்திய பொருள்களைக் காட்டும் (வாஷிங்க்டனின் ஆடை, லிங்கனின் தொப்பி) இப்படிப் பல காட்சிப் பொருள்கள் அமைந்த காட்சி இது.

**(9) அமெரிக்க நாட்டு அழிக்கப்பெற்ற பொருள்களின் நினைவு அருங்காட்சியகம்[14]:** அழிக்கப்பெற்ற பொருள்களைக் காட்டும் ஒரே ஒரு நினைவுச் சின்னம் இது. அழிக்கப் பெறும் தன்மைகளை விளக்குவது. நினைவு கூர்மண்டபம்[15] நினைந்து பார்ப்பதற்காக அமைந்த ஓர் இடம். நிரந்தரக் காட்சிப் பொருள் ஒன்று ஹிட்லரின் நாஜி அரசு மக்களை அழித்த கொடுமையைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

**(10) தாமஸ் யெஃபர்சன் நினைவுச்சின்னம்[16]:** இது யெபர்சனின் 200-வது பிறந்த நாள் ஆண்டுவிழாவின்போது ஏப்பிரல் 13, 1943இல்

---

7. Museum of Natural History
8. Dinosaur
9. Tynaurosaurs rexcast skeleton
10. Pricerlatopscast Skeleton
11. Orkin Insect zoo
12. Heritage
13. Technology
14. U.S Holocaust Memorial Museum
15. The Hall of Remembrance
16. Thomas Jefferson Memorial

அமைக்கப்பெற்றது. ஜெஃபர்சனால் வியப்பார்வமுடன் பாராட்டப்பெற்ற பண்டைய பாணியைக் கொண்டது. இந்தக் கட்டடத்தின் உள்ளே 19-அடி உயரமுள்ள வெண்கலத்தாலான ஜெஃபர்சனின் சிலை ஒன்று உள்ளது. அங்குள்ள நான்கு எழுத்தோவியங்களினின்றும் எடுக்கப்பெற்ற சில முக்கியப் பகுதிகள் உட்புறச்சுவர்களில் பொறிக்கப் பெற்றுள்ளன. கட்டடத்தைச் சுற்றிலும் ஜப்பானின் செர்ரி மரங்கள் வளர்க்கப் பெற்றுள்ளன.

**(11) லிங்கன் நினைவுச் சின்னம்[17]:** முதல் தரமான கிரேக்க பாணியிலமைந்த 'கோயில்' இது. அமெரிக்கத் தலைவர் ஆப்ரஹாம் லிங்கனின் முகபாவனைகளை விளக்கும் பான்மையில் 19-அடி சலவைக் கல்லாலான சிலை ஒன்று அமைக்கப் பெற்றுள்ளது. இது **டேனியல் செஸ்டர் ஃபிரஞ்சு[18]** என்பவரால் நிறுவப் பெற்றதாகும். அவருடைய கெட்டிஸ்பாக் சொற்பொழிவும்[19], இரண்டாவது தொடக்க உரையும் உட்புறச்சுவர்களில் பொறிக்கப் பெற்றுள்ளன. பார்வையாளர்கள் மையம் நாள்தோறும் காலை 8 மணி முதல் நள்ளிரவு வரை திறந்திருக்கும்.

**(12) வெள்ளை மாளிகை[20]:** முதல் தலைவர் **ஜார்ஜ் வாஷிங்க்டனால்** தேர்வு செய்யப்பெற்ற இடத்தில் கட்டப்பெற்ற இந்த மாளிகை ஜான் ஆடம்ஸ் என்பார் (1800) தொடங்கி எல்லாத் தலைவர்களின் அலுவலக வாழ்விடமாக இருந்து வரும் இது 202 ஆண்டு பழைய கட்டடம். **ஜேம்ஸ் ஹோமன்[21]** என்ற ஐரிஸ் கட்டடக்கலை வல்லுநரால் திட்டமிடப் பெற்றது. இதில் வாழ்ந்த ஒவ்வொருவராலும் சேகரிக்கப்பெற்ற பல்வகைப் பொருள்களைக் கொண்டது. செவ்வாய் முதல் சனிவரை முற்பகல் 10 மணி தொடங்கி மதியம் வரை திறந்திருக்கும். இதன் 132 அறைகளைப் பார்வையாளர்கள் இலவசமாகப் பார்க்கலாம். வெள்ளை மாளிகை வரலாறு பற்றிய திரைப்படங்களும் காட்சிப் பொருள்களும் பார்வையாளர்கட்குக் காட்டப்பெறும். வெள்ளைமாளிகை பார்வையாளர் மையத்தில் (1450 பென்சில்வேனியா அவின்யு) நுழைவுச் சீட்டுகள் வழங்கப்பெறும்.

**(13) வியட்நாம் நீண்டகாலப் போர்த்துறைப் பணியாளரின் நினைவுச்சின்னம்[22]:** 'v' வடிவத்தில் அமைந்த இச்சின்னம் கறுப்புக் கல்லினால் ஆனது. வியட்நாம் போரில் மடிந்த அல்லது தவறிப்போன 58,000 வீரர்களின் பெயர்கள் இச்சின்னத்தில் பொறிக்கப் பெற்றுள்ளன. இச்சின்னத்தின் அருகில் **வியட்நாம் மகளிர் சின்னமும்** அமைந்துள்ளது.

---

17. Lincoln Memorial 18. Daniel Chester French
19. Gettysberg address 20. White House 21. James Homan
22. Vietnam Veterans Memorial

**(14) கொரியன் போரில் நீண்டகாலப் பணியாளரின் நினைவுச் சின்னம்**[23]: நாட்டின் தலைநகரில் நிறுவப்பெற்ற மிகப்புதிய நினைவுச் சின்னம். கொரியன் போரில் (1950 - 53) பங்குபெற்று உயிர்நீத்த அமெரிக்கப் போர்த்துறையைச் சார்ந்தவர்களைப் பற்றியது. போரில் கொல்லப்பெற்ற இவர்கள் தவறிப்போன அல்லது சிறைபிடிக்கப் பெற்றவர்கள் என்ற தலைப்பில் இவர்களின் பெயர்கள் காட்டப் பெற்றுள்ளன. முதல் ஐ.நா. போரில் பங்குபெற்ற 22 நாடுகளின் பெயர்கள் உயர்த்தப்பெற்ற ஒரு கருங்கல் மேடையில் பொறிக்கப் பெற்றுள்ளன. நாள்தோறும் நியமிக்கப்பெற்ற பணியாளர்களால் முற்பகல் 8 மணி முதல் நள்ளிரவு வரையிலும் திறந்து வைக்கப்பெறும்.

**(15) பழைய கல் இல்லம்**[24]: இது ஜார்ஜ் டவுன் இல்லம்; வாஷிங்க்டனில் மிகப் பழையது. 1755இல் கட்டப்பெற்றது. இது அக்காலக் குடியிருப்புகளுக்குச் சான்றாக அமைகின்றது. ஆங்கிலப் பாணியில் அமைந்த உள்நாட்டுக் காட்சியால் அமைந்த தோட்டம் சிறப்புடன் உண்ணும் இடமாகவும் 'அரட்டை அரங்கம்' நடத்துவதற்கு உகந்ததாகவும் திகழ்கின்றது.

**(16) ஃப்ராங்க்ளின் டி. ரூஸ்வெல்ட் நினைவுச்சின்னம்**[25]: வளைந்த நிலையில் அமைந்த இந்த நினைவுச் சின்னம் 7.5 ஏக்கரில் அருவிகளமைந்த உள்நாட்டு இயற்கைக் காட்சியுடன் கொண்டது. கலைப் பாங்கும் நடைபாதைகளையும் உடையது. 32-வது தலைவருக்கும் அவரது காலத்திற்கும் புகழாரம் சூட்டுவதாகவும் திகழ்வது. வெண்கலச் சிற்பங்களும்[26], ரூஸ்வெல்ட், அவர் துணைவி எலிநார், அவர் தம் செல்லப்பிராணியாகிய ஃபாலா என்ற நாய் இவர்களைச் சித்திரிக்கின்றன. 24 மணி நேரத்திலும் கிட்டுவனவாக உள்ளன.

**(17) ஃபோர்டின் காட்சி அரங்கம்**[27]: இங்குதான் ஆப்ரஹாம் லிங்கன் ஏப்பிரல் 14, 1865-இல் கொலை செய்யப் பெற்றார். இந்தக் காட்சியரங்கம் திரும்பவும் கட்டப்பெற்று, காட்சி புதுப்பிக்கப்பெற்று உள்நாட்டுப் போர்த்தலைவரின் உயிருள்ள நினைவுச் சின்னமாகப் பராமரிக்கப் பெறுகின்றது. இச்சின்னத்தின் அடிப்பகுதியிலுள்ள அருங்காட்சிப் பகுதி லிங்கனின் வாழ்க்கையின் பல்வேறு பகுதிகளை விளக்குகின்றது; ஆப்ரஹாம் லிங்கனுடையவும், அவர் குடும்பத்தினுடையவும் அவர் காலத்தவருடையவுமான கவர்ச்சிகரமான பொருள்களையும் கொண்டுள்ளது. இல்லமும் அருங்காட்சியகமும் நாடோறும் முற்பகல் 9 மணி முதல் மாலை 5 மணி வரை திறந்து வைக்கப் பெற்றிருக்கும். வியாழன் மதியத்திலும் ஞாயிறு 2 மணியளவிலும் மூடப்பெறும்.

---

23. Korean War Veterans Memorial
24. Georgetown house
25. Franklin D. Roosevelt Memorial
26. Bas - relief
27. Ford's Theatre

**(18) தேசிய உயிர்க்காட்சி பூங்கா[28]:** புல்வெளியாலமைந்த 163 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்த இப்பூங்கா உலகிலேயே மிக அருமையான உயிர்க்காட்சி பூங்காக்களில் ஒன்று. இது பல்வேறுபட்ட பிராணிகளையும் தாவர வகைகளையும் கொண்டது. பெரிய கறுப்பு-வெள்ளை சீனக்கரடி போன்ற **மெய்சியாங்[29]**, **டியான்டியான்[30]** என்ற பிராணிகள்தாம் கூட்டங்களை ஈர்க்கின்றன. இவைதவிர, ஒரு யானைக்கன்று, வெப்பமூச்சு விடும் **கோமொண்டோ டிராகன் ஜோடி[31]**, குட்டியுடன் கூடிய **சுமத்ரா புலிகள்[32]**, ஆகியவையும் தனிப்பட்ட சிறப்பான பிராணிகளாகும். காட்டெருமை போன்ற வடஅமெரிக்கப் புல்வெளி வாழ் பிராணிகளும் உள்ளன. கட்டடம் முற்பகல் 10 மணி முதல் மாலை 6 மணி வரையிலும் மைதானம் காலை 6 மணி முதல் இரவு 8 மணி வரையிலும் திறந்திருக்கும். கார்நிறுத்த 4.50 டாலர்.

**(19) உட்ரோ வில்சன் இல்லம்[33]:** தலைவர் வில்சன் 1921-ல் வெள்ளை மாளிகையினின்றும் வெளியேறி இந்த ஜார்ஜோனிய நகர் இல்லத்தில் வாழ்ந்தார். இதுதான் தலைநகரின் தலைவரின் ஒரே ஓர் அருங்காட்சியகமாகும். உணவு கொள்ளுங்கால் **வில்சன் தரிக்கும் மேல்சட்டை**, கால்ஃப் விளையாடும் தடி உட்பட பல்வேறு நினைவுப் பொருள்களின் சேகரிப்பும் இங்கு காட்சிக்கு வைக்கப் பெற்றுள்ளன. செவ்வாய் முதல் ஞாயிறுவரை முற்பகல் 10 மணி முதல் பிற்பகல் 4 மணி வரை திறந்திருக்கும். கட்டணம் பெரியவர்கட்கு 5 டாலர், முதியவர்கட்கு 4 டாலர். மாணவர்கட்கு 2.50 டாலர்.

**(20) ஆர்லிங்க்டன் தேசிய கல்லறை[34]:** பெரும்பாலும் இஃது அமைந்த நிலப்பகுதி முதலில் **ஜெனரல் ராபர்ட் இ. லீ[35]** என்பாரின் குடும்பத்தினருக்குச் சொந்தமானதாக இருந்தது. இவர்தம் உயர்ந்த பெருமைவாய்ந்த **ஆர்லிங்க்டன் இல்லம்** இன்றும் 612 ஏக்கர் சொத்தில் நிலையாக உள்ளது. இந்தக் கல்லறையில் ஆயிரக்கணக்கான போர்ப்பெரு வீரர்களும் **சேலஞ்சர்[36]** என்ற விண்வெளி சிறுதொலைக் கலன்களின் விமானிகளும் புதைக்கப் பெற்றுள்ளனர். **கென்னடி கல்லறை இடங்கள்** - இங்கு ஆதியும் அந்தமும் இல்லா சுடரால் அமைந்த கென்னடியின் கல்லறை அவர்தம் துணைவி **ஜேக்குலின் கென்னடி ஒனாஸிஸ்[37]**ஸின் கல்லறையினை

---

28. National Zoological Park
29. Mei Xiang
30. Tian Tian
31. Komondo dragon pair
32. Sumatran tigers
33. Woodrow Wilson House
34. Arlington National Cemetry
35. General Robert E. Lae
36. Challenger
37. Jacqueline Kennedy Onassis

அடுத்தும், அவர்தம் சகோதரர் **இராபர்ட்டின் கல்லறை**யின் அருகிலும் உள்ளது. அறியாதோரின் கல்லறை[38]களில் குறிப்பிட்டறிய முடியாத கொரிய போர்வீரர், ஒவ்வொரு உலகப்போரில் பங்கு கொண்ட வீரர் ஆகியோர் இங்கு புதைக்கப் பெற்றுள்ளனர். 1998 ஜூன் முதல் உடன்பாடுக்கு D.N.R இனம் கண்டபிறகு வியட்நாம் போரில் பங்கு கொண்ட போர்வீரரின் கல்லறை காலியாக உள்ளது. ஒன்றரை மணிக்கு ஒருவராக மாறி மாறி மதிப்பியல் காப்பாளர்[39] ஒருவர் கவனத்துடன் கல்லறையைக் காத்து வருகின்றார். நாள்தோறும் காலை 8 மணி முதல் மாலை 7 மணி வரை கல்லறை திறக்கப் பெற்றிருக்கும். பார்வையாளர்கட்கு இலவசம்.

**(21) தேசிய கலைப் பார்வைக் கூடம்[40]:** இதில் கிழக்கு, மேற்கு என்ற இரு பகுதிகள் அடங்கும். **கிழக்குப் பகுதி** ஒரே காலப்பகுதியைச் சார்ந்த உலகிலேயே மிக அருமையான அமெரிக்க ஐரோப்பிய பூச்சுப் பொருள்கள், சிற்பங்கள், மிக்க பேரொளியில் விளங்கும் பொருள்கள் அடங்கிய சேகரத்தைக் கொண்டது இப்பகுதி. **மேற்குப்பகுதி** 13 முதல் 20-ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த ஐரோப்பிய பூச்சுப் பொருள்கள், சிற்பங்கள் அடங்கிய சேகரத்தைக் கொண்டது. இவற்றில் அமெரிக்கக் கலைபற்றிய செய்திகளிலும் அடங்கும்.

**(22) வாஷிங்க்டன் நினைவுச் சின்னம்[41]:** நீண்ட சதுர வடிவமானதும் மேலே போகப்போகக் குறைந்துகொண்டே சென்று எகிப்திய சவக் கோபுரம் போல் முடிவடையும் உச்சியையுடைய 555 அடி உயரமுள்ள சலவைக் கல்லாலான இச்சின்னம் முதல் தலைவரான வாஷிங்க்டனின் நினைவாக நிறுவப் பெற்றது. உலகிலேயே இது மிக உயரமானது. இதனை நிறுவ 1833-இல் 'வாஷிங்க்டன் தேசிய நினைவுச் சின்ன சொசைட்டி' என்ற குழுவொன்று ஏற்படுத்தப்பெற்றது. பதினைந்து ஆண்டுகட்குப் பின்னர் ஓர்அடிக்கல் அமைக்கப்பெற்றது. பல்வேறு சிரமங்கட்கும் தாமதங்கட்குப் பிறகு இச்சின்னப் பணி நிறைவு பெற்றது. இதன் உச்சிவரையில் சென்று பார்க்க மின்ஏற்ற வசதி உண்டு; இறங்குவதற்கும் இதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம். 898 படிகளில் விரும்பினால் 190 நினைவுக் கற்களைக் கண்டு மகிழலாம். இவை உள்ளூர் அரசு, வெளிநாட்டு அரசு - இவர்களால் நன்கொடையாக வழங்கப் பெற்றவையாகும். இவற்றை இறங்கிப் பார்க்க விரும்புவோர் இங்குள்ள அலுவலர்களிடம் முன்னேற்பாடு செய்துகொள்ள வேண்டும். நாள்தோறும் முற்பகல் 9 மணி முதல் பிற்பகல் 5 மணி வரையிலும்;

---

38. Tomb of the Unknowns
39. Honour guard
40. National Gallery of Art
41. Washington Monument

வசந்த, கோடை காலங்களில் முற்பகல் 8 மணி முதல் நள்ளிரவு வரையிலும் திறந்திருக்கும். நினைவுச் சின்னத்தையொட்டி நாற்புறங்களிலும் சாய்வான பாதைகள் உள்ளன. நாம் தங்கியுள்ள இடத்தினின்றும் இவற்றின் மூலம் சின்னத்தை அடையலாம். கட்டணம் இல்லை. ஆனால் காலவரையறையைக் குறிப்பிட்டு நுழைவுச் சீட்டுகள் வழங்கப்பெறும். நுழைவுச் சீட்டு பெற்றவர்கள் மட்டிலுமே சின்னத்தினுள் அனுமதிக்கப் பெறுவர்.

இவற்றையெல்லாம் ஊர்தியினின்றும் இறங்கிப் பார்த்தால் ஒரு வாரம் தங்க வேண்டும். இவற்றைத் தவிர தலைநகரில் பார்க்க வேண்டியவை பல உள்ளன. இவற்றையெல்லாம் விடாமல் பார்க்க வேண்டுமானால் மேலும் ஒருவாரம் தங்க வேண்டும்.

ஊர்தியில் இருந்துகொண்டு இவற்றையெல்லாம் பார்த்து முடிப்பதற்கு பிற்பகல் 4.30 மணி வரை ஆயிற்று. உடன் கொண்டுசென்ற பகல் உணவு கொள்ளக்கூட நேரமில்லை.

> **மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்**
> **எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் - செவ்வி**
> **அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்**
> **கருமமே கண்ணாயி னார்**
>
> **- குமரகுருபரர் - நீதிமொழி விளக்கம் 53**

என்ற குமரகுருபரரின் பாடலை நினைத்துக்கொண்டோம். என் மகன் கார் நிறுத்தின இடத்திற்கு நடந்து சென்று காருடன் எங்களை அடைய அரை மணி நேரம் ஆயிற்று. 4.30 மணிக்குத் திரும்பினோம். வழியில் காரை நிறுத்தி 5 மணிக்கு 'பகலுணவு' உண்டோம். மீண்டும் 7-30 மணிக்கு உணவு விடுதிகள் உள்ள ஓரிடத்தில் காரை நிறுத்தி காஃபி அருந்தினோம். கார் மணிக்கு 65 கல் வேகத்தில் வந்துகொண்டிருந்தது. 9 மணி சுமாருக்கு ஊரை நெருங்கிவிட்டோம். இரவு நேரம்; போக்குவரத்து நெருக்கடி. எங்கள் வண்டி சுமார் ஒரு மணி நேரம் ஆமை வேகத்தில் நகர்ந்து கொண்டிருந்தது. ஏதோ ஒரு வகையில் நெருக்கடியைச் சமாளித்துக்கொண்டு இரவு 10 மணிக்கு இல்லம் வந்தடைந்தோம். கொண்டுசென்ற 'ஆற்றுணாவை' இல்லத்தில்தான் உண்ண வேண்டியதாயிற்று.

# 10. நிறைவுரை

ஜூன் 23-இல் (2002) தாயகம் - தமிழகம் - திரும்புகின்றேன். என் மகன் நிரந்தரமாகவே இங்கு வந்து தங்குமாறு வற்புறுத்துகின்றான். அவனும் மிகவும் குளிர்ப்பகுதியாக இருக்கும் நியுயார்க் மாநிலத்தை விட்டு அரிசோனா மாநிலத்துக்கு குடியேறுகிறான். (ஜூலை 9 முதல்). அங்கு தமிழகச் சூழ்நிலை (வெப்பம்) இருக்கும் என்றும், மருத்துவ வசதி அமெரிக்காவில் இருப்பதுபோல தமிழகத்தில் இல்லை என்றும் 19 எண்ணுள்ள தொலைபேசியை இயக்கினால் நோயாளர்க்குரிய பேருந்து உடனே வந்து அனைத்தையும் கவனிக்கும் என்றும் கூறுகின்றான். 'முறைவழிப்படும் ஆருயிரை' - 'உயிரீரும் வாளை' - மருத்துவத்தால் காப்பாற்ற முடியுமா ? என்ற வினா எழுகின்றது. ஏதோ அவசரத்துக்கு தமிழகத்தில் - நான் வாழும் சென்னை அண்ணா நகரில் கிடைக்கும் மருத்துவ வசதி போதும் என்று எனக்குத் தோன்றுகின்றது. தவிர, அமெரிக்காவில் வந்து - யாதொரு பணியுமின்றி - "உப்பிற்கும் காடிக்கும் கூற்றாக" (குறள் 1050) இருப்பது என் இயல்பிற்குப் பொருந்தாத ஒன்று.

இளமை முதல் இன்று வரை (அகவை 88க்கு புகும் நிலை) சுறுசுறுப்பாகப் படிப்பதும் எழுதுவதும், ஆர்வத்துடன் இருப்பவர்களுக்கு கல்வி புகட்டுவதும் ஆய்வுக்கு வழிகாட்டுவதும் - இத்தனைக்கும் மேலாக 'பணியே பரமன் வழிபாடு'[1] என்றும், அது எனக்குப் 'பண்டே பரமன் பணித்த பணிவகையே' (திருவாய் 10.4:9) என்றும் இடைவிடாது எண்ணியிருக்கும் எனக்கு அமெரிக்க வாழ்வு எப்படிப் பொருந்தும் ? 'புத்தம் புதிய நூல்கள் தாம்' தமிழ் மொழிப் பன்முக வளர்ச்சிக்கு இன்றியமையாதவை என்பதும், அதுவே என் பேச்சாகவும் மூச்சாகவும் இருக்கவேண்டும் என்ற கொள்கையைக் கடைபிடித்துக்கொண்டு வாழும் எனக்கு தமிழக வாழ்வுதான் மிகவும் பொருத்தம் என்பதும் வெள்ளிடை மலை.

என் எளிய வாழ்வுக்குப் போதுமான ஊதியமும், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத் துறையில் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியராகப் பணியாற்றுவதால் கிடைக்கும் சிறு ஊதியமும் (அது நின்றது) எனக்குப் போதுமானவை. '**போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து**' என்பது தமிழ் மூதாட்டியின் பொன்மொழியல்லவா ? ஒருவகையில் **புத்தர்**

1. Work is worship

**பெருமானின்** தெய்விக வாக்கின் மறுபக்கமும் அதுதானே! என் வாழ்வில் அறிவுடைமையமைவதற்கு செய்த முயற்சியைப் போல் செல்வம் திரட்டுவதில் செய்யவில்லை. திருப்பதியில் இப்படிப்பட்ட முயற்சியின்மையினால் சில ஆயிரம் வெண்பொற்காசுகள் இழந்தமை நினைவிற்கு வருகின்றது.

சிறு வயதில் கற்கும்போது '**அறிவு ஆற்றலைத் தருவது**'[2] என்ற பொன்மொழிதான் கல்லூரியில் அறிவியல் பாடத்தை தேர்ந்தெடுக்கச் செய்தது. இதுவே திருப்பதியில் பணியாற்றியபோது இடர்களுக்கிடையில் அறிவியல் துறையில் இரண்டு மூன்றாண்டுகள் தங்க நேரிட்டபோது உயிரியல் அறிவியல்களை[3] கற்கத் தூண்டியது. அத்துறைகளில் பணியாற்றிய ஆந்திரத்தைச் சார்ந்த பேராசிரியர் ஒருவரும், தமிழகத்தைச் சார்ந்த பேராசிரியர் ஒருவரும் என்னுடைய ஆர்வத்தைக் கண்டு மிக்க விருப்பத்துடன் உதவினார்கள். அடிக்கடி எழும் ஐயங்களை அகற்றினார்கள். இதனால் அத்துறைகளில் அடிப்படை அறிவு ஏற்பட்டு அத்துறைகளைத் தானாகக் கற்கும் நிலை ஏற்பட்டது. பிற்காலத்தில் வள்ளுவத்தில் ஈடுபாடு கொண்டு கற்கும்போது '**அறிவு அற்றம் காக்கும் கருவி**' (குறள்-**421**) என்ற பொய்யாமொழியாரின் பொன்மொழி ஒரு மின்னொளியைக் காட்டி என் மன நிலையில் உறுதி ஏற்படச் செய்தது. இன்றுவரை அறிவியல்துறை நூல்களைக் கற்பதும் என் இரண்டாம் இயல்பாக[4] அமைந்தது. பொது மக்களுக்கு எட்டும் முறையில்தான் அறிவியல் நூல்களிலுள்ள பல சமயக் கருத்துகளைப் பாமரர்களும் அறியும் வண்ணம் எளிமையாக்கும் முயற்சியில் ஈடுபட்டு வருகிறேன். இப்படியெல்லாம் தமிழ்ப்பணி, சமயப்பணி என்ற தெய்வப் பணிகளை அமெரிக்காவில் இருந்துகொண்டு செய்ய முடியுமா?

முறையாக ஊதியம் பெற்று பணியாற்றியதிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு பல கௌரவப் பணிகள் வந்தன. அவற்றிலெல்லாம் மிக்க ஆர்வத்துடன் பணியாற்றி பல்லோர் வியக்கும் வண்ணம் பல்வேறு துறைகளில் பொதுவிருப்ப நூல்களைப் படைத்து தமிழ்மொழியை வளமாக்கி வருகின்றேன். இப்பணிகளில் என் தீயூழால் இடர்கள் ஏற்பட்ட பொழுதெல்லாம், மனத்தூய்மையுடன் வினைத்தூய்மையும் இருந்தமையால் என் இதய கமலத்தில் நிலையாக எழுந்தருளியிருக்கும் **விநாயகப்பெருமானும் 'வேங்கடமேய விளக்கும்', 'தண்டமிழ் முருகனும்'** - மாமனும் மருகனும் - என் முன்னின்று அவற்றை நீக்கி எனக்கு உதவுகின்றனர் என்பது என் அதிராத நம்பிக்கை.

சென்னைப் பல்கலைக் கழக தமிழ் இலக்கியத்துறையிலும், மரபுவழிப் பண்பாட்டுத் துறையிலும் பணியாற்ற வாய்ப்புகளையளித்த இறைவர்கள்

---

2. Knowledge is power 3. Biological Science 4. Second nature

அவ்வாய்ப்புகளில் பணி குந்தகமின்றி நடைபெற அருள்வார்கள் என்றும், அச்சேறும் நிலையில் இருக்கும் 'திருப்பாவை விளக்கம்', 'ஐந்து இரகசியங்கள்', 'அர்ச்சிராதி' என்ற மூன்று கைப்படிகள் அச்சேறி வெளிவரவும், 'பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய சுவாமிகள்' என்ற நூல் வெளிவரவும் அவர்களின் அருள் கிட்டும் என்றும் நம்புகின்றேன். இந்நூல்களைப் படிக்கும் தமிழன்பர்களும் தமிழ் ஆர்வலர்களும் என் சார்பாக அவ்விறைவர்களை வாழ்த்தவேண்டும் என்பது என் விண்ணப்பம். இவையெல்லாம் முற்றுப்பெறும் வரை என் நுகர்வினை நீண்டிருக்கும் என்பதும் என் உறுதியான நம்பிக்கை.

# பின்னிணைப்பு - 1

## பயன்பட்ட நூல்கள்


| | | |
|---|---|---|
| ஆழ்வார்கள் | : | ***நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்*** *(கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு)* |
| | : | ***நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்*** *(மர்தே ராஜம் பதிப்பு)* |
| இராமலிங்க அடிகள் | : | ***திருவருட்பா*** *(இராமலிங்கனார் பணிமன்றம், சென்னை -32)* |
| எல்லப்ப நாவலர் | : | ***அருணாசல புராணம்*** *(ராய.சொ. பதிப்பு)* |
| கச்சியப்ப சிவாச்சாரியார் | : | ***கந்தபுராணம்*** |
| கம்பர் | : | ***கம்பராமாயணம்*** - வை.மு.கோ. பதிப்பு |
| சுப்பு ரெட்டியார், ந. | : | ***வாழையடி வாழை*** *(மணிவாசகர் நூலகம்)* |
| | : | ***இல்லறநெறி*** *(தமிழ்ப் புத்தகாலயம், திருவல்லிக்கேணி)* |
| | : | ***வாழ்க்கைக் குறிப்பு*** *(81- வது ஆண்டு விழா வெளியீடு)* |
| | : | ***சடகோபன் செந்தமிழ்*** *(பாரி நிலையம், சென்னை - 108)* |
| | : | ***பரகாலன் பைந்தமிழ்*** *(கழகம், சென்னை- 18)* |
| | : | ***வைணவ உரை வளம்*** *(கழகம்)* |
| | : | ***முத்திநெறி*** *(கழகம்)* |
| | : | ***ஆழ்வார்கள் ஆராஅமுது*** *(கழகம், சென்னை - 18)* |
| சேதுராமன். வா.மு. | : | ***அமெரிக்கா - கவிதை தொகுப்புகள்*** |
| திருவள்ளுவர் | : | ***திருக்குறள் - பரிமேலழகர் உரை*** *(கழகம்)* |
| பாரதியார் | : | ***மாபெரும் கவிஞர் பாரதியார் கவிதைகள்*** *(ஐந்திணை வெளியீடு)* |

# பின்னிணைப்பு - 2

Invitation for a discourse



**THE HINDU TEMPLE SOCIETY OF NORTH AMERICA**
Śrī Mahā Vallabha Ganapati Devasthanam
45-57 Bowne Street Flushing, NY 11355
Tel: 718-460-8484 - Fax: 718-461-8055
Email: webmaster@nyganeshtemple.org



## Discourse in Tamil

By:

**Dr. N. Subbu Reddiar**

**Topic: PHILOSOPHY OF RELIGION - COMPARATIVE VIEW**

Dr. N. Subbu Reddiar -

- Professor Emeritus in the Department of Tamil Literature, Madras University (Life)
- Director, Insititute of Traditional Cultures of South and South East Asia.
- Author of more than 130 books

**Saturday, May 11th, 2002**
**At 5:00 PM**
**Location: Temple Basement**

**ALL ARE INVITED**

FOR FURTHER INFORMATION PLEASE CONTACT THE TEMPLE (718) 460-8484

# பின்னிணைப்பு - 3

# A Profile of Dr. N. Subbu Reddiar

**Personal:**

Date of Birth : August 27, 1916

Education : B.Sc. (Chemistry), L.T., Vidwan in Tamil, B.A., M.A. in Tamil, Ph.D. (Philosophy in Vaishnavism)

Professor Emeritus in the Department of Tamil Literature, University of Madras (Life), Chennai.

**Qualifications:**

The author has a brilliant academic career and has taken University degrees - B.Sc., M.A., L.T., Vidwan in Tamil and Ph.D. in Philosophy and Vaishnavism with class and rank. He is the only person in Tamil Nadu to write books on seven different faculties and has produced neary 130 numbers. He is a versatile genius and has produced books as detailed below.

**A: Publications**

| | | |
|---|---|---|
| 01. | Educational Technology | 6 |
| 02. | Literature | 19 |
| 03. | Religion & Philosophy | 35 |
| 04. | Literary Criticism | 22 |
| 05. | Popular Science | 22 |
| 06. | Biography & Autobiography | 15 |
| 07. | Research | 6 |
| | **Total** | 125 |

He has not stopped writing and is continuing. At present five books are being printed.

**His Major Works:**

**01.** Kavithai Anubhavam (1961) (out of print)
**02.** Tholkappiyam Kaattum Vaazhkkai (3rd Edition - 1988)
**03.** Akathinaik-Kolkaikal (1981)
**04.** Muthineri (1982)
**05.** Puthukavithai - Pokkum Nokkum (1983
**06.** Saiva Samaya Vilakku (1984) (out of print)
**07.** Vainava Uraivalam (1985)

08. Vaazhaiyadi Vaazhai (1988)
09. Paattut-tiran (1988)
10. Maanikka Vaasakar (1989)
11. Sadakopan Senthamizh (1989)
12. Malarum Ninaivukal (1989)
13. Ninaivuk-kumizhkal, Vol. I (1988); Vols. II & III (1989); Vol. IV (1990)
14. Vadavenkatamum Thiruvenkatamum (1992)
15. Parakalan Painthamizh (1992)
16. Vainava Selvam (1995) in Two volumes
17. Kavingar Vaaliyin Avatharra Purushan - Oru Mathippeedu (1997)
18. Paaventhar Paattuth-Tiran (1999)
19. Paandiyan Parisu - Oru Mathippeedu (1997)
20. Thiruppavai Vilakkam (1997)
21. Arcliraathi (1999)
22. Ainthu Rakasyangal
23. Sacred Trips to Sacred Vaishnavaite Temples (6 volumes)
24. Illara Neri (1999, 3rd Edition)
25. Vainavamum Tamilum (1998)
26. Kavingar Vaaliyin Paandavar Boomi - A Critical Evaluation (2001)
27. Saivamum Tamilum (2001)
28. Saiva Ilakiyanggal (2001)
29. Thirukkural Thelivu (2001)

**Prizes, Awards & Honours**

**(A) Prizes**

01. Eight books have secured cash prizes from the Government of Tamilnadu
02. One Book (Science) has secured cash prize from University of Madras
03. One book has secured cash prize from Tamil Academy, Chennai

**(B) Awards & Honours**

01. **"Arinkalaikan"** by Kunrakkudi Thiruvannamalai Atheenam with a Gold Medal and a shawl for his scientific publications in Tamil (1969)

02. Much coveted 'Thiru-Vi-ka-Award' (cash) of Rs. 10000, Citation, Certificate and Shawl from the Government of Tamilnadu (1987)

03. The title **"Tamil Chemmal"** by Madurai Kamaraj University with Gold medal, Citation, Certificate and a shawl (1991)

04. The title **"Sri Sadagopan Ponnadi"** by Sri Vaishnava Sabha of Pannurutti in South Arcot Vallalar Dist in recognition of his contribution for spreading Vaishnavism and Vaishnavaite literature (1993)

05. **Raja Sir Muthiah Chettiar Birth Day Award** of Rs. 50000 in recognition of his contributions for the development and enrichment of Tamil Literature (1994)

06. **Sri Ramanujar Award** of Rs. 25000 with Citation and shawl and a beautiful Momento for his well merited contribution for the development and propagation of Vaishnavism and Vaishnavaite Literature (1996)

07. **Madras Kamban Kazhagam Award** of Rs. 1000 for his service in spreading Kamban's Epic (1996)

08. Madurai Kamaraj University has conferred **D'Litt** (Honorary) Degree for his over-all contribution and his services for Tamil language & Literature (1999)

09. **The Seva Ratna Award:** The Centurian Trust formed in memory of Kanchi Periyavar has conferred this award for his service in the field of Religion and Philosophy (1996)

10. **Kalaimamani** title was conferred by Iyal Isai Nataka Manram (Govt of Tamilnadu) in recognition of his contribution to Iyal Branch of Tamil (1999)

11. **Vainava Ilakkiya Mamani** title was conferred by Manitha Neya Iyakkam, Koyambedu, Chennai (2001)

12. **C.P. Athithanar Tamil Mootharignar Award** (Rupees one lakh) by Dina Thanthi Trust (2001)

13. **Aaaivu Tamil Arasu** by Tirumanthiram Conference (2001)

14. **Podumarai Chemmal** by Guru Palani Atheena, Thirukkural Peedam, Mathuranthakam (2002)

15. **'Tamil Vaakai Chemmal"** by Salem Tamil Sangam (with Rs. 10,000/-) on Pongal Day (18 January, 2003)

✪✪✪

# இந்நூலாசிரியர் பற்றி...



பிறப்பு : 27.08.1916

**89 அகவையைக் கடந்தவர்**

**பணிகள்**

1. 9 ஆண்டுகள் உயர்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர் (1941 50).
2. 10 ஆண்டுகள் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் துறைத் தலைவர் (1950 60).
3. திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் (1960 78).

**ஓய்வுக்குப் பின்னர் பணிகள்**

1. 15 திங்கள் தமிழ்க் கலைக் களஞ்சிய முதன்மைப் பதிப்பாசிரியர்.
2. 18 திங்கள் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் காஞ்சித் தத்துவ மையம் மதிப்பியல் பேராசிரியர்.
3. சென்னைப் பல்கலைக் கழகம் தமிழ் இலக்கியத்துறை வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்.

**பிற பணிகள்**

திருப்பதி, மதுரை, பெங்களூர், மைசூர், திருவனந்தபுரம், சென்னைப் பல்கலைக் கழகங்களில் பல்வேறு பணிகள் பொறுப்புகள்.

**பெற்ற பரிசுகள்:** 14 நூல்கள் பரிசு பெற்றவை.

**பெற்ற விருதுகள்:** பத்துக்கு மேல் பல்வேறு நிறுவனங்களின் மூலம்.